# மனோதத்துவமும் மனித வாழ்க்கையும்




ஆக்கியோர்:

புலியூர்க் கேசிகன்

R. சண்முகம்




83-A, பீட்டர்ஸ் ரோடு,
இராயப்பேட்டை,
சென்னை - 600014.

# வாசகர்களுக்கு...

அணுமுதல் அண்டகோளங்கள் வரையும் ஒரு திட்ட மிட்ட விதிப்படியேதான் இயங்கிவருகின்றன. சின்னஞ்சிறு கிருமி முதலாக, மிகப்பெரிய திமிங்கிலம் வரையும் இந்த விதிகளுக்கு உட்பட்டே வாழ்கின்றன. புல்லிலிருந்து பெரிய ஆலமரம் வரையுள்ள தாவரங்களும் இந்த விதிகளுக்கு உட்பட்டே யுள்ளன.

இப்படி எல்லாவற்றையும் இயக்கிவருகின்ற இயற்கை யின் திட்டமிட்ட விதிமுறைகளுக்கு மனிதசாதியும் விதி விலக்கல்ல. ஆனுல், மனிதசாதி ஓர் அற்புதமான படைப்பு! அதன் ஒவ்வொரு ஜீவனையும் தனித்தன்மையுடன் இயற்கை படைத்துள்ளது.

மனிதக் குழந்தையை எடுத்துக் கொள்ளுங்கள். பசியைத் தவிர எந்த உணர்வுமே இல்லாமல் தான் அது பிறக்கிறது. இரண்டு ஆண்டுகளுக்குள் எவ்வளவு அறிவை யும் வளர்ச்சியையும் அது அடைந்துவிடுகின்றது! அதன் பூரணவளர்ச்சிக்கு வேண்டியன எல்லாம், பிறக்கும்போதே அதனிடம் மிகமிக நுட்பமாக அமைந்துள்ளன. அதன் வளர்ச்சிதான் காலத்தோடு சேர்ந்து மலர்ந்து முழுமை அடைகின்றது.

ஒவ்வொருவரிடமும் அளவற்ற சக்தியை இயற்கை பொதிந்துவைத்தே படைக்கின்றது. அதை விழிப்படையச் செய்தாலே போதும். எல்லாருமே சர்வ சக்தி வாய்ந்தவர் களாக உயர்ந்துவிடலாம். 'தன்னை அறிதல்' என்பது இது தான். 'சீவன்' தன் சக்தியைப் புறத்தே சிதறவிடாமல் உள்ளேயே ஒழுங்குபடுத்திஞல் 'சிவன்' ஆகப் பரிணமிக் கிறது! வாழ்வாங்கு வாழ்பவன் அவனே! அவனைத்

தெய்வத்துள் சேர்த்துக் கருதவேண்டும் என்கிறது வள்ளுவம்.

'மனோசக்தி' என்னும் நுட்பமான சக்திதான் இது. கண்ணுக்குப் புலனாகாத அணுவுக்குள் அடங்கிக் கிடக்கும் சக்தி, அணுவைப் பிளந்ததும் அகிலத்தையே நடுங்கச் செய்யும் மகாசக்தியாக வெளிப்படுவதை அறிவோம். 'மனோசக்தியும்' இப்படிப்பட்டதுதான்! அதை உணரத் தொடங்கிவிட்டால், அது மிகப்பெரும் பிரவாகமாகப் பொங்கி, மனிதனை உயர்த்துகின்றது!

மனித வாழ்க்கையை மனம் என்னும் ஒன்று எப்படி எல்லாமோ ஆக்கியும் அழித்தும் திருவிளையாடல்களை நடத்தி வருகிறது! மனத்தை நமக்கு வசப்படுத்தினால் நாம் விரும்பும் காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம். மனம் என்றால் என்ன? அது சடப்பொருளா? சூட்சமப்பொருளா? அதன் வடிவம் நிறம் குணம் என்னென்ன? அது எப்படிச் செயல்படு கிறது? அதை எந்த வழிகளால் கட்டுப்படுத்தலாம்? எந்த முறைகளால் நமக்கு உதவுகின்ற மகாசக்தியாக மாற்றிக் கொள்ளலாம்? இவற்றை அறிய விரும்புவீர்கள். இந்த விருப் பத்தை ஓரளவுக்கு நிறைவேற்றவே இந்த நூல் வெளி வருகின்றது. மனம் என்பதைப்பற்றி நம்மால் உணர முடி கின்றது. அதன் தீட்சணியங்களையும் கோளாறுகளையும் நம்மால் புரியமுடிகின்றது. அது எங்கே, எப்படி இருந்து கொண்டு இந்தக் காரியங்களை எல்லாம் செய்கிறது என்பது தான் நமக்குப் புரியாத, நம்மால் எளிதாக அறியமுடியாத, பரம இரகசியமாக இருந்து வருகிறது.

சூரிய ஒளி வெண்மையாகத் தோன்றுகிறதே! முப் பட்டைக் கண்ணாடி வழியாக ஒளிக்கதிரைச் செலுத்திப் பாருங்கள். அற்புதமான ஏழுவண்ணங்கள் நமக்குப் பரவச மூட்டுகின்றன. மனத்தின் சக்தியையும் ஊனக்கண்ணாலும் சாதாரண அறிவாலும் காணமுடியாது. அதற்குச் சில உபகரணங்கள் வேண்டும்; சில முறையான பயிற்சிகள்

வேண்டும். வெளியே செல்லும் நினைவை உள்ளே செலுத்தி, மனம் என்னும் மகாசக்தியைத் தினமும் முயன்று தேட வேண்டும். தேடத்தேட அந்தச் சக்தி கொஞ்சங்கொஞ்ச மாக நமக்குத் தன்னைப்பற்றி உணர்த்தும். நமக்கு அந்த அளவில் சக்திப் பெருக்கத்தையும், வெற்றியையும் அது நிச்சயமாகத் தரும்!

நம் எண்ணம் செயல் பேச்சு உடல் எல்லாமே மனத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டதுதான். இதை உணர்ந்தால்,மனம் நம் வாழ்வுக்கு அடிப்படை என்பதும் தெளிவாகப் புரியும். மனம் வேறு என்று நினைப்பதால்தான் தோல்விகளும் துன்பங்களும் நம்மைச் சூழ்ந்து வருத்துகின்றன.

மனம் என்பது மூளை என்னும் உறுப்பா என்ருல், மனக் கோட்டையில் நுழையும் வாசலாக மட்டுமே மூளை விளங்கு கின்றது. உடலின் எண்ணற்ற கோடிகோடியான உயிரணுக் களும், ஒரு திட்டவட்டமான விதிமுறையோடுதான் இயங்கி வருகின்றன. அவற்றின் செறிவான உடலும் முறைப்படி தோன்றி வளர்ந்து கழிந்து வருகின்றது. அந்த உடலோடு சேர்ந்து இன்பதுன்பங்களை அநுபவிப்பதுபோலக் காட்டிக்கொண்டு, தனித்து நிற்பதுதான் 'உயிர்' என்பது.

இந்த உயிருக்கும் மனத்துக்கும் இணைபிரியாத நட்பு இருக்கின்றது. உயிர் மனமாகிறது; மனமே உயிராகின்றது. எது உயிர், எது மனம் என்று பிரித்தறிய நம்மால் கொஞ்ச மும் இயலவில்லை.

சிவம் என்பதும் சக்தி என்பதும் சேர்ந்து சிவசக்தியாகி விளங்குவது போலவே, மனமும் உயிரும் ஒன்ருய்க் கலந்து 'மனோசக்தி' தோன்றுகின்றது. உயிர் சிவமானுல் மனம் சக்தியாக விளங்குகின்றது.

மனத்தின் மகா சக்தியானது அபரிமிதமானது! அளவற்றது! என்றும் வற்ருத ஜீவநதிபோன்றது! சதா ஊற்றெடுத்துப் பெருகிவரும் தன்மை உடையது!

ஒருவனை உயர்த்துவதும், ஒருவனைத் தாழ்த்துவதும்—ஒருவனை அறிஞனாக்குவதும், ஒருவனை முட்டாளாக்குவதும்—ஒருவனை வீரனாக்குவதும், ஒருவனைக் கோழையாக்குவதும்—ஒருவனைப் போகபுருஷனாக்குவதும், ஒருவனை முற்றும் துறந்த முனிவனாக்குவதும்—ஒருவனை ஆண்டியாக்குவதும், ஒருவனை அரசனாக்குவதும்—எல்லாமே இந்த மனத்தின் செயல்தான்! போகபுருஷனான புத்தனைத் துறவிலே இன்பங் காணவைத்ததும் மனந்தான்! மகா வல்லமையுள்ள இராவணனைச் சீதையைத் தூக்கிப்போகச் செய்து அழிவைத் தந்ததும் மனந்தான்! பந்தம், பாசம், உறவு, நட்பு, ஒழுக்கம், நீதி, நேர்மை எல்லாம் மனமிருந்தால்தான் உண்டு; மனம் கெட்டால் இவை எதுவுமே கிடையாது.

உடல் அவஸ்தைகள் மனத்தைத் தமக்குக் கட்டுப்படச் செய்து ஆட்டம் போடுகின்றன. இதன் விளைவாக உடலும் கெடுகிறது, மனமும் கெடுகிறது, உயிரும் ஓடிவிடுகிறது!

ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டெரித்துத் தூங்காமல் தூங்கிப் பெறுகின்ற தியானநிலையிலே மனமும் உயிரும் பூரண ஒளியுடன் பிரகாசிக்கின்றன. அபரிமிதமான அந்த ஞானப்பிரகாசம் உடலையும் புனிதமாக்குகின்றது. சர்வ சித்திகளும் உண்டாகி விடுகின்றன.

இப்படியான மனத்தின் மர்மமான இயக்கங்களை விளக்குவதற்குப் பல நூல்கள் எழுதியாக வேண்டும். இந்தப் புத்தகம் அதன் அடிப்படை நிலைகளைமட்டுமே எளிய தமிழில் எடுத்துச்சொல்ல முயல்கின்றது. மேல்நாட்டு அறிஞர்கள், 'அமானுஷ்ய சக்தி' உண்மை என்று கண்டறிந்தவுடன், நம் மக்களும் அதைப்பற்றி அறியும் ஆவலைப் பெற்றுவருகிறார்கள். மனம் மூளையின் மூலமாக அதன் பல்வேறு பகுதிகளிலும் நின்று எவ்வாறு செயல்படுகின்றது என்பதையும், குழந்தை மனம் எப்படி எப்படியெல்லாம் வளர்கிறது, வளரவேண்டும் என்பதையும், இந்தப் புத்தகத்திலிருந்து நீங்கள் கற்றுக் கொள்ளலாம். மனோதத்துவத்தை அறிவியலறிஞர்களும்

மருத்துவ மேதைகளும் ஏற்கும்படியான பெருஞ்செயலைச் செய்தவர் அறிஞர் ப்ராய்டு ஆவார். அவருடைய பணியும் வாழ்வும் பற்றியும் இந்த நூல் குறிப்பிட்டு, அந்த ஞானிக்கு நன்றிக் கடன் செலுத்த முயலுகின்றது.

மேல் நாட்டு மேதைகளும் பாரத நாட்டு முனிவர்களும் மகா ஞானிகளும் அரும்பாடுபட்டுக் கண்டுபிடித்த அரிய உண்மைகள் இதன்மூலம் எடுத்துக் கூறப்படுகின்றன.

உங்களிடமே இருக்கும் மகாசக்திகளை நீங்களும் அறிந்து பெருமையும் சிறப்பும் பெறுவதற்கு ஒரு தூண்டுதல் வேண்டும். அப்படித் தூண்டும் ஒரு முயற்சிதான் இந்த நூல். வாசகர்கள் பயன்பெற்றார்கள் என்றால், அதுவே நாங்கள் அடைகின்ற பெரும்பயனாக விளங்கும்.

இந்த நூலைப் படித்து அமைதியாகச் சிந்தியுங்கள். மனத்தை ஒருமுகப்படுத்துங்கள்—வாழ்க்கையை உயர்வாக அமைத்துக் கொள்ளுங்கள் !

இந்த நூலை மிகவும் கருத்துடன் உருவாக்கியவர் ஆசிரியர் R. சண்முகம் அவர்கள்தான். அதன்மேல், சில பல புதுக்கியும் சேர்த்தும் புத்தகவடிவுக்குக் கொண்டுவந்த பணியே என்னுடையதாகும். அந்தவகையில் யான் பெற்ற பயன் மிகப் பெரிது; அந்தப் பயன் வாசகர்களுக்கும் கிடைக்கவேண்டும் என்பதே என் விருப்பம் ஆகும்.

— புலியூர்க் கேசிகன்

# பதிப்புரை

'மனம்' என்ருல் என்ன என்பது சுவையான ஆனல் சிக்கலான விஞ! இந்த விஞவுக்குத் தீர்க்கமாக விடை கண்டுபிடிக்க உலகமெங்குமுள்ள உளவியல் மேதைகள் தங்கள் சிந்தனைத்திறன் முழுவதையும் செலவிட்டு முயன்று வருகிருர்கள்.

மனிதனுக்குக் கடவுள் அளித்த அருட்பிச்சை இந்த 'மனம்'. சிந்தனைக்கு அடித்தளம் அமைப்பது இந்த 'மனம்'. பிற ஜீவராசிகள் இந்த மனத்தைச் சரியாக உபயோகிக்க அறிந்திருக்கவில்லை. மனிதன் மட்டுமே அறிவிஞல் பல செயல்களைச் செய்கிருன். அதஞல்தான் மனிதன் மற்ற ஜீவராசிகளைவிட உயர்ந்தவன் என்று கருதப்படுகிருன்.

இத்தகைய சிறப்புவாய்ந்த 'மனம்' பற்றிய விரிவான ஆராய்ச்சியினையும், மனிதனுக்கும் மனத்துக்கும் உள்ள தொடர்பினையும் மக்கள் எளிதில் விளங்கிக்கொள்ள வேண்டும். அந்த வகையில் பல்வேறு உளவியல்பேரறிஞர்களின் சிந்தனைக் கருவூலங்களின் வடித்தெடுத்த சாரமாக இந்நூல் திகழுகின்றது.

உளவியல் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் மாணவருக்கும் மற்றையோருக்கும் இந்நூல் பெரிதும் துணை செய்யும் என்ற நம்பிக்கையுடன் இதனை வெளியிடுகின்ருேம்.

— பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

## இரண்டாம் பகுதி

# மனநோய்களும் மனிதவாழ்க்கையும்

மூன்றும் பகுதி

## குழந்தை மனமும்

## குழந்தை இயல்புகளும்

நான்காம் பகுதி

## சிக்மெண்ட் ப்ராய்டு

[உடலில் எவ்வளவோ உறுப்புக்கள். அவற்றுள் தலைமையானது மூளை. அனைத்தையும் மூளைதான் இயக்கி வருகின்றது. அதற்கேற்ற பல நுட்பமான பகுதிகள் மூளையில் உள்ளன. இந்த மூளைதான் மனமா? இதன்மூலம் மனத்தை அறியமுடியுமா? இதைப்பற்றிய விசாரணைகள் இந்தப் பகுதியில் வருகின்றன.]

## முதற் பகுதி

# மனமும் மூளையும்

# 1

# மனம் என்னும் மாயம்!

மனம் என்பதுதான் என்ன?

இது சிந்தனைக்குரிய சிக்கலான வினா. அது மட்டுமன்றி, மிகச் சுவையானதுங்கூட.

சிந்தனை செய்து, எதனையும் பகுத்து உணரும் இயல்புதான் மனிதப் பிறவியின் சிறப்பு அம்சம். இந்த இயல்புதான் மனிதனை மற்ற ஜீவராசிகளினின்றும் உயர்த்துகிறது.

மனிதன் சிந்தனை செய்வது எவ்விதம்? சிந்திக்கவும் உணரவும் அவனால் எவ்வாறு இயலுகிறது?

சிந்திக்கும் ஆற்றலை அளிக்கும் தனியுறுப்பு மனித உடலில் அமைந்திருக்கிறதா? அல்லது மூளையின் வியத்தகு செயல்நுட்ப விநோதத்தின் ஒரு பகுதிதானா அது?

## மனம் அமாநுஷ்ய சக்தியா?

"சிந்தனை செய்யும் ஆவலானது ஆவிகளின், தேவதைகளின் தூண்டுதல்கள்" என்று நம் முன்னோர் நம்பி வந்தார்களே? அந்த அமாநுஷ்ய நம்பிக்கையிலே ஏதாவது பொருள் உண்டா?

இன்றுவரை சிந்தனையாளர்களைக் குழப்பிவரும் பிரசசினைகள் இவை எல்லாம்.

'மனம்' என்ற ஒன்றைப்பற்றி பேசாத மனிதரேயில்லை. 'மனிதத் தன்மையின் நிலையான சின்னம்' என்று மனத்தைப் பற்றி மதிப்புச் செய்யப்படுகின்றது. இந்த மனமே சிந்தனு சக்தியின் செயலூக்கப் பின்னணி என்றும் கருதப்படு கின்றது. இந்தக் கருத்துக் காரணமாக மனத்துக்கு மதிப்பும், மரியாதையும் மேலும் மேலும் பெருகி நிற் கின்றது!

ஆனால், இந்த மனமோ, மனிதனுக்கு இன்னும் சரிவரப் பிடிபடாத ஒரு மாயமாகத்தான் இதுவரை திகழுகின்றது.

## மனம் மூளையின் பகுதியா?

மனம் மூளையின் ஒரு பகுதி என்று சொல்வார் உண்டு. அது இருதயத்தின் இயக்கத்தோடு இணைந்ததொரு மர்மசக்தி என்று வாதிப்பாரும் உண்டு.

மனம் உடலின் எந்த ஓர் உறுப்புடனும் தொடர்பு உடையதல்ல. அது ஒரு மகா சூட்சம சக்தி. கடவுளின் அருட்பிரசாதம். அதன் அமைப்புப் பற்றியோ, செயல் முறை பற்றியோ ஆராய்ந்து கண்டுபிடிக்க முயலுவது மனித சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம். இப்படித் திட்ட வட்டமாகக் கூறுவாரும் உளர்.

என்றாலும், மனம்பற்றிய ஆராய்ச்சிகள் இந்த நாளில் பெருமளவில் வளர்ந்துள்ளன. வெற்றிகரமாகவும் செயற் பட்டு வருகின்றன. மனத்தின் அமைப்பையும், தன்மை யையும், செயல் முறையையும் கண்டறியும் முயற்சி களில் அறிஞர்கள் ஈடுபட்டு அயராமல் உழைக் கிறார்கள்! அவ்வகை ஆராய்ச்சி முடிவுகளின் முக்கியமான அம்சங்கள் சிலவற்றைச் சுருக்கமாக நாமும் காணலாம். இப் பிரச்சினைகள் பற்றி நாமும் அறிந்து தெளிவு கொள் வதற்கு அவை உதவும்.

# 2

# மனத்தின் இரகசியம்!

மனம் என்பதுதான் என்ன? இது மிகமிகப் பழமையான பிரச்சினைகளில் ஒன்று என்றும். வருங்காலத்தில் ஒரு வேளை இதற்குச் சரியான விடை கண்டுபிடிப்பார்களோ என்னவோ! இப்போது அதைப்பற்றித் தெரிந்தது எல்லாம் இவ்வளவுதான்: 'மனம் ஒரு ஸ்தூலப் பொருள் அல்ல. அது ஒரு சூட்சமப் பொருள். சூட்சம மனத்துக்கும் ஸ்தூல உடலுக்கும் நெருங்கிய பிரிக்கமுடியாத தொடர்பு உண்டு.'

## சூட்சம மனமும் ஸ்தூல உடலும்!

மூளையின் மூலமாகத்தான் வெளிஉலகத்தோடு மனம் சம்பந்தப்படுகிறது. இதனால், மனமும் மூளையும் ஒன்று தானே என்றும் சிலர் நினைக்கலாம். இது தவறு. வீணை வேறு. அதன் நரம்புகளைத் தடவி இன்னிசையை இனிதாக எழுப்புகிற பெண் வேறு. இதே போலத்தான் மூளையும் மனமும். மூளை சாதாரண வீணை போன்றது. மனம் என்னும் பெண்தான் அதை மீட்டி இன்பநாதத்தை எழச் செய்கிறாள்.

## மூளை சிதைந்தாலும் மனம் சிதையாது

மூளை சிதைந்துபோன பின்புங்கூட மனம் சிதையாமல் செயல்படுகிறது. இரண்டாவது உலக யுத்தத்தின்போது ஓர் ஆச்சரியமான சம்பவம் நிகழ்ந்தது. போர்வீரன் ஒருவனுக்கு விபத்து நேர்ந்தது. அவனுடைய மண்டை ஒடு கழன்று அவனுடைய மூளையும் வெளியே விழுந்துவிட்டது. அதற்குப் பிறகும், சில விநாடி நேரம்வரை அவன் பேசிக்

கொண்டிருந்தான். ஆகவே, மூளை அழிந்தபின்னும் மனம் வேறு ஏதோ ஓர் நுட்பமான ஆதாரத்தின் மூலம் வேலை செய்வதாகத் தெரிகிறது.

### நரம்புகளின் இயக்கம் யாது?

வெளியுலக விஷயங்களெல்லாம் நரம்புகளின் மூலமாகவே மூளைக்கு எட்டுகின்றன. கண், காது, மூக்கு, மெய், நாக்கு முதலிய உறுப்புக்களை நுண்மையான நரம்புக் கொடிகளே மூளையோடு இணைக்கின்றன. நரம்புகள் இரண்டு வகைப்படும். வெளியுலகச் செய்திகளை மூளைக்குக் கொண்டுசெல்லும் புலன் நரம்புகள் ஒரு வகை. உடலுறுப் புக்களுக்கு மூளை கொடுக்கும் கட்டளையை எதிர்த்திசையில் கொண்டுசெல்லும் கட்டளை நரம்புகள் மற்றொருவகை.

மூளை ஒரு தந்தி ஆபீசைப்போல் இயங்குகிறது. உலகத்தின் பெரிய தந்தி ஆபீஸ் எதையும்விட மூளை அதிகமாகவே வேலை செய்கிறது. ஆனால் தன்னிடம் வந்து போகும் செய்திகளுக்கெல்லாம் மூளைக்குப் பொருள் தெரியாது. அதைத் தெரிந்துகொள்வது மனமே ஆகும்.

### மனமும் புலப் பதிவுகளும்!

நம்மைச் சூழ்ந்துள்ள வெளியுலகத்தின் விஷயங்களை ஐம்புலன்களும் மூளைக்கு அனுப்புகின்றன. அவை மூளையில் நிலையாகப் பதிந்து கிடக்கின்றன. இந்தப் பதிவுகளே மனவியக்கத்துக்கு அடிப்படை ஆகின்றன. கோடானுகோடி அணுக்களின் சேர்க்கையே உலகம் என்று அறிவோம். இதேபோல் எண்ணிறந்த புலப்பதிவுகளின் இயக்க சக்தியே மனம். இந்தப் புலப் பதிவுகளைக் கொண்டே அறிவு, உணர்வு, செயல், பண்பு இவையெல்லாம் நம்மிடம் அமைகின்றன. மனத்துக்கு மூளை மூலப்பொருள்களைச் சேகரித்துக் கொடுக்கிறது. அவைகளை வைத்துக்கொண்டு மனம் தன் தொழிலைத் திறமையாகச் செய்கிறது.

### மின்சாரமும் மனமும்

மின்சாரம் நமக்குத் தெரிந்த சக்தி. அந்த மின் சாரத்தை நம் கண்ணுல் பார்க்க முடியாது. ஆனுல், அது சில சட்ட திட்டங்களுக்கு உட்பட்டுத் தொழிற்படுவதை அறிவோம். அந்தச் சட்ட திட்டங்களை அறிந்து மின் சாரத்தை நாம் ஏவல் கொள்கிறேம்.

மனம் இன்னதுதான் என்பதையும் இதே போலத் தான் நம்மால் திட்டமாகச் சுட்டிக்காட்ட முடியவில்லை. என்ருலும், அது சில நடை முறைகளுக்கு உட்பட்டு வேலை செய்வதைக் காண்கிறேம். ஆகவே, அதையும் நம்மால் ஏவல் கொள்ள முடியும்.

### உள்நோக்கும் புறநோக்கும்!

மனத்தின் இயல்பையும் அது வேலைசெய்யும் நடை முறையையும் அறிவதற்கு இரண்டு உபாயங்கள் உண்டு. ஒன்று, தன் மனத்தையே உள்நோக்கி ஆராய்வது; மற்றது, பிறர் மனத்தை ஆராய்வது. மனேதத்துவ பரிபாஷையிலே இவைகளுக்கு உள்நோக்கு முறை என்றும், புறநோக்கு முறை என்றும் பெயர் தந்திருக்கிருர்கள்.

ஒரு மனேதத்துவ வாதி மற்றவர்களின் மனத்தைச் சில பரிட்சைகளின்மூலம் ஆராய்ந்து முடிவுக்கு வருகிருர். இருபது வருஷங்களுக்கு முன்பு, இந்த மனேதத்துவ முறை களில் ஒருசிலருக்கு மட்டுமே நம்பிக்கை இருந்தது. இப்போதோ, கல்வி, வைத்தியம், கைத்தொழில் முதலிய பல வாழ்வியல் துறைகளிலும், இந்த மனேதத்துவ முறையைப் பலரும் பயன்படுத்துகிருர்கள். இதனுல் பல நன்மைகள் ஏற்பட்டுள்ளன. ஆயினும், இதனுல் தவறே நேராது என்றும் சொல்லிவிட முடியாது.

### மனத்தின் மூன்று பகுதிகள்!

இனி, மனத்தின் பகுதிகளைப் பார்க்கலாம். மன அமைப்பைப் பிரக்ஞை, உபப்பிரக்ஞை, நிர்ப்பிரக்ஞை என்று

மனோதத்துவ வாதிகள் பிரிக்கிறார்கள். பிரக்ஞை மண்டலத்தின் கீழே உபபிரக்ஞை மண்டலம் இருக்கிறது. இதனிடமிருந்துதான், பழைய ஞாபகங்களைப் பிரக்ஞைக்கு நாம் கொண்டு வருகிறோம். நேற்றைக்கு என்ன குழம்பு சாப்பிட்டோம் என்பதை இப்போது நாம் நினைத்துக் கொண்டிருக்கவில்லை. அந்த எண்ணம் உபப்பிரக்ஞையில் பதிவாகி இருக்கிறது. நம் பிரக்ஞைக்கு அதைக் கொண்டு வருவது மிக எளிதான காரியமே.

உபப்பிரக்ஞைக்கும் கீழே நிர்ப்பிரக்ஞை மண்டலம் இருக்கிறது. இந்த மூன்று மண்டலங்களும் தனித்தனியாகப் பிரிந்திருக்கவில்லை. ஒன்றோடொன்று தனியாகப் பிரித்தறிய இயலாத நிலையில் கலந்தே இருக்கின்றன. நிர்ப்பிரக்ஞை மண்டலம் என்பது மனத்தின் இருண்ட பிரதேசம். ஆதி மனுக்குலத்தின் இயற்கை ஊக்கங்களின் தொடர்பான சக்திகள் இங்கிருந்து பெருக்கெடுத்து வருகின்றன. அதுவே இன்றைய மனிதனின் மனப்பண்புக்கு அஸ்திவாரமாக அமைகின்றது. அநாதியான இந்த இயற்கை ஊக்கங்கள், நாம் மறந்துவிட விரும்பும் நம் பழைய அனுபவங்கள், நம் குழந்தைப் பருவத்து அச்சங்கள் இவையெல்லாம் மேற் சொன்ன நிர்ப்பிரக்ஞை மண்டலத்தில் அலைமோதிக் கொண்டவாறு அமிழ்ந்து கிடக்கின்றன. இவை நம் பிரக்ஞையின் ஆதினத்துக்கு உட்பட்டவை அல்ல. மனத்தின் பிரக்ஞை—உபப்பிரக்ஞைப் பகுதிக்கும் நிர்ப்பிரக்ஞைப் பகுதிக்கும் குறுக்கே திரை ஒன்று இருக்கிறது. நிர்ப்பிரக்ஞையில் வாழும் பழைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் பிரக்ஞை—உபப்பிரக்ஞை மண்டலத்தில் எழுந்து தலை தூக்காதபடி தடுப்பதே இந்தத் திரையின் வேலை.

'நாட்டின் சமுதாயத் திட்டங்கள், சமயச் சட்டங்கள், சன்மார்க்க விதிகள், பொதுஜன அபிப்பிராயங்கள் இவை

---

பிரக்ஞை—நினைப்பு நிலை. உபப்பிரக்ஞை—நினைப்பும் நினைப்பற்றும் இருக்கும் நிலை. நிர்ப்பிரக்ஞை—நினைவிழந்த நிலை.

களை அனுசரித்து நடப்பதே மனிதனுக்கு அழகு' என்று நாம் கருதுகிற மனப்பான்மைதான் இந்தத் தடுப்புத் திரையாகும்.

### மூளைக் களைப்பும் நரம்புத் தளர்ச்சியும்

நிர்ப்பிரக்ஞை மண்டலத்தில் அமிழ்ந்து கிடக்கும் கருத்துக்களோடு பிரக்ஞை மண்டலம் தொடர்பு வைத்துக் கொள்ள எப்போதுமே விரும்புவதில்லை. ஆனால், அந்தக் கருத்துக்கள் சில சமயங்களில் வெளிக் கிளம்பலாம். பிரக்ஞைக்கு வந்து மனிதனை ஆட்கொள்ளவும் துடிக்கலாம். அந்தச் சமயங்களில் இடைத் திரையானது ஒரு போலீஸ் படைபோல் இருந்து, அந்தக் கட்டுக்கு அடங்காத சிந்தனைக் கிளர்ச்சிகளை வெளிக் கிளம்பாமல் தடுக்கும்.

நிர்ப்பிரக்ஞையின் குறும்புகள் அதிகமாகும்போது அவைகளை அடக்குவதற்கான வலுவும் அதிகமாகவேண்டும். அப்போது மனத்தின் சக்தி அதிகமாக விரயமாவதால் அதன் சகஜமான வேலைகள் குறைவடைகின்றன. இதுதான் மூளைக் களைப்பு, நரம்புத் தளர்ச்சி முதலிய மனநோய்களுக்குக் காரணம். ஹிஸ்டீரியா, ஜன்னிப் புலப்பம், பைத்தியம் முதலிய நிலைகளில், திரையின் தடுப்புச் சக்தி தளர்ந்துவிடுகிறது. நிர்ப்பிரக்ஞை மண்டலம் ஆழ அடங்கிக் கிடப்பதில்லை. அது மேலெழுந்து தானே மூளையை ஆட்சி செய்ய ஆரம்பித்து விடுகிறது. இதை ஒருவகை மனப் புரட்சி என்றும் மனக் கிளர்ச்சி என்றும் சொல்லலாம்.

### மறுப்புத் திரையும் உணர்ச்சிகளும்!

பொதுவாகப் பெரும்பாலோருடைய மனத்தில் மறுப்புத் திரை சக்தியுடன் வேலை செய்கிறது. அதனால் நிர்ப்பிரக்ஞை மண்டலத்தின் உணர்ச்சிகள் வெளியே தலையெடுப்பதில்லை. என்றாலும், அவை அடியோடு ஒடுங்கிப் போய்விட்டன, மறுபடியும் தலையெடுக்க மாட்டா' என்றும் சொல்ல முடியாது.

சாதாரண மனிதன் ஒருவனுடைய வாழ்க்கையில், அவை ஏதாவது ஓர் உபாயம் செய்து, திடீரென்று எப்போதாவது மேலெழும்புவதைக் காணலாம்.

ஒருவன் ஓர் ஒழுங்கீனம் செய்தால், நாம் அதன் மூலக்காரணத்தைக் கண்டுபிடித்து ஏற்ற பரிகாரத்தைத் தேட வேண்டும். அவனுடைய நடத்தை, உடல் இயக்கம், கனவுகள் இவைகளைக் கவனித்தால், அவன் எப்படிப் பட்ட எண்ணங்களை எல்லாம் தன்னுள்ளே அடக்கி வைத்திருக்கிருன் என்பதைத் தெளிவாகக் கண்டு கொள்ளலாம்.

### நியாயம் கற்பிக்கும் மனம்!

மனிதனைத் தந்திரமாக ஏமாற்றிவிடும் விசித்திரமான இயல்பு மனத்துக்கு உண்டு. நாம் ஒரு தப்புச் செய்து விடுகிருேம். அதனுல் நமக்கு மன வேதனை உண்டாகிறது. அந்த வேதனையிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, 'நாம் செய்தது சரிதான்' என்ற ஒரு நியாயத்தை நாமே கற்பனை செய்துகொண்டு நம் மனத்தைச் சமாதானப்படுத்துகிருேம். சிலர், ஒரு தப்புச் செய்து விட்டாலும், அதன் உண்மைக் காரணம் அவர்களுக்கே தெரிவதில்லை. போலிக் காரணங்களையே சொல்லிக் கொண்டிருப்பார்கள். இந்த நிலைமை மற்றவர்களை ஏமாற்றும் நோக்கத்தால் உண்டானது அல்ல; தாங்களே காரணத்தை இன்னவென்று அறியாததுதான்!

வேதனை தரும் விஷயங்களிலிருந்து தப்பித்துக் கொள்ள மனம் மற்ருெரு முறையையும் கையாளுகிறது. அதுதான் ஞாபக மறதி என்பது. ஓர் ஆள் அல்லது ஊரின் பெயர் ஏன் நமக்கு மறந்துபோக வேண்டும்? நாம் நாணும்படியாக ஓர் அவமானம் அவனுல் அல்லது அங்கே நேர்ந்திருப்பதே இதற்குக் காரணமாகலாம். நமக்குக் கிட்டாத பொருள்களை எண்ணுமல் நிம்மதியாக இருக்கவும், மனம் இந்த மறதி முறையைக் கையாளுகிறது. மனத்தின் பிரக்ஞை மண்டலத்திலிருந்து இந்த எண்ணங்களைத் துரத்திவிடவே நாம்

முயல்கிறோம்: துரத்தியும் விடுகிறோம். ஆனால், இவை பின்னால் எக்காலத்திலும் தலைதூக்காமல் அமிழ்ந்து விடுவதில்லை. இவை மறைமுகமாகப் பலசமயங்களில் வெளிப்படுகின்றன. கனவிலே இவைகளைக் காண்கிறோம். எல்லாக் கனவுகளும் இப்படிப்பட்டவைதான் என்று சொல்ல முடியாதென்றாலும், பல கனவுகள் இந்த மாதிரிதான் உண்டாகின்றன.

## தூண்டலும் துலங்கலும் !

சொற்களின் உதவியால் மனித மனத்தை ஆராய்கிற முறை ஒன்றை மனோதத்துவ வாதிகள் கையாளுகிறார்கள். அதையும் இங்கே குறிப்பிடுவது பொருந்தும். ஒருவன் தன் மனம் என்ன விஷயத்தில் ஈடுபட்டிருக்கிறது என்பதை மறைக்க முயன்றாலும், அதை எளிதாகவே கண்டு பிடித்து விடலாம். நாம் சில குறிப்பிட்ட சொற்களை ஒவ்வொன்றாக அவனிடம் சொல்லிவர வேண்டும். இந்த ஒவ்வொரு சொல்லுக்கும் தொடர்புடைய மற்றொரு சொல்லைச் சொல்லும்படி அவனைக் கேட்கவேண்டும். நம் சொற்கள் 'தூண்டுதல் சொற்கள்' அவன் பதில்கள் 'துலங்கல் சொற்கள்'. நமது தூண்டுதல் சொல்லைக் கேட்டதும் அவனுடைய மனத்தில் எப்படிப்பட்ட செயல்மாற்றம் உண்டாகிறது என்பது இதனால் வெளிப்படும். நம் தூண்டுதல் சொல்லைக் கேட்டதும், தன் மனத்தில் இயல்பாக எழும் துலங்கல் சொல்லைச் சொல்லாமல் அவன் மறைத்தாலும்கூட, அப்போதும் அவனுடைய மனநிலையை நாம் எளிதாக அறிந்து கொள்ளமுடியும். இப்படி மறைப்பவன் சட்டென்று பதில் சொல்லாமல் சிறிது நேரம் திகைப்பான். உள்ளத்தை அவன் நமக்கு மறைக்கிறான் என்பது அப்போது தெரிந்து விடும்.

மனம் மிகவும் விசித்திரமான இயல்புடையது. ஆகவே பெற்றோர், ஆசிரியர், குருமார் போன்றவர்களெல்லாம் மனத்தின்முரண்பட்ட தன்மைகளைப்பற்றி அறிந்துகொள்ள

வேண்டும். தனிமனிதனுடைய வாழ்க்கையில், அவனுக்குச் சக்தியும் சுதந்திரமும் பூர்ண வாழ்வு வாழ்வதற்கு உரிய தகுதியும் அளிக்கும்படி அவைகளை முறைப்படுத்திச் செம்மையாக உருவாக்கவும் முயலவேண்டும்.

## அச்சமும் கோழைத்தனமும்!

ஆபத்தில் சிக்கிக்கொள்ளாதபடி காப்பதற்கு அச்சம் பயன்படுகிறது. ஆயினும் அநாவசியமானதற்கெல்லாம் பயப்படும் கோழைத் தனத்தைக் குழந்தைகளுக்குப் புகட்டவேகூடாது. தப்பான அபிப்பிராயம் ஒன்று குழந்தையின் மனத்தில் ஒருமுறை விழுந்துவிட்டால், பிறகு அதை மாற்றுவது மிகவும் கஷ்டம். மற்றவர்கள் தனக்கு அநீதி செய்தாலும், தன்னை ஏளனமாகப் பேசினாலும், தன்னை வியந்து பாராட்டினாலும் குழந்தையின் மனம் மிகஎளிதாகப் பாதிக்கப்பெறும். தன்னிடம் நமக்கு அனுதாபம் உண்டு என்று அது அறிந்து கொள்ளும் வகையிலேயே நாம் நடந்து கொள்ள வேண்டும். தான் எந்தக் காரியத்தையும் சரியாகச் செய்ய முடியாது என்று குழந்தை எண்ணும்படி நாம் ஒரு போதுமே நடந்துகொள்ள லாகாது.

## பயிற்சியும் தூண்டுதலும்!

பகுத்தறிவே நம் செயல்களுக்கு எல்லாம் காரணம் என்று எண்ணி நாம் பெருமை அடையலாம். ஆனால் அது உண்மை அல்ல. நமது பகுத்தறிவுக்குப் பத்து அல்லது இருபது வயதே ஆகியிருக்கும். ஆனால், நம் இயற்கைத் தூண்டுதல்களுக்கோ ஆயிரக்கணக்கான வயது. பரம்பரை பரம்பரையாக வரும் இயற்கைத் தூண்டுதல்களால்தான் நாம் செயல்களைச் செய்ய முற்படுகிறோம். சொற்ப காலப் பயிற்சியின் பலனாக மனத்துக்குக் கிடைத்த புதிய கருத்துக்களால் நாம் செயல்படவில்லை என்பதே உண்மையாகும்.

மனிதனுக்கு உதவியான இயற்கைத் தூண்டுதல்கள் எல்லாமே அக்கிரம வழியிலும் திரும்பக்கூடியவை. அவை

களின் இயல்பான வளர்ச்சி தடைப்பட்டால், நமது பிற்கால வாழ்க்கையை வேரறுத்துவிடக்கூடிய விஷமத்தை அவை ரகசியமாக விருத்தி செய்துவிடும். சண்டையிடுவது இயற்கைத் தூண்டுதல்; கட்சி சேர்ந்து விளையாடுவதிலும், பலவீனனை ஆதரிப்பதிலும் இதைத் திருப்பிவிடலாம். பிறருடைய வாழ்க்கை விவரங்களை எல்லாம் விசாரித்துப் புறம்சொல்லித் திரியும் இயல்பை, வானியல் ஆராய்ச்சி முதலிய நுட்பமான துறைகளில் திருப்பலாம்.

## பாலுணர்ச்சியின் தூண்டுதல்

ஆண்களுக்குப் பதினாறு முதல் இருபத்தைந்து வயது வரைக்கும், பெண்களுக்குப் பதின்மூன்று முதல் இருபத்தொரு வயது வரைக்கும் கௌமாரப் பருவம் அதாவது குமரப் பருவம்! இதை அடைந்ததும் ஆணுக்கும் பெண்ணுக் ஒருவர் மீது ஒருவர் மனம் செல்கிறது. எதையும் அறிந்து கொள்ளும் ஆசை, சண்டையிடுவது, பயந்தோடுவது முதலிய இயற்கைத் தூண்டுதல்களைப் போலவே, இன உற்பத்தித் தூண்டுதலும் பிறப்பு முதலே அவர்களிடம் இருந்துவருகிறது. ஆனால், பால்யப் பருவத்தில் இந்த உணர்ச்சி வேகம் கொள்ளுவதில்லை. எதையும் அறிந்து கொள்ளும் ஆசையும், கூடி வாழ்வது முதலிய பிற தூண்டுதல்களும் இதை ஊக்கப்படுத்துகின்றன. அப்போது இது புது வேகத்துடன் விழித்துக் கொண்டு, ஆணுக்கும் பெண்ணுக்கும் பரஸ்பர ஆர்வத்தை—இச்சையை—உண்டாக்குகின்றது.

ஆண்பெண் சேர்க்கை விருப்பம் என்பது மனிதகுலத்துக்குக் கடவுள் அருளிய பெரிய வரம். அதை அசுத்தமானது என்று அடக்கி ஒடுக்க முயன்றால், அது தன்னையும் தன்னைச் சூழ்ந்த சமூகத்தையும் அழிக்கும் பயங்கர வெறியுடன் கிளம்பிவிடும். அதை நல்ல முறையில் பண்படுத்தினால் அது தன்னையும் மனித சமூகத்தையும் நல்வாழ்வில் செலுத்தி நன்மைகளைப் பெருகச் செய்யும்.

# 3

# மனமும் உடலும்!

## நினைவலையும் பிரக்ஞை மனமும்!

'மனம்' என்பது என்ன? இதற்கு உடற்கூற்றுக்கலைப் பிரகாரம் இன்னும் சரியான விளக்கம் கொடுக்க முடியவில்லை. ஆனால், மூளையின் செயல்அம்சமே அது என்று பொதுவாகக் கூறலாம். அதிலும், மூளையின் உத்தரவுகளைச் செயல் படுத்தும் ஓர் நுட்ப அமைப்பாகவே அதைக் கருதலாம். மனம் பேதலித்துப்போன ஒருவரின் குழப்பமான செயல்களிலே நாம் காணும் அறிகுறிகள் எப்படிப்பட்டவை? ஏதாவது உறுப்புக்களுக்கு ஊறு நேர்ந்தாலோ, வழக்கத்துக்குப் புறம்பாக நிகழ்ந்த திடீர் அதிர்ச்சி ஒன்றாலோ மூளை கெடுதல் அடைந்து, அதனால் ஏற்படும் சித்தப்பிரமையின் அறிகுறிகளாக அவை இருக்கின்றன. மனம் என்பது பிரக்ஞையின் பீடம். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களின் மூலமாகச்செய்திகளை நாம் உணர்கிறோம். புலன்கள் அனுப்புகிற செய்திகள் எல்லாம் மூளையின் நுட்பமான பகுதியான உள்மனத்தில் அடுக்கடுக்கான நினைவு அலைகளாகப் பதிகின்றன. தேவைப்பட்டபோது மேல் மட்டத்துக்கு அவற்றைக் கொண்டுவர நம்மால் முடியும். அப்போதுதான், நமக்கு அவற்றைப் பற்றிய பிரக்ஞையும் வருகிறது. உள் மனத்திலே பதுங்கிக் கிடந்த நினைவு அலைகளுக்கு முழு உருவமும் கொடுத்து வெளியே கொண்டுவருவது பிரக்ஞையின் செயல். அந்தப் பிரக்ஞைக்குக் காரணமானது மனம்.

## சிந்தனையும் செயல் வேகமும்

மனத்தின் செயல்களிலேயே மிகவும் சுவாராசியமும் வியப்பும் அளிப்பது சிந்தனைத் திறமைதான். வற்றாத ஊற்றிலிருந்து குபுகுபுவென்று பொங்கிவரும் நீரைப் போல எண்ணங்கள் மனத்திலிருந்து சதா பொங்கிப் பெருகி வந்து கொண்டே இருக்கின்றன. எவ்வளவு ஆரோக்கியமும் வளமும் உள்ளதாக மனம் இருக்கிறதோ அவ்வளவுக்கு அதிகமாக உயர்ந்த எண்ணங்கள் அதிலே உதிக்கின்றன. ஆனால், இப்படித் தோன்றுகிற எண்ணங்களில் பெரும் பாலானவை வலுவற்றவை. ஆகவே, மனத்தில் இவை பதிவதும் இல்லை; பின்னால் நினைக்கும்போது இவை வருவது மில்லை.

சிந்தனையின் வேகத்தைப் பொறுத்தே பேச்சும் அமை கிறது. ஆவேசமான—தாம் செய்வதுதான் சரி என்ற பிடிவாதத்துடன் கலந்த எண்ணங்களைத் தடுத்து அமுக்கி விடுவது மிகவும் சிரமான காரியம். இப்படிப்பட்ட எண்ணங்களே ஆவேசமான செயல்களுக்கு நிலைக்களனாக அமைகின்றன. மாபெரும் மனிதக் கும்பல்களையெல்லாம் தம் இஷ்டத்துக்கு ஆட்டிவைக்கும் திறன்பெற்றவை இந்த ஆவேச எண்ணங்கள்தாம். புரட்சிகரமான கருத்துகளுக்கும் இவையே வித்தாக இருக்கின்றன. பொதுவாக, மத விஷயங்களிலோ, தெய்வ வழிபாடுகளிலோ, அரசியலிலோ இந்த மாதிரி உணர்ச்சிப் பெருக்குக்கள் ஓரளவு போக் கிடத்தைப் பெற்று அமைதியடைகின்றன.

## செயலும் மனமும்

உத்வேகமான எண்ணங்களும், கருத்துக்களும் உணர்ச்சிக் குமுறல்களும் எப்படித் தோன்றுகின்றன என்பது இன்னும் நமக்கு முழுமையாகத் தெரியவில்லை. ஆனால், 'மனந்தான் இவற்றின் பிறப்பிடம்' என்பது மட்டும் நிச்சயமாகத் தெரிகிறது. உடலிலுள்ளது கல்லீரல்;

அதிலிருந்து சுரக்கும் பித்தநீர் குறித்து நமக்குத் தெரியும். ஆனால், அது எப்படிச் சுரக்கிறது என்று தெரியாது. இதே போல் மனத்திலிருந்து எண்ண வேகங்கள் சுரந்து வரு கின்றன. அவற்றின் விளைவுகளை நாம் அறிகிறோம். பயம், அன்பு, வெறுப்பு, இவை போன்ற பலதரப்பட்ட உணர்ச்சிகளுக்கு மனமே பிறப்பிடம். உணவாசை, பணத்தாசை, பதவியாசை இந்த எல்லாவற்றின் தாயகமும் மனந்தான். இந்த ஆசைகளும் உணர்ச்சிகளும் சக்தி வாய்ந்தவையாக மாறும்போது, இவை செலுத்துகிற வழியிலேயே மனிதனும் செயல்படுகிறான். பலம்பொருந்திய உணர்ச்சிதான் பலம்வாய்ந்த சித்தமாகவும் பரிணமிக் கிறது. பலமற்ற உணர்ச்சி அப்படியே மங்கித் தேய்ந்து கரைந்துபோய் விடுகிறது. நினைவு, உணர்ச்சி, ஆசை, சித்தம் இவை எல்லாம் தற்காப்பையே நோக்கமாகக் கொண்டவை. உணர்ந்தோ உணராமலோ ஒவ்வொரு ஜீவராசியும் செய்கிற காரியங்கள் எல்லாம் தன் உயிரையும் சுகத்தையும் காத்துக்கொள்ளும் முயற்சி களாகவே அமைகின்றன. இந்தத் தன்னல உணர்ச்சி வாழ்க் கையின் அடிப்படையான இயல்பு. இந்தக் காரியத்தில் மனம் உடல் இரண்டும் ஒன்றையொன்று சார்ந்தே செயல் படுகின்றன. உடலின் காரியங்களைக் கட்டுப்படுத்தும் சக்தி வாய்ந்ததாக மனம் இருப்பதுபோல், மன நிலையைப் பாதிக்கும் இயல்புள்ளதாக உடலின் நிலையும் இருக்கிறது.

### உடலைச் சார்ந்து இயங்கும் மனம்

'ஆரோக்கியமான உடலிலுள்ள மனமும் ஆரோக்கிய மானதே' என்ற விஷயம் நமக்கு நன்றாகத் தெரியும். இதைத் திருப்பிப் போட்டாலும் அதுவும் உண்மைதான். துக்கச் செய்தி ஒன்றைக் கேட்டு ஒருவருடைய மனநிலை துக்கம் அடையும்போது நாள்கணக்காக அவருக்குப் பசி எடுப்பதில்லை. அவருக்குச் சூழ்நிலையைப்பற்றிய கவனம் எல்லாம் அற்றுப்போய் விடுகிறது. இந்த நிலை மேலும்

நீடித்தால் அவருடைய தேகநிலை கெடுவதைக் கண்கூடாகப் பார்க்கலாம். இதேபோல் தேகத்தின் எந்தப் பாகத்திலாவது வலியோ நோயோ இருக்குமானால் மனஅமைதியும் இல்லாமல் போவதைப் பார்க்கிறோம். இவர்களிடமிருந்து அடிக்கடி சிடுமூஞ்சித்தனம் வெளிப்படும். தூக்கம் சரியாக இராது. முதலில் இருந்த தேகஉபத்திரவம் இந்த மனத் தொல்லைகளினால் இன்னும் அதிகமாகிவிடும்.

ஒருவருடைய மனநிலையும் தேகநிலையும் போதிய அளவு நன்றாக இருந்தாலுங்கூட, நல்ல சுற்றுபுறச் சூழ்நிலை இல்லாவிட்டால் அதுவும் அவரைப் பாதிக்கக்கூடும். ஆகவே மனநிலை, தேகநிலை, சூழ்நிலை இந்த மூன்றும் ஒத்து இசைந்திருந்தால்தான், ஒருவருக்கு வாழ்க்கையில் பரிபூரண மகிழ்ச்சி ஏற்படும்; சித்தியும் கிடைக்கும்.

இந்தக் காலத்தில், ஆரோக்கியம், வியாதி இவற்றுக்கும் மனத்துக்கும் உள்ள நெருக்கமான தொடர்புபற்றி விரிவான முறையில் நுட்பமாக ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். உடலுக்கு ஏற்படும் பலவகைக் குறைகளுக்குக் காரணம் மனநிலையே என்றும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

### மனஅமைதி குறைவதேன்?

இளம் பிள்ளைகளாக இருக்கும்போது பெற்றோரிடமிருந்து தேவையான அன்பும், ஆதரவும் பெறாத காரணத்தால்தான் பெரும்பாலும் மனஅமைதி குறைகிறது. அன்பு, பரிவு ஆகிய உணர்ச்சிகள்தானே மனித இனத்துக்கு முக்கியமான தூண்டுகோல்கள். எல்லாரும் தன்னைக் கொஞ்சவேண்டும்; தன்னிடம் அன்பு சொரிய வேண்டும் என்றுதான் பிஞ்சு உள்ளங்கள் விரும்புகின்றன. பெரியவர்களானபின் நெருக்கமான ஆண்-பெண் அன்பும், உடல் உறவினால் விளையும் திருப்தியும், வாழ்க்கையில் முக்கியமான பொறுப்பை வகிக்கின்றன. ஆண்-பெண் உறவு திருப்தியாக இல்லாமல் போனால், அதன் விளைவாக மனமுறிவு

ஏற்பட்டுப் பைத்தியமும் பிடிக்க ஏதுவாகிறது. எப்படியாலும் இவைபோன்ற சிக்கல்களுக்கு விடை கண்டாக வேண்டும். அந்த முயற்சியில் வெற்றிகிட்டாவிட்டால் உடலுக்கு ஏதாவது ஒரு குறை விளையும்படி மனமே செய்து அதைத் தன் இயலாமைக்கு ஒரு சாக்காகவும் எடுத்துக் கொள்கிறது. சில சமயங்களில் மனம் தன் தோல்விகளுக்கு ஒரு காரணத்தைக் கற்பித்துக்கொண்டு, தன்னைத்தானே திருப்தி செய்துகொள்கிறது. "எனக்கு மட்டும் இப்படி உடம்புக்கு வராதிருந்தால் நான் நிச்சயமாக வெற்றி கண்டிருப்பேன்" என்று சொல்வது இதனால்தான். மனோதத்துவ ரீதியில், நோயாளியின் உள்மனம் நோயையே உண்டாக்கித் தன்னுடைய தோல்விக்குக் காரணமாக அதைக் காட்டி அமைதிகொள்ள முயற்சி செய்கிறது.

வேலை செய்ய மனமில்லாதவர்களும், வேறு ஏதேதோ சாக்குப் போக்குகளைச் சொல்லி வருவது இதனால்தான். உடல் சரியில்லை. ஏதோ ஒரு மாதிரியாக இருக்கிறது! மனம் உற்சாகமில்லை! இப்படிச் சொல்வது எல்லாம் சோம்பேறித்தனத்தின் சின்னங்கள். தன்னைச் சோம்பேறி என்று காட்டிக்கொள்ள விரும்பாத மனம் இப்படிப் பல உடற் கோளாறுகளைக் கற்பித்துக் கூறுகின்றது. நாளடைவில் இவையே நோய்களாக மாறி நிலைபெற்று விடும் அபாயமும் உண்டு என்பதை இவர்கள் நினைப்பதில்லை. ஆனால், இதுதான் உண்மையாகும்.

# 4

# மனமும் குணமும்

## நன்மையும் வன்மையும்

குணம் நற்குணம் தீக்குணம் என்றும், வன்குணம் மென்குணம் என்றும் பலவாருகப் பகுத்துச் சொல்லப்படும். கீழ் நாட்டாராகிய நாம் நற்குணத்தை மதிக்கிருேம். மேல் நாட்டார் வன்குணத்தையே மதிக்கிருர்கள். ஆனல், நன்மையும் வன்மையும் ஒருங்கே அமைந்த குணத்தையே சிறந்த குணம் என்று கூறலாம்.

ஒரு பிள்ளையிடம் முறையாக வளர்ச்சி பெற்ற குணங்கள் அமைந்திருக்கும்படி நாம் எதிர்பார்க்க முடியாது. பிறவிப் பண்பால் ஏவப்பட்டே பிள்ளைகள் செயல் செய்கின்ருர்கள். தாம் செய்வது சரியா தப்பா என்று அவர்கள் எண்ணுவதில்லை. அப் பருவத்தில் அவர்கள் நன்னெறியினராக இருப்பதுமில்லை; தீயவழியினராக இருப்பதுமில்லை. தூண்டுதலால் ஆளப்படும் பிரகிருதிகளாக மட்டுமேவிளங்குகிருர்கள். எனினும், தாம் செய்யும் சில செயல்களால் தீமை விளைகிறது என்பதையும் அவர்கள் விரைவில் தெரிந்து கொள்கிருர்கள்.

## அறியும்நிலை வளர்ச்சி

தரை கடினமாக இருப்பதையும் நெருப்புச் சுடுவதையும் அறிந்துகொண்டு, அதற்கேற்பத் தம் இயல்புத் தூண்டுதல்களைக் குழந்தைகள் அடக்க முயல்கின்ருர்கள். அச்சமயத்தில்தான் அவர்கள் குணம் முதன்முதல் வளர்ச்சியடையத் தொடங்குகிறதென்று சொல்லலாம். அப்போது

தான் அவர்கள் நன்னெறியின் முதற்படியில் கால் வைத்து ஏறத் தொடங்குகிறார்கள். இதனை நாம் அறியும் நிலை என்று கூறலாம். அப்போது பிள்ளை தன் உடல் உறுப்புக்களுக்குக் குறைவு நேரும் என்ற பயத்தினால் தன் உணர்ச்சிகளை அடக்கி நடந்துகொள்ளத் தொடங்குகிறது. அடுத்த படியாக அதற்குப் பொருள்களுக்கும் மனிதர்க்குமுள்ள வேறுபாடு விளங்குகிறது. அதாவது, தான் செய்யும் சில காரியங்களைப் பெரியோர்கள் சரியென்று பாராட்டுவதையும், சிலவற்றைத் தப்பென்று கண்டிப்பதையும் தெரிந்து கொள்கிறது. எனவே, தான் செய்பவைகளை மற்றவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டுமென்பதற்காக, அது தன் விருப்பத்தை அடக்கிச் செயல் செய்யத் தொடங்குகிறது. இது ஒப்பும் நிலை. பிள்ளை வளர வளர அதனைச் சூழ்ந்திருப்போரின் தொகையும் மிகுதிப்படுகிறது. தானும் அவர்களில் ஓர் உறுப்பு என்பதை அது கண்டுகொள்கிறது. அவர்களோடு தானும் மகிழ்வாகக் கூடியிருக்க வேண்டுமானால். அவர்களுடைய விருப்பத்துக்கு இணங்கியே நடந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானிக்கிறது. இதனைச் சமூகநிலை என்று சொல்லலாம்.

## சமூகநிலையும் சுயநிலையும்

நம்மிற் சிலருடைய குணம் இச் சமூகநிலையின் அளவுக்குத்தான் வளர்ச்சி அடைகிறது. ஒருவர் தமக்குத் தீங்கு நேரக்கூடாதென்பதற்காகவும், தாம் செய்பவற்றை மற்றவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டுமென்பதற்காகவும் சமூகம் விரும்புகிறபடி தாம் நடந்துகொள்வது போதுமென்று எண்ணித், தம் இயல்புத் தூண்டுதல்களை அடக்கி ஒழுகுவதை உயர்குணம் என்று போற்றிக் கூறமுடியாது. இப்படி ஒழுகுவோர் குணவளர்ச்சியின் எல்லாப் படிகளையும் கடந்து விட்டவர்கள் அல்லர். இன்னமும் அவர்கள் வளர்ச்சி அடைதல் வேண்டும். ஒருவன் முற்கூறிய காரணங்களுக்காக மட்டுமன்றித் தன் தூண்டுதல்களைத் தானாகவே

அடக்கி ஒழுகும்வரை அவனைச் சிறந்த குணமுடையவன் என்று சொல்லக் கூடாது. அதாவது ஒருகாரியத்தைச் செய்யப் புகும்போது அதைச் செய்வதால் தனக்கு ஏதேனும் தீங்கு நேருமா, அல்லது மற்றவர்கள் அதனை ஒருவேளை ஒப்புக் கொள்ளமாட்டார்களோ, அல்லது சமூகம் என்ன சொல்லுமோ, சட்டம் எப்படி இருக்கிறதோ, என்றெல்லாம் வெளிப்புறக் காரணங்களை எண்ணமல், தனக்குள் ஓர் இலக்கைக் குறியாக வைத்துக்கொண்டு, அந்தக் குறிக்கோளை அடைவதற்கு முடிவு செய்து ஒழுகுவதே மிகச் சிறந்த நிலை. இதனைச் சுயநிலை என்று கூறலாம்.

சுயநிலையில் மனிதன் சிறந்ததோர் குறிக்கோளின் பொருட்டுத் தன்னை அடக்குவதால் உயர்நிலையடைகிறுன். அப்போது புறக்காரணங்கள் அவனை ஆள்வதில்லை. அவனே அவனை ஆள்கிறுன். அவன் யாரைத் தனக்கு இலக்காகக் கொண்டிருக்கின்ருனே அவர் செய்யக்கூடியவற்றையே தானும் செய்யத் துணிகிறுன். அப்படிச் செய்வதனுல், ஒருவேளை அவன் பொதுமக்கள் கருத்தையோ, அல்லது நாட்டு ஒழுங்கையோ மீறநேர்ந்தாலும், அல்லது அதனுல் அவனுக்கு என்ன துன்பம் வருவதாக இருந்தாலும் அவன் கருதிய செயலைச் செய்யாமல்பின்வாங்குவதே இல்லை. நன்னிலைத் தன்மையினுல் நாம் வாழுகின்ற இந் நாகரீக காலத்தில், ஒருவன் தன் குறிக்கோள் வாழ்க்கைக்காகச் சமூகத்தின் அல்லது அரசாங்கத்தின் சட்டங்களை மீற வேண்டிய தேவை மிகுதியாக இல்லை. எனினும், பண்பிற் சிறந்தவர்கள் சிலசமயங்களில் சமூகத்தினரின் பொதுவான கருத்தை மீறியும் செயல்படவேண்டியதிருக்கிறது என்பதும் உண்மைதான்.

### படிப்படியான வளர்ச்சி !

கல்வித் துறையில் பிள்ளைகளைப் படிப்படியாகப் பயிற்றுவிப்பதுபோலவே, பண்புப் பகுதியிலும் அவர்கள் ஒவ்வொரு நிலையாக வளர்ந்து மேற்செல்லும்படி கவனிக்க வேண்டும்.

பள்ளிக்கூடங்களில், பாடங்களைப் பொறுத்த மட்டில் படிப் படியாகவே சொல்லிவைக்கிறோம். ஆனால், பண்புப்பயிற் சியில் மட்டும் பிள்ளைகளை ஒரேயடியாக மேற்படிக்குக் கொண்டுவந்துவிட முயல்கின்றோம். இது ஆசிரியர்களுக்கு உண்டாகும் பெரிய சோதனை. ஒவ்வோர் அடியாக எடுத்து வைத்து நடப்பதை விட்டுவிட்டு, விரைவாக ஓடச்செல் வதால் விளையும் தீங்கு மிகுதி அன்றோ! அதனால், நாம் எதிர் பார்க்கும் வளர்ச்சிக்குப் பதில் தளர்ச்சியே ஏற்படும். பிள்ளைகள் தம்மால் இயன்றவளவு செய்யும் கைவேலைகள் அழகாய் இல்லாவிட்டாலும்கூட அவற்றைக் கண்டு இன்புறு கின்றோம். அவர்களைப் பாராட்டுகின்றோம். அறிவுத் துறையில் அவர்கள் நமக்கு ஒப்பாகமுடியா தென்றறிந்து, அவர்கள்பால் இரக்கம் காட்டுகின்றோம். எனினும், பண் பளவில் அவர்கள்மீது அடிக்கடி குறைசொல்கிறோம். அவர்களுடைய பண்பைத் திருத்தி வளர்ப்பதாகப் பெருமைப்பட்டுக் கொள்கிறோம். ஆனால் உண்மையில் நாம் ஆத்திரப்பட்டு அவர்களுடைய பண்பு வளர்ச் சியை விரைவுபடுத்துவதால் அவர்களை மட்டுப்படுத் துகிறோம் என்பதை நாம் உணர்வதில்லை. அவர்கள் மிக விரைவில் நற்குணமுடையவர்களாகிவிட வேண்டுமென்று அவர்களை வேகப்படுத்துவதால் நமது அதிகார பலத்தை அவர்கள்மீது பலவந்தமாகத் திணிக்கின்றோம். அதனால் பிள்ளைகள் தாமாகவே தம்மை அடக்கி ஒழுகும் உயர்நிலைக்கு வராமல், அஞ்சி நடக்கும் கீழ்நிலையிலேயே நின்று விடுகி றார்கள்; சொந்த மனோபலம் குன்றிவிடுகிறார்கள்.

## பாரம்பரியமும் குண வளர்ச்சியும்!

ஒரு பிள்ளையினுடைய குணவளர்ச்சியை உருவாக்கும் ஏதுக்கள் பல. அவற்றுள், அதன் பிறப்பியலும், சூழ்நிலையும் மட்டும் அதன் குணவளர்ச்சியை எங்ஙனம் உருப்படுத்த உதவுகின்றன என்பதை ஆராய்வோம். ஒருவன், தன் தாய் தந்தையருடைய உடற்கூறுகளைப் பெற்றுப் பிறப்பது

போலவே, அவர்களுடைய மனவியல்புகளையும் குணஇயல்பு களையும் உரிமையாக்கிக்கொண்டு பிறக்கிறான் என்றும், எனவே அவனுடைய பெற்றோர்களின் குணஇயல்புகளே அவனைப் பெரும்பாலும் ஆள்கின்றன என்றும் பொதுவாக எண்ணப்படுகிறது. இந்தக் கருத்துச் சரியல்ல என்பதே இக்காலத்து உளவியலறிஞர்களின் முடிவான கருத் தாகும்.

சிலர், 'எங்கள் தந்தை இப்படிப்பட்ட குணம் உடைய வர். நானும் அதை அவரிடமிருந்தேதான் பெற்றிருக்க வேண்டும்' என்றும், 'அவர் கொடுமையானவர், அற்ப குண முடையவர், பிறருக்குக் கேடு செய்பவர், அந்தக் குணங் களோடு நான் பிறந்திருக்க வேண்டும். எனக்கும் நெடுங் காலம் வரை இந்தக் குணங்கள் இருந்தன' என்றும் சொல் கிறார்கள். இக்கூற்று, பெற்றோருடைய குணப்பகுதிகளைப் பிள்ளைகள் பெற்றுப் பிறக்கிறார்கள் என்பதற்குத் தக்க சான்றாக முடியாது. தற்கால உளவியல் அறிஞர்கள், பிள்ளை களுடைய இளம்வயதின் வாழ்க்கை இயலை நமக்குத் திறந்து காட்டும் வரை, இத்தகைய தப்பெண்ணங்களுக்கு மதிப்பு இருந்துவந்தது. நான்கு வயதுவரை நமது வாழ்க்கையில் நடந்த பல செய்திகள் இன்று நமது நினைவில் இல்லை; என்றா லும், அவை நமது பிற்கால வாழ்க்கையை மிகுதியாகப் பாதிக்கின்றன என்பது உண்மை. இக் காலத்தில் உளவியல் அறிஞர்கள் நாம் மறந்துவிட்ட அந்தப் பிள்ளைப்பருவ நினை வுகளை வெளியே கொண்டுவரக்கூடும். ஓர் உளவியலறிஞர் தம் சித்தவலிமையால் ஒருவனைத் தூங்க வைத்து, அவன் தூங்கிக் கொண்டிருக்கும்போதே சில கேள்விகளைக் கேட்டு, அவன் அளிக்கும் விடைகளின் மூலம் அவன் இயல்பு களை அறிந்து கொள்வார். அல்லது, ஒருவனுடைய இக்காலச் செயல்களையும் உணர்ச்சிகளையும் உளவியல் அடிப்படையில் அலசி ஆராய்ந்து, அச் செயல்கட்கும் உணர்ச்சிகட்கும் மூலகாரணமாக விளங்கும் இளமைப்பருவத்துப் பழைமைச் செயல்களைக் கண்டறிந்து விடுவார்.

நம் பழைய அனுபவங்கள் வெளியாகும்போது, அவற்றின் குறிகளும் பகுதிகளும் பெற்றோரிடமிருந்து உரிமையாக்கிக் கொண்டவையல்ல வென்பதும், அவற்றுக்குக் காரணம் சிறுபருவத்தில் நம்மைச் சுற்றியிருந்த சூழ்நிலையே; அதிலும் சிறப்பாகக் குடும்பச் சூழ்நிலையே என்பதும் வெளியாகிவிடும். ஒருவன், ஒருவேளை தன் பெற்றோரிடமிருந்து ஏதேனும் உரிமைப்படுத்திக் கொண்டிருந்தால், அது அவர்களுடைய நரம்புக் கோளாறுகளாக மட்டும் இருக்க முடியுமே தவிர, மற்றக் குண வேறுபாடுகளுள் எவையும் அல்ல என்பதே தற்கால ஆராய்ச்சிகளின் முடிந்த முடிபாகும்.

## பால் பிடிக்காத இளைஞன்

இருபத்தெட்டு வயதுள்ள இளைஞன் ஒருவன், தனக்கு உலகியல்வகை தெரிந்தபிறகு பால் சாப்பிட்டதே இல்லை. அவன் பெற்றோர்களிடமிருந்து பெற்றிருந்த உடல்கூற்றுக்குப் பால் ஏற்காததுதான் பாலின்மீது அவனுக்கு ஏற்பட்ட வெறுப்புக்குக் காரணம் என்று சொல்லப்பட்டது. அவன் மனத்தை உறங்கவைத்து ஆராய்ந்தபோது, பாலின்மீது அவனுக்கிருந்த வெறுப்புக்குக் காரணத்தையும் கண்டுபிடித்தார்கள். அவன் மூன்று வயதுக் குழந்தையாய் இருக்கும்போது, பாலில் கிரகரித் தூளைக்கலந்து அவனுக்குக் குடிக்கக் கொடுத்தார்கள். அவனால் குடிக்க முடியவில்லை. டாக்டர் ஐந்தாறு முறை முயற்சி செய்தார். கடைசியாக அவன் வாயினுள் பாலை ஊற்றித் தாடையை மேல்வாயோடு சேர்த்துப் பொத்திக் கொண்டார். பையனுக்கு மூச்சுத் திணறியது. பாலும் கிரகரித்தூளும் சேர்ந்த இந்தப்பழைய அனுபவம் அவன் மனத்தைவிட்டு நீங்கவே இல்லை. இந்த நிகழ்ச்சியை அவன் அடியோடு மறந்துவிட்டான். ஆனாலும், அதன் பயனாகத்தான் அவனால் பால் குடிக்க முடியாமல் போயிற்று என்பதை அவனால் உணரமுடியவில்லை. உளவியல் அறிஞர் சொன்னபிறகே அவன் தெளிவடைந்தான்.

## சூழ்நிலைதான் காரணம் !

தற்காலத்திலே மனத்தின் பழந் தொடர்புகளைக் கண்டு பிடித்து அவற்றை மனத்தைவிட்டுக் களைந்து எறியமுடியும். அந்த இளைஞன் அந்த அறையைவிட்டு வெளியேறுமுன் அவனுக்கு ஒரு கிண்ணம் பால் கொடுக்கப்பட்டது. அவன், அதை வாங்கி இன்பமாகக் குடித்துவிட்டு, 'இது பால் போலவே இல்லையே' என்று சொன்னான். ஆகவே ஒரு பொருளின்மீது ஒருவனுக்கு ஏற்படும் விருப்புக்கும் வெறுப்புக்கும் பிறவி காரணமில்லை; சுற்றுப்புறச் சூழ்நிலையே காரணம் என்று அறிகிறோம்.

## நோஞ்சானும் தற்பெருமையும்

இளமையில் ஏற்படும் பலவகையான அநுபவங்கள் காரணமாகவே பண்புறுப்புக்களும் அமைகின்றன. ஒரு மனிதன் மிதமிஞ்சிய தற்பெருமை உடையவனாக இருந்தான். அக்குணத்தை விட்டுவிடும்படி மிகவும் முயன்றும் அவனால் முடியாமல் போயிற்று. மற்றவர்களை அவன் எப்போதும் சிறுமையாகவே எண்ணினான். பிறப்பிலேயே பிறர்க்கு இல்லாததோர் பெருமை தனக்கு அமைந்துவிட்டதாகவும் அவன் நினைத்துக்கொண்டான். இதன் காரணத்தை ஆராய்ந்தபோது வெளிப்பட்ட உண்மை இது: சிறு வயதில் மற்றப் பிள்ளைகளோடு சேர்ந்து விளையாடக் கூடாதபடி அவன் மிகவும் வலிமைக் குறைவாக இருந்தான். ஆகையால் அவனுடைய பெற்றோர்கள் மற்றப் பிள்ளைகள் எல்லாம் மண்ணுங்கட்டி; நீ தங்கக்கட்டி; நீயும் அவர்களைப் போலத் தெருவிலே ஓடி ஆடி விளையாடுவது உன் நிலைக்குத் தகாது; ஆகையால் சுத்தமாக உடுப்பணிந்துகொண்டு வீட்டுத் திண்ணையிலே அமர்ந்து படித்துக்கொண்டிரு" என்று சொல்லி அவனைத் தேற்றி வந்தார்கள். அவனையும் அறியாமலே அக்கூற்று அவன் மனத்தில் பதிந்து கிடந்தது. பெரியவனாக வளர்ந்த பின்னரும், அவன் தன் கோழைத் தனத்தை மறைப்பதற்குத் தற்பெருமையை ஒரு போர்வை

யாகப் பயன்படுத்தி வந்தான். உண்மையில் அவன் தற் பெருமை உள்ளவனுகப் பிறக்கவில்லை. ஆனால், அவனுடைய பேதைப் பெற்றோர்கள், அவன் உள்ளத்தில் தற்பெருமை யைத் தம்மை அறியாமலேயே சுமத்தியிருந்தார்கள்.

இவ்வாறு பெற்றோர்களுடைய தூண்டுதல் காரண மாகக் குணங்கள் அல்லது இயல்புகள் பெற்றோர்களிட மிருந்து பிள்ளைகளுக்குத் தாவுகின்றன. இது தான் உண்மையேயொழிய, அக்குணங்களைப் பெற்றோர்களிட மிருந்து பாரம்பரியமாகப் பெற்றுக்கொண்டு எவரும் பிறக்கின்றார்கள் என்பது உண்மையன்று. பெற்றோரிட மிருந்து அக் குணங்கள் பிள்ளைகளுக்கு எப்போது, எவ்வண்ணம் தாவின என்பதை நுட்பமாக ஆராய் வதின்மூலம் கண்டுகொள்ளலாம்.

### பரம்பரையும் நோய்களும்

எலும்புருக்கி நோய் பெற்றோரிடமிருந்து பிள்ளைகளுக்கு வருகிறதென்று ஒரு காலத்தில் எண்ணி வந்தார்கள். இப்போது அது சரியல்லவென்று கண்டுபிடித்து விட் டார்கள். பெற்றோர்க்கு ஒரு நோய் இருந்தால், ஒருவேளை அதேநோய் பிள்ளைகளைப் பீடிக்கக் கூடியதோர் வாய்ப்புச் சில சமயங்களில் இருக்கலாமே தவிர, அந்த நோயை அப்படியே பிள்ளைகள் உரிமையாக அடைந்து விடுகிறார்கள் என்பதில்லை. ஆகவே, பிள்ளைகளுடைய இயல்புக ளெல்லாம் பெற்றோரிடமிருந்தே அவர்களுக்கு இறங்கி வருகின்றன என்று மிகைப்படுத்திச் சொல்லப்படுவது சரியல்ல. இக்கால ஆராய்ச்சியாளர்கள் பிள்ளைகளுடைய குணங்கள் அமைவதற்குச் சூழ்நிலையும், வாய்ப்புக்களுமே பொறுப்பென்று வற்புறுத்துகின்றார்கள். என்றாலும், பெற்றோர்களிடத்திலுள்ள கடுஞ்சினம், பெருமை, சிறுமை, குடி, பொருள் விருப்பம், காம வேறுபாடு முதலிய குணங்கள் பிள்ளைகளிடமும் அமைவதற்குரிய சாத்தியமான சூழ் நிலைகள் மிகுதியாகும் என்பதையும் மறுப்பதற்கில்லை.

ஒரு தீய குணமானது ஒருவன் பிறக்கும்போதே அவனோடு சேர்ந்து பிறக்குமாயின், அவன் தன்னுடைய ஆயுள்காலம் அளவும் அக் குணத்துக்கு அடிமையாகி, அதற்கே சேவைசெய்து கெட்டழிவதைத் தவிர எவ்வகை யான விடுதலையுமே இருக்காது. 'பிறவிக் குணத்துக்கு மட்டை வைத்துக் கட்ட முடியுமா?' என்று சொல்லிக் கவலையின்றி இருந்துவிட வேண்டியதுதானே! அப்படியானால் தீக்குணங்களும் சீர்கேடுகளும் ஒருவனைவிட்டு, அல்லது உலகத்தைவிட்டு ஒழிவது எப்படி? எனவே, எல்லாம் பிறவிக்குணம் என்ற பழைய கொள்கையை நாம் அடியோடு மறந்துவிட வேண்டியதுதான்.

இளமைக் காலத்துச் சுற்றுப்புறச் சூழ்நிலை காரணமாக ஒருவனுடைய குணம் அமைந்தாலும்கூட, அவன் ஒழுக் கத்தில் அல்லது இயல்பில் மிகவும் கெட்டவனாக இருந்தால், நாம் அவனை ஒரு நோயுற்ற மனிதன் என்றும், வாழ்வின் முழுப் பொறுப்புக்களையும் ஏற்கத் தகுதியற்றவன் என்றும் தீர்மானிக்கிறோம். ஆனால், அவனுடைய அத் தீய ஒழுக்கம் அல்லது இயல்பு அவனுடைய இரத்தத்திலேயே ஊறிக் கிடக்காதபடியால், அவன் திருந்திவிடக்கூடும் என்ற நம்பிக்கைக்கும் இடம் உண்டு. முந்தையோர்களுடைய பாவங்களை அவர்களுடைய பின்சந்ததியார் சுமக்கிறார்கள் என்ற பழங்கொள்கை தற்காலத் தத்துவ நூல்களில் மறைந்து வருவதைப் பார்க்கிறோம். அப்படியே, முன்னோ ருடைய நோய்கள் பின்னோர்களைப் பீடிக்கின்றன என்ற கொள்கையும் மருத்துவ நூல்களிலிருந்து மறையும் காலம் அதிக தூரத்தில் இல்லை.

### நரம்பியல்பும் பிறப்பியல்பும்

உடல் அல்லது மனம் தொடர்பான நோய்களை நாம் பெற்றோரிடமிருந்து உரிமையாகப் பெற்றுக் கொள்வதில்லை. எனினும், சில இயல்புகளை நாம் அவர்களிடமிருந்து பெறு கிறோம். அவை, நம் வாழ்க்கையை வெகுதூரம் கெடுக்

கின்றன. இதையும் மறுத்தற்கில்லை. நம்மிடம் காணப் படும் சிறப்பான பண்புகட்கு அந்த இயல்புகளே காரணம். அந்த இயல்புகள் பெரும்பாலும் இருவகைப்படும். ஒன்று நரம்பியல்பு, மற்றது பிறப்பியல்பு எனப்படும் இயல்புத் தூண்டுதல்கள். இவற்றைச் சிறிது விளக்கி யுரைப்போம்.

நரம்புகள் அளவுகடந்து தூண்டுதலுற்று எழுச்சி யடைவதால், நரம்பியல்பு உண்டாகின்றது. இது சில குடும்பங்களின் பரம்பரைக் குணமாகவும் இருக்கிறது. தவருகப் பயன்படுத்தப்பட்டாலன்றி, இந் நரம்பியல்பு ஒரு நோய் அன்று. அன்றியும், நரம்பியல்புக்கு ஒருவனுடைய உடற்கூறுதான் பெரும்பகுதி காரணமே தவிர, மனக்கூறு காரணம் அல்ல. எனவே மனக்கோளாறுகளும், தீநெறி யியல்புகளும் பெற்ருேரிடமிருந்து பரம்பரையாக அடையப் படுபவையல்ல என்ற புதிய கொள்கையே மீண்டும் வலியுறு வதைக் காண்கிருேம்.

ஒரு குடும்பத்திலே தாயும் தகப்பனும் நரம்பு எழுச்சி உடையவர்கள். அவர்களுடைய பிள்ளைகளில் ஒருவன் தேர்ந்த ஓவியப் புலவன்; மற்றவன் நரம்புக்கோளாறு உடையவன்; அடுத்தவன் ஒரு கவிஞன். இவன் பிற்காலத் தில் தற்கொலை செய்துகொண்டான். மற்ருெருவன் குடி வெறியன். கடைசிப் பையன் ஒரு சிறந்த சொற்பொழி வாளனுக விளங்கினுன். நரம்பியல்பு உடையவனெருவன் தனக்கு நேரும் சிறிய ஊறுகளைக்கூடத் தாங்கமாட்டாமல் அதிகமாய் எரிந்து விழுவான். எனினும், அவன் இயற்கை அழகிலும், அது நல்கும் பேரின்பத்திலும் எளிதாக ஈடுபட்டு மெய்ம்மறந்துவிடக் கூடிய கலாரசிகனுகவும் இருப்பான்.

### தூண்டுதல்களும் சுற்றுபுறமும்

இயல்புத் தூண்டுதல்களை நாம் பெற்ருேரிடமிருந்தே அடைகிருேம் என்று முன்னர்க் கூறினுேம். இயல்புத் தூண்டுதல்கள்தாம் குணங்கள் உருவாவதற்குரிய மூலப்

பொருள்களாக இருக்கின்றன. தூண்டுதல்கள் உள்ளிருந்து கிளம்பிச் சுற்றுப்புற நிகழ்ச்சிகளோடு தொடர்பு படா விட்டால், அச் சுற்றுப்புற நிகழ்ச்சிகளால் நமது வாழ்க்கை சிறிதேனும் பாதிக்கப்படுவதில்லை. சுற்றுப்புற நிகழ்ச்சிகளும், நம்மோடு பிறந்திருக்கின்ற இயல்புத் தூண்டுதல்களும் ஒன்றுபடுவதாலேயே நமக்குப் பல அநுபவங்கள் ஏற்படு கின்றன.

சூழ்நிலைகளுக்கேற்பவே ஒருவனுடைய தூண்டுதல்கள் வளர்ச்சியடைகின்றன. எனினும், நாம் ஒவ்வொருவரும் வெவ்வேறு இயல்புகளுடன் பிறந்திருப்பதுபோலவே, பல் வேறு வகையாக வளர்ச்சிபெற்ற தூண்டுதல்களுடனும் பிறந்திருக்கின்றோம்.

'அட்ரெநெலின்' கோளங்கள் சுரப்பதற்கும் சினத்துக்கும் சண்டைக் குணத்துக்கும் தொடர்பிருக்கிறது.

காமத்துக்கும் 'கோனுட்ஸ்' கோளம் சுரப்பதற்கும் தொடர்பு இருக்கிறது.

இக்கோளங்களின் அமைப்பு, சுரப்புகளுக் கேற்றவாறு அவற்றோடு தொடர்புபட்ட பண்புகளும் கூடுதல் அல்லது குறைவாக இருக்கும். ஆகையினல்தான் சிலர் இயற்கை யாகவே மிகக் காமம் உடையவர்களாகவும், சிலர் மிகச் சண்டைக்காரர்களாகவும் இருக்கின்றார்கள். சிலர் குறைந்த காமிகளாகவும், அமைதி யுள்ளவர்களாகவும் இருக் கின்றார்கள். இதற்கு அவர்களுடைய உடலுறுப்புகளின் அமைப்பே காரணமாகிறது. ஆனல், வேறுசிலர் பிறக்கும் போது நடுத்தரமான இயல்பு படைத்த தூண்டுதல்களோடு பிறந்திருந்தாலும், இளம்பருவத்தின் சூழ்நிலையாலும் அநு பவங்களாலும் தாக்கப்பட்டு, வன்மையான தூண்டுதலுடை யவர்களாகவோ, அல்லது மென்மையான தூண்டுதலுடைய வர்களாகவோ காலப்போக்கில் மாறியும் விடுகின்றார்கள்,

## இளமைக் காலத்தின் முதன்மை!

முதன்மையாக இளமைக் காலத்துச் சூழ்நிலை காரண மாகவே ஒவ்வொரு மனிதனுடைய பண்புப் பகுதியும், முக்கியமாக அவனுடைய நரம்பு சம்பந்தப்பட்ட நோய் களும், கெடுதலான இயல்புகளும் அமைகின்றன என்று மேலே கூறியுள்ளோம்.

ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியோ அல்லது நோயுற்ற சூழ் நிலையோ ஒருவனுடைய குணவியல்பை எளிதாகக் கெடுத்து விடக்கூடும்.

வாழ்க்கையில் நிகழும் ஒரே ஒரு நிகழ்ச்சி ஒரு மனித னுடைய குணத்தையும் வாழ்க்கையைப்பற்றி அவன் கொண்டிருக்கும் கருத்தையும் அடியோடு மாற்றி அமைத்து விடக்கூடும் என்பது நம்மெல்லாருக்குமே தெரியும்.

தன் வாழ்க்கையில் அடைகின்ற ஒரே தோல்வியானது ஒருவேளை அவன் வாழ்க்கையிலேயே கசப்படைவதற்குக் காரணமாகிவிடக் கூடும். காம நுகர்ச்சியில் முதல் நாள் ஏற்படும் துன்ப அநுபவம் ஹிஸ்டிரியாவுக்கோ, அல்லது காம இச்சை அற்றுப்போவதற்கோ காரணமாகிவிடலாம். இந்நிகழ்ச்சிகள் இளமையில் ஏற்படுமானாலும், மனத்திலே அடக்கி வைக்கப்பட்டால் நிலையான கேட்டை முடிவில் விளைவித்து விடுவதுமுண்டு.

## நிகழ்ச்சிகளின் வலிமை

நிகழும், ஒரே நிகழ்ச்சி ஒருவனுடைய குணத்தை மாற்றி அமைத்துவிடும் என்பது முதன்மையில்லை. பல சிறு சிறு நிகழ்ச்சிகள் நிறைந்த நோயுற்ற சூழ்நிலையானது நாளடைவிலே தன் வாழ்க்கையைப் பற்றியோ, அல்லது தன்னைப் பற்றியோ தவறான கருத்துக்களை அணுவணுவாக அமைத்துக்கொண்டே வருவதற்குக் காரணமாக அமை வதும் உண்டு. எனவே ஒருவனுடைய குழந்தைப் பருவத்தில்

சூழ்நிலையைப் பற்றி மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். வாழ்க்கையில் நேரிடும் ஒரே ஓர் அதிர்ச்சியால் ஒருவனுக்குச் சிறப்பான குணவியல்பு மாற்றம் ஏற்படுவதைக் காட்டிலும், பிள்ளைப்பருவத்தில் அவனுக்கிருந்துவந்த சூழ்நிலையால் அவ்வியல்பு மாற்றம் ஏற்படுவதே மிகப் பெரும்பாலும் நிகழக்கூடியதா யிருக்கின்றது.

பிள்ளைப் பருவத்துச் சிறப்பான அநுபவங்கள் ஒரே நிகழ்ச்சியால் ஏற்பட்டாலும் சரி, அல்லது இயற்கைக்குமாறு பாடான சூழ்நிலையால் ஏற்பட்டாலும் சரி, அவை உடனே தீங்கு செய்வதில்லை. அவை மனத்தின் ஆழத்தில் பதிந்து மனத்தினுள்ளே பதுங்கிக் கிடக்கின்றன. அவற்றால் ஏற்படும் சிக்கல்கள் பிற்காலத்திலே ஏதேனும் ஒரு துன்பம் அல்லது தொல்லை ஏற்படும்போதுதான் வீறுகொண்டு எழுகின்றன. அப்போது மனிதன் நரம்புநோயால் பீடிக்கப்படுகிறான். அல்லது மிகுந்த சீர்கேட்டுக்கு ஆளாகி விடுகிறான். வாழ்க்கையின் பிற்காலத்தில்—பதினெட்டு ஆண்டுள்ள ஓர் இளம் பெண்ணுக்கு—அல்லது முப்பது ஆண்டுள்ள மங்கைக்கு—அல்லது ஐம்பது அறுபது ஆண்டுள்ள ஒரு வணிகருக்கு நரம்புத் தளர்ச்சி ஏற்படுவதாய் இருந்தாலும், அதெற்கெல்லாம் அவர்களுடைய குழந்தைப் பருவத்து அநுபவங்களே மூலகாரணம். இளமையின் அநுபவங்களே நரம்பு அல்லது குணம் பற்றிய கேடுகளுக்கு மனமாகிய நிலத்தைப் பண்படுத்தி வித்தூன்றி விடுகின்றன.

## பெற்றோரிடமிருந்து கற்றுக்கொள்பவை

மனித வாழ்க்கையின் தொடக்க ஆண்டுகள்—குழந்தைப் பருவம்—ஏன் மிகவும் முதன்மையானதென்றால், அக் குழந்தைப் பருவத்தில் தான் மூளையும்மனமும் வெளியுலகத்துச்செய்திகளால் மிகவும் எளிதாகத்தாக்கப்படுகின்றன. மிகவும் ஆழமான எண்ணப் பதிவுகளும் அப்போதுதான் ஏற்படுகின்றன. அப் பருவத்தில் ஏற்படும் ஆழமான பதிவுகளைக் களைந்து விடுவதென்றால் அது மிகவும் கடினமான

செயலாகும். தாய் அல்லது தகப்பன் முதலியவர்களிடமிருந்துதான் ஒரு குழந்தை கருத்துக்களைப் பெற்றுக்கொள்கிறது. தன் பெற்றோர்கள் என்னென்ன செய்வார்களோ எப்படி எப்படி நடந்து கொள்வார்களோ அப்படியே தானும் செய்யவும், நடந்து கொள்ளவும் பிள்ளை பழகிவிடுகிறது. நோயாளி ஒருவனைப் பார்க்கும் போது, அவன் தந்தை அருவருப்புடன் நடந்துகொண்டால், பையனும் பிற்காலத்தில் தான் ஒரு நோயாளியைக் காணும்பொழுது அப்படியே அருவருக்கிறான். தந்தை நோயாளியிடம் இரக்கத்துடன் நடந்து கொண்டால், தானும் நோயாளிகளிடம் இரக்கத்துடன் நடந்துகொள்ளும் பண்புடையவனாகின்றான். இவையெல்லாம் நேரடியாகப் போதிக்கப்படும் போதனைகள் அல்ல. பெற்றோரைப் பார்த்துப் பிள்ளைகள் உணர்ந்து கொள்வதாகும். இப்படி அறிந்துகொள்ளும் அறிவு சில சமயங்களில் எதிர்மறையான பலன்களையும் கொடுத்துவிடும். உதாரணமாக, 'பாவிகள் நிரயத்திலுள்ள தீயில் தள்ளப்படுவார்கள்' என்று ஒரு பிள்ளை தன் பெற்றோரிடமிருந்து அறிந்து கொள்கிறதென்று வைத்துக் கொள்வோம். இந்த அறிவு பிற்காலத்தில் அக்குழந்தை மதத்தையே வெறுப்பதற்குக் காரணமாகிவிடலாம். அல்லது மதவிதிகளைக் கவனமாகக் கைக்கொண்டு ஒழுகுவதே பக்தி என்று தவறாக எண்ணும்படியும் நேரலாம்.

## இளமையும் அநுபவமும்

வாழ்க்கையைப் பற்றிய பொதுவான கருத்துக்கள் இளம்பருவத்திலேயே ஏற்பட்டுவிடுகின்றன. 'வாழ்க்கை மிகவும் எளிது, மக்கள் நமக்குப் பகைவர்கள். நல்லவர்களாய் நடப்பதால் நன்மை உண்டு. இன்பமில்லாத எச்செயலும் நிலைக்காது' என்பது போன்ற பல கருத்துக்கள் நமக்கு ஏற்படுகின்றன. நாம் வளரவளரப் புதிய புதிய அநுபவங்களும் கருத்துக்களும் நமக்கு உண்டாகின்றன. என்றாலும், இளமையில் நாம் கொண்ட கருத்துக்களே

நமது பிற்கால வாழ்வு முழுவதற்கும் உருவங் கொடுக்கின்றன. ஆகவே, நமது இளமை அநுபவங்கள்தாம் வாழ்க்கையில் நாம் திடநம்பிக்கையுடனிருப்போமா, இன்ப வாழ்வை நாடுவோமா, அல்லது இன்ப துன்பங்களைப் பொருட்படுத்தாது எண்ணும் உயர்நிலை எய்துவோமா, அடக்கமாக வாழ்வோமா, அல்லது ஆடம்பரமாக இருப்போமா என்பவற்றை எல்லாம் திட்டம் செய்கின்றன. எனவே, ஒரு மனிதனுடைய இளமையின் சூழ்நிலையும் வாய்ப்புகளும் விரோதமாக அமைந்து அவன் பகைமைக் குணமுடையவனாகி விட்டால், அவன் பெரிய மனிதனான பின்னரும் நல்ல பண்புடைய நண்பர்களிடம்கூடப் பகைமை பாராட்டிக்கொண்டேதான் இருப்பான். அவன் குணம் வேறுபட்டதற்கு அவனுடைய இளமைப்பருவத்துப் படிந்த குணமாறுதல்களே காரணமாகும்.

## நல்ல சூழ்நிலைகள் வேண்டும்

ஒரு பிள்ளையினுடைய சூழ்நிலை நிகழ்ச்சிகள் மிகச் சிலவேயாகும். அவைகளுங்கூட மிகவும் எளிமையானவைகளே. அவனுடைய வீடும் வீட்டிலுள்ள குடும்பத்தாரும் தாம் அவனுடைய சுற்றுப்புறச் சூழ்நிலை.

ஒரே இடத்தில் ஒரே வகையான முறையில் வளர்ந்து வந்தாலும் பிள்ளைகள் வெவ்வேறு வகையான இயல்புடையவர்களாக இருக்கிறார்கள். இதற்குக் காரணம் அவரவர் பெற்றோரிடமிருந்து அடைந்துகொண்ட பிறவிக்குணமே என்று பழைமை வாதிகள் சொல்வார்கள். உண்மையைக் கூர்ந்து நோக்குவார்க்கு, அவர்கள் கூற்று ஆதாரமற்றதென்பது புலனாகும். ஒரு குடும்பத்திலே ஒரு பிள்ளையின் நிலை என்ன என்பதுகூட மிகவும் முதன்மையான காரியம். எடுத்துக்காட்டாக, ஒரு குடும்பத்திலுள்ள மூத்த பிள்ளை, தன் தம்பி தங்கைமாருக்கெல்லாம் ஒரு சிறு தாய்போல நடந்துகொள்ளுகிற நிலையில் இருக்கிறான். அந்தக் குடும்பத்

திலுள்ள கடைசிப் பையன் எல்லாருக்கும் 'சின்னத் தம்பி' யாகச் செல்லமாய் வளர்ந்து வருகிறான்.

## பெற்றோரும் குழந்தைகளும்!

ஆகவே, ஒரே குடும்பத்திலுள்ள அண்ணனும் தம்பியும் வளரும் சூழ்நிலை வேறுவேறாக இருப்பதைப் பார்க்கிறோம். மேலும், ஒரு வீட்டிலே பெண் குழந்தையிடம் அப்பா மிக அன்பாயிருக்கிறார். ஆகையால், அது வளர்ந்து பெரிய பிள்ளையான பிறகும், அதற்கு அம்மாவைக் காட்டிலும் அப்பாவிடமே அன்பு மிகுதி. அப்படியே அவ்வீட்டிலுள்ள பையனிடம் தாய் மிக அன்பாய் இருக்கிறாள். பையன் பெரியவனான பிறகும், அவனுக்கு அப்பாவைக் காட்டிலும் அம்மாவிடந்தான் அன்பு மிகுதியாக இருக்கும். இவ்வண்ணமாக ஒரே வீட்டில் வளரும் இரு பிள்ளைகள் வெவ்வேறு சூழ்நிலைகளில் வளர்ந்து வெவ்வேறு இயல்புகளுடன் விளங்குவதைக் காணலாம்.

ஆகவே, நம்மிடம் காணப்படும் குணகுணங்களுக்கெல்லாம் காரணம் நமது இளமைப் பருவத்துச் சூழ்நிலைகளே எனலாம்.

# 5

# மனமும் மறிவினையும்!

## மறிவினைச் செயல்கள்

நாம் தூங்கும்போதும் விழித்திருக்கும் போதும் எப்போதும் சில இயக்கங்கள் நடைபெற்ற வண்ணமாகவே இருக்கின்றன. இவற்றுள் பெரும்பாலானவை நம் பிரக்ஞைக்கே எட்டாத மறிவினைச் செயல்கள். உடம்பின் வெப்பநிலை, ரத்த அழுத்தம் இவற்றை ஒழுங்குபடுத்தி ஒரே சீராக இயக்குவது; இருதயம், சுவாசகோசம் இவற்றின் இயக்கம் இம்மியும் பிசகாமல் கவனித்து வருவது; ஜீரணம் சம்பந்தமான பலவகைச் சிக்கலான அம்சங்களையும் சமாளித்து நடத்துவது; உடலின் ஆரோக்கிய இயக்கத்துக்கு வெகு முக்கியமான உலோகச் சத்துக்களின் சமநிலை தவறாமல் விநாடிக்கு விநாடி விழிப்போடு கவனிப்பது. இந்தக் காரியங்களையெல்லாம் கண்காணிக்க வெகு விரிவான எந்திர விசை ஒன்று நமது உடலில் இருக்கிறது. இத்தகைய ஒரு எந்திரம் இருப்பதே நமக்குத் தெரியாமல் இந்தச் செயல்களெல்லாம் நம் உடலில் நடைபெறுகின்றன.

எப்பொழுதாவது, அருமையாக, இந்த மறிவினைச்செயல் ஒன்றின் விளைவு பிறருக்குத் தெரியும் அளவுக்கு வெளிப்பட்டுத் தோன்றுவதும் உண்டு. அப்போது 'ஐயோ! இது வெளியே தெரியாமல் தடுத்து அடக்க முடியவில்லையே!' என்று வருந்தும்படி முகம் வெட்கத்தால் சிவந்து தலை குனியச் செய்து விடுகிறது.

## நெற்றி நரம்பு புடைத்தவர்

ஜான் பீபர் என்பவர் 'மனித மூளை' என்ற பெயரில் ஒரு நூல் எழுதியிருக்கிறார். 'போக்கர்' என்ற சீட்டுச் சூதாட்டத்தில் தீவிரமாக ஈடுபட்ட ஒருவரைப்பற்றி அந்த நூலில் அவர் இப்படிக் கூறுகிறார்: "அவருக்கு மனப்படபடப்பு ஏற்படும் போதெல்லாம் அவருடைய நெற்றிப்பொட்டில் ஒரு நரம்பு எழுந்து புடைத்து நிற்கும். இதைக் கவனித்த அவருடைய நண்பரான சீட்டாட்டக்காரர் ஒருவர் அவரை வென்று லாபம் அடைய முடிந்தது. 'அவரது கையில் வெல்லத்தக்க சீட்டுக்கள் யாதும் இல்லை. இருப்பதுபோல் அவர் பாசாங்கு செய்கிறார்' என்பதை இந்த நரம்புப் புடைப்பு நிச்சயமாக எதிரேயுள்ளவருக்குக் காட்டிவிடும்."

## மறிவினைச் செயலின் விளைவுகள்!

நமது காரியாலயத் தலைவர் ஏதாவது தற்பெருமைக் கதை அளந்து கொண்டிருக்கும் போது நமக்குக் கொட்டாவி வருகிறது. இதை அடக்க நாம் வெகு பாடுபட வேண்டியிருக்கிறது. சினிமாப் படம் ஒன்றைப் பார்த்துக் கொண்டு இருக்கும்போது, சோகம் மிக்க கட்டங்களில் நம்மை அறியாமலே அழுகை வந்து விடுகிறது. அந்நியர் ஒருவர் கிச்சுக்கிச்சு மூட்டும் பாவனையில் தம் சுண்டு விரலைக் குழந்தை ஒன்றின் விலாவை நோக்கி நீட்டினால் போதும். குழந்தை 'பகபக' என்று அடக்க முடியாமல் ஒரேயடியாகச் சிரிக்கத் தொடங்கி விடுகிறது.

இந்த இயக்கங்களுக்கெல்லாம் காரணம் என்ன? நமது உடலில் இடைவிடாமல் சூறுவளிபோல் நடந்து வரும்—நம் இச்சைக்குக் கட்டுப்படாத—நம் பிரக்ஞைக்கு எட்டாத—இயக்கங்களின் (மறிவினைச் செயல்களின்) வெளிப்படைத் தோற்றங்களேயாகும்.

உடல் அமைப்பு இயக்கம் இவைகளின் சமநிலை அழியாமல் கவனித்து, உடலுக்கு அழிவு நேராமல் காக்க

வேண்டி உடலில் எப்போதும் மறிவினைச் செயல்கள் நடந்த வண்ணமே இருக்கின்றன. அற்பமான சில சிறு நிகழ்ச்சிகள் கூட நமக்குக் கோபத்தையோ படபடப்பையோ உண்டாக்கி விடுகின்றன. அந்த நிகழ்ச்சிகளால் ஏற்படக் கூடிய துன்பம் மிகுதியாக இருக்குமா, வெகு குறைவாக இருக்குமா என்று தீர்மானித்து, நமது மூளை செயலில் இறங்குவதில்லை. அபாயம் சிறியதானாலும், பெரிய தானாலும், மிகப்பெரிய அபாயத்தை எதிர்க்க என்னஎன்ன இயக்கங்கள் நடைபெற வேண்டுமோ, அந்த இயக்கங்கள் முற்றுமே விறுவிறு என்று, தாமாகவே நம் உடலில் நடைபெற்று விடுகின்றன.

இருதயத்தின் இயக்கத்திலும், மூச்சின் இயக்கத்திலும் வேகம் ஏற்பட்டு விடுகிறது. தசைகள் துரிதமாக இயங்குவதற்கு அவசியமான சர்க்கரைச் சத்து கல்லீரலிலிருந்து விடுபட்டு ரத்த ஓட்டத்தில் புகுகிறது. ரத்தக் குழாய்களின் இறுக்கம் ஏற்படவும், ரத்த அழுத்தம் அதிகரிக்கவும் காரணமான அட்ரினலின் என்ற சுரப்பு நீர் வெளிப்பட்டு ரத்தத்தில் கலக்கிறது. உயிருக்கே ஆபத்து ஏற்பட்டபோது ஆதி மனிதனிடம் என்ன என்ன மறிவினைச் செயல்கள் தோன்றினவோ, அவைகளைஎல்லாம், ஒரு மிகச்சிறு கிளர்ச்சி இன்றும் நம்மிடம் உண்டாக்கி விடுகிறது. சண்டை போடவோ, தப்பி ஓடவோ இந்த நிலையில் அவசியம் இல்லை என்பது நம் அறிவுக்குத் தெரிந்த போதிலும், நம் உடல் போரிடவோ தப்பிஓடவோ தயாரான முஸ்தீப்புகளை எல்லாமே பெற்று வன்மைப்படுகிறது.

### ஹைப்போ தாலமஸ்

முதுகெலும்பின் நடுவேயுள்ள தண்டு வடமும் மூளையும் இரண்டும் சேரும் இடத்தில், ஒரு சிறு முட்டை அளவில் நரம்புத் திசுக்களால் ஆன அமைப்பு ஒன்று இருக்கிறது. இதை ஹைப்போ தாலமஸ் என்கிறார்கள். உடம்பைக் காத்துச் சீராக வைத்துக் கொள்வதற்குக் காரணமான எல்லா

வகையான மறிவினை இயக்கங்களும், தக்ககாலத்தில் தக்க படி நடைபெறும்படி செய்யும் விசை இந்த ஹைப்போதால மஸ்ஸில்தான் இருக்கிறது. தூக்கம், விழிப்பு, இருதய இயக்கம், மூச்சு விடுதல் போன்ற செயல்களையெல்லாம் கணக்குப் பிசகாமல் நடைபெறச் செய்வதும் இதுதான். நாம் தூங்கும்போது ரத்தத்தில் பிராணவாயுக் குறைவு ஏற்பட நேர்ந்தால், எப்போதும் விழிப்புடன் இருக்கும் ஹைப்போதாலமஸ் உடனேமூச்சு இயக்கத்தின் வேகத்தைத் துரிதப்படுத்தி, இந்தக் குறையை நிவர்த்திக்கிறது. உடலின் வெப்பநிலை ஒரே சீராக இருக்கும்படி காத்து வருவதும் இது தான். இந்த வெப்பநிலை சற்றுக் குறைந்தாலும், உடலில் நடுக்கம் ஒன்றை இது உண்டாக்கிவிடுகிறது. இந்த நடுக்கமே ஒரு தேகப் பயிற்சியாகப் பயன்பட்டு உடலின் வெப்பநிலை உயர்ந்து, குறையும் நிவர்த்தியாகி விடுகிறது.

## சூடு தாகம் தோன்றுகின்றன

வியப்பைத் தரும் இந்த மறிவினை இயக்கங்களுள் பல, உடலுக்குக் கேடுநேராமல்காக்கும் தற்காப்புச் செயல்களாக பயன்படுகின்றன. சூடு மிகுந்த ஸ்டவ் ஒன்றை நம் விரல் தொடுகிறது. சூட்டுணர்ச்சியை அறியும் இரண்டு லட்சம் நரம்பு முனைகள் உடம்புத் தோல் முழுவதும் பரவியிருக் கின்றன. இவற்றுள் இப்போது ஸ்டவ்வைத் தொடும் பகுதியில் உள்ள சில நூறு நரம்பு முனைகள் 'அபாயம்' என்று தெரிவிக்கின்றன. நரம்புகளின் வழியே செய்தி மூளையை நோக்கிப் பறக்கிறது. மூளைவரை இந்தச் செய்தி போக வேண்டுமானால் காலதாமதம் ஆகும். எனவே தண்டு வடமே இயங்கிக் கைவிரலைப் பின்னுக்கு இழுக்கும் தசையைச் சுருங்கச் செய்கிறது. விரல் தானாகவே ஸ்டவ்விலிருந்து விடுபட்டுப் பின்னுக்கு இழுபடுகிறது.

நமது வாயில் ஆறு உமிழ்நீர்ச் சுரப்பிகள் இருக்கின்றன. இவை நாளொன்றுக்குச் சுமார் கால்படி உமிழ் நீரைச் சுரக்கின்றன. இந்தச் சுரப்பின் மறிவினை இயக்கத்தை

நன்கு ஆராய்ந்திருக்கிறார்கள். நெருக்கடியான பல சந்தர்ப்பங்களில் இந்தச் சுரப்பு ஏற்படுகிறது. உடம்பில் இருக்க வேண்டிய தண்ணீரின் அளவு சற்றுக் குறைந்தாலும் (ஐந்தில் ஒரு பங்கு குறையுமானால் சாவே நேர்ந்துவிடும்). உடனே இந்தச் சுரப்பிகள் இயங்கித் தாக உணர்ச்சியை உண்டாக்கி விடுகின்றன.

## கண்களைக் காப்பாற்றும் சக்தி

கண்களைக் காப்பாற்றப் பல மறிவினைச் செயல்கள் நிகழுகின்றன. தீவிரமான சூரிய ஒளி கண்ணில் பட நேர்ந்தால், அதிக ஒளியால் கண்ணுக்குக் கேடுநேருவதைத் தடுக்கக் கண்ணின் பாப்பா சுருங்குகிறது. கண்களைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்காக நம் இமைகள் துடைப்பான்களாகப் பயன்படுகின்றன. அதனால்தான், நாம் பல முறை தொடர்ச்சியாகக் கண்களை இமைக்கிறோம். கண்களைக்கழுவிச் சுத்தம்செய்வதற்காகவே கண்ணீர்சுரக்கிறது. சில சந்தர்ப்பங்களில் இந்தக் கண்ணீர்ச் சுரப்பு அதிகமாகி நாம் அழுகிறோம். துருக்கியர் இடைக்காலத்தில் கையாண்ட மிகக் கொடூரமான சித்திரவதை என்ன தெரியுமா? கண்ணீர்ச் சுரப்பிகளை அகற்றி விடுவதுதான். இந்தச் சித்திரவதைக்கு ஆளாகிறவன் அழக்கூட முடியாமல் துடிதுடிப்பான். முடிவில் அவனுடைய கண்ணே குருடாகி விடும்.

## கண்ணீரின் இரகசியம் !

'அழுகை பேச்சின் பிரதிநிதி' என்று ஃப்ரிட்ஸ்கான் என்ற ஜெர்மன் டாக்டர் ஒருவர் கூறுகிறார். வார்த்தைகளால் வர்ணிக்கமுடியாத ஒருநிலை மூளைக்கு ஏற்பட்டு விடுகிறது. பேசத் தெரியாத குழந்தை ஒன்று தன் விஷயத்தில் அக்கிரமம் நடந்துவிட்டதாக உணர்கிறது. வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத துக்கம் ஒன்று ஒரு ஸ்திரீயை ஆட்கொள்கிறது. இத்தகைய சூழ்நிலைகளைச்

சமாளித்து மனநிலையை வெளியாருக்குக் காட்ட மூளை பயன்படுத்தும் உபாயம், கண்ணீர்ப் பெருக்குத்தான். பல சந்தர்ப்பங்களில் சொற்களைவிடக் கண்ணீரே மிகுந்த ஆற்றல் வாய்ந்ததாகவும் இருக்கிறது.

## இருமல் நல்லதற்கே !

இருமல் வருவது தொண்டைக்குப் பாதுகாப்பு. தொண்டையை நோய் அணுகாமல் சுத்தமாக வைத்துக் கொள்வது இருமலின் வேலை. 'இருமல் தொல்லை கொடுக்கிறதே' என்று நாம் எண்ணலாம். ஆனால் இருமலே வராமல் போனால், உடலின் பாதுகாப்புக்கே பெரிய சிக்கல் உண்டாகிவிடும். பெரிய ரண சிகிச்சை நடக்கும் போதெல்லாம் இந்தச் சிக்கல் ஏற்பட்டுவிடுகிறது. ரண சிகிச்சைக்கு முன் கொடுக்கும் மயக்க மருந்து இருமல் என்ற மறிவினைச் செயலை ஒன்று அழுத்தி விடுகிறது; அல்லது அழித்துவிடுகிறது, அப்போது நோய்க் கிருமிகளும் கேடுதரும் வேறு பொருள்களும் தொண்டை வழியே சுவாச கோசத்தை அடையும் அபாயம் ஏற்பட்டு விடுகிறது. மயக்க மருந்து கொடுக்கும் டாக்டர் எச்சரிக்கை யுடையவராயிருந்தால், அவர் அடிக்கடி ஓர் உறிஞ்சு கருவியால் தொண்டையைச் சுத்தப்படுத்திக் கொண்டே இருப்பார்.

தொண்டைக்கு எரிச்சல் தரும் பொருள்களைத் தொண்டையிலிருந்து வெளியே தள்ளும் இருமல் ஏற்படத் தொடங்கும்போது, விரிவான பல நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. சுவாச கோசத்துக்குள் வெளிக் காற்று இழுபடுகிறது. கிளாட்டிஸ் என்ற வால்வு அந்தக் காற்றுச் சுவாச கோசத்திலிருந்து வெளியே வராமல் மூடிக் கொள்கிறது. வாய்க் கூரையின் (அண்ணத்தின்) பின்பகுதி மேல் எழும்பி மூக்குக்குப் போகும் வழியை அடைத்துக் கொள்கிறது. இப்படி எல்லாம் தயாரானவுடன் மார்புத் தசைகள் இறுகுகின்றன. சுவாசகோச வழியை மூடியிருந்த

கிளாட்டிஸ் வெடுக்கென்று திறந்து கொள்கிறது. தொண்டை வழியே பெருஞ் சூறுவளி போன்ற காற்று வெளியேறுகிறது.

## விக்கல் வருவது ஏன் ?

விக்கல் ஏற்படும்போதும் இப்படி ஒரு தொடரான மறிவினைச் செயல்கள் நடைபெறுகின்றன. மார்புப் பகுதியையும் வயிற்றுப் பகுதியையும் பிரிக்கும் சுவரான டயாஃப்ரம் சுருங்குகிறது. விளைவு என்ன? சுவாசகோசத்திலிருந்து வெளியே சீறி வரவேண்டிய காற்று வெளிவராதபடி கிளாட்டிஸ் என்ற வால்வு மூடித் தடுத்து விடுகிறது. இந்த நெருக்கடியில் ஏற்படுவதுதான் விக்கல். விக்கலுக்கு வேறு பல காரணங்கள் உண்டானாலும் டயாஃபரத்துக்கு ஏதோ எரிச்சல் ஏற்பட்டு அது சுருங்குவதுதான் மூலகாரணம் ஆகும்.

## வாந்தியின் வரலாறு

இதற்கு முற்றும் வேறுபட்ட, ஒரு தொடரான மறிவினைச் செயல்கள் ஏற்பட்டு, அதன் பலனாக நிகழ்வதுதான் வாந்தியாகும். வயிற்றில் அளவுக்கு அதிகமான பாரம் சேர்வதாலோ, ஏதாவது எரிச்சல் உண்டாவதாலோ, இது இயல்பாக ஏற்படுகிறது. எரிச்சல் தரும் பொருளைக் கரைப்பதற்காகவும், அதிகபாரத்தைத் திரவமாக்கவும் உடல் செய்யும் தீவிர முயற்சியின் பலனாக, வாயில் உமிழ் நீர் நிறையச் சுரக்கிறது. இதனால் நிலையைச் சமாளிக்க முடியவில்லை என்றால், வெகு நுட்பமான சில செயல்கள் ஒரு தொடராக வேகமாக நடைபெறுகின்றன. வயிற்றின் சுவர்களும் டயாஃப்ரமும் கடுமையாகச் சுருங்குகின்றன. தொல்லை தரும் இந்தப் பொருளை அப்படிச் சுருங்குவதன் மூலம் வெளியேற்ற அவை முயல்கின்றன. அதே சமயத்தில் கிளாட்டிஸ் என்ற வால்வு சுவாசகோச வழியை இறுக மூடிக் கொள்கிறது. வாந்தியாகும் பொருள் சுவாசகோசத்துக்குள்

நழுவிவிடக் கூடாதல்லவா? இந்த நிலையில் வயிற்றுக்குத் தொல்லை தரும் பொருள் வாய்வழியாக வெளியேறுவதே வாந்தி என்பது.

## குழந்தை பிறந்தது

குழந்தை பிறப்பு என்ற மற்றொரு விசித்திரச் செயலுக்கும் இத்தகைய தசைச் சுருக்கங்களே காரணம். ஒன்பது மாதம் வரையில் குழந்தையைத் தாங்கி நிற்கும் கர்ப்பப்பை சும்மா இருக்கிறது. பிறகு என்ன காரணத்தினாலோ அதன் தசைகளெல்லாம் தீவிரமாக இயங்கத் தொடங்குகின்றன. ஏற்ற காலத்தில் ஒழுங்கான தசைச் சுருக்கங்கள் தொடங்கி, முடிவில் குழந்தையை உடலிலிருந்து வெளி உலகுக்குத் தள்ளிவிடுகின்றன.

## தும்மல் உண்டாவது ஏன் ?

நமக்கு நன்கு பழக்கமான தும்மலும் இதுபோன்ற ஒரு மறிவினைச் செயலே. இதுவும் உடலின் ஒருபகுதியைத் துப்புரவாக்கும் ஒரு செயல்தான். தூசி தும்புகள் மூக்குப் பாதையில் தங்கி லேசான எரிச்சலைச் சில சமயம் உண்டாக்குகின்றன. இவற்றை வெளிப்படுத்தும் முயற்சியே தும்மல். கிழவர்களுக்கு அநேகமாகத் தும்மலே வருவதில்லை. அவர்களது மூக்குப்பாதை தடித்துப் போயிருப்பதால் லேசான எரிச்சல் தொல்லை தராமல் போகிறதோ என்னவோ! ஆனால் சிறு குழந்தை அடிக்கடி தும்முகிறது. அது தன் மூக்கைச் சிந்திக் கொள்ளும் உபாயம் இது. மூக்குப் பாதைக்கு ஏற்படும் லேசான எரிச்சலால் தும்மல் உண்டாகும். ஆனால் அதற்குக் கடுமையான கேடு நேர்ந்தால் இது உண்டாகாது.

எரிச்சல் தரும் ஏதாவது ஒரு பொருள் மூக்குப் பாதைக்குள் புகுந்தவுடன், அதை அகற்றும்படி மூளையிலிருந்து 'உத்தரவு' பிறக்கிறது. இருமலுக்கு ஏற்பட்டது

போன்ற சில தொடர்நிகழ்ச்சிகள் தொடங்குகின்றன. காற்றை உள்ளே மூக்கு இழுக்கிறது. மார்பு வயிறு சம்பந்தமான தசைகள் இறுகுகின்றன. காற்று வெகு வேக மாக வெளியேறுமுன் கண்களை மூடுகின்றன. வாயிலிருந்து மூக்குக்குச் செல்லும் பாதையை நன்ருகத் திற என்ற கட்டளை மூளையிலிருந்து பிறக்கின்றது. இருமும்போது வாய், மூக்குப்பாதை மூடியிருக்கிறது. தும்மும் போது இது நன்ருகத் திறந்துவிடுகிறது. எனவே, சுவாசகோசத்தில் இருக்கும் காற்று வாய்வழியாகவும் மூக்கு வழியாகவும் வெகு வேகமாகப் பாய்ந்து வெளியேறுகிறது. இப்படி வெளியேறும் போது மூக்குப் பாதைக்கு எரிச்சல் தந்த பொருளையும் இழுத்து வெளியே தள்ளி விடுகிறது. தும்மல் என்பது எரிச்சல் தரும் பொருளை வெளியேற்றும் முயற்சி. ஆகவே அதை அடக்கும் முயற்சி கூடியமட்டும் வெகு குறைவாகவே இருக்க வேண்டும். என்ருலும், தும்மல் வந்தால் அருகே உள்ளவர்களை எச்சரித்துவிட்டே தும்மவேண்டும். "வெளி யேறும் செயற்கைப் பொருளால் அவர்களுக்கு ஏதாவது அபாயம் நேரக்கூடும்" என்று பிரிட்டிஷ் டாக்டர் ஒருவர் சொல்கிருர்.

## பாதமும் மூக்கும் !

மிளகாய், மூக்குப்பொடி போன்ற பொருள்களின் நெடிகளாலும் தும்மல் சிலருக்கு உண்டாகும். மூக்கு கண் இரண்டுக்கும் பொதுவான சில நரம்புப் பாதைகள் மூளைக்குச் செல்கின்றன. சூரிய ஒளியின் மிகுதியால் சில சமயம் தும்மல் உண்டாவது இதனுல்தான். கண்ணுக்கு ஏற்படும் தொல்லையை மூக்குத் தொல்லையாக மூளை எண்ணிவிடுகிறது. பாதத்துக்குக் குளிர்ச்சி ஏற்பட்டா லும் தும்மல் உண்டாகும். வெப்பத்தை அடக்கியாளும் சாதனம் மூக்குக்கும் பாதங்களுக்கும் பொதுவானது. பாதம் குளிர்ந்தால் மூக்குப் பாதைகளும் குளிர்ந்து விடுகின்றன. மூக்குச் சுரப்புக்கள் குறைகின்றன. தொல்லை

ஏற்படுகிறது. தும்மல் தொடர்கிறது. பாதங்களுக்கும் மூக்குக்கும் உள்ள தொடர்பு நம் பாட்டிமார்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். பாதங்களை வெந்நீருக்குள் சற்று நேரம் வைத்திருப்பது ஓயாத தும்மலுக்கு மருந்து என்பது அவர்களுக்குத் தெரியும்.

## கொட்டாவியும் நன்மைக்கே !

சில சமயம் பெருந்திருப்தியையும், சில சமயம் தலைக் குனிவையும் உண்டாக்கும் கொட்டாவியும் சிக்கலான தொடர் செயல்களின் பலனான மறிவினை இயக்கமேயாகும். வாயும் கிளாட்டிஸ் என்றவால்வும் நன்றாகத் திறந்திருக்கும். கொட்டாவி வரும்போது பெருமூச்சு ஒன்று இழுபட்டு வெளிவரும். கை தோள்பட்டை இவற்றின் தசைகள் சுருங்கி நிற்கும். மூளையில் ஏற்படும் ரத்தக் குறைவே கொட்டாவிக்கு காரணம் என்பது பல அறிஞர்களின் கருத்து. நமக்குத் தூக்கக் கலக்கம் இருக்கும்போது, மூளையின் ரத்த ஓட்டம் மந்தமடைகிறது. அதற்குக் கிடைக்கும் பிராணவாயுவின் அளவு குறைகிறது. தூக்கக் கலக்கத்தை விரட்டி விழிப்போடிருக்க வேண்டுமானால் மூளைக்குச் செல்லும் பிராணவாயுவின் அளவு அதிகரிக்க வேண்டும். கொட்டாவியும், அதனால் சுவாசகோசம் வெளிக்காற்றால் நிறைவதும் இந்தச் சிக்கலுக்குப் பரிகாரமாகும். தண்ணீரில் முழுகும் போது ஏற்படுவதுபோன்ற மூச்சடைப்புக் காலத்தில் ஒருவன் வாயைத் திறந்து காற்றை நிறைய உள்ளிழுக்கத் தவிக்கிறானே, அந்தத் தவிப்புக்கும் கொட்டாவிக்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன.

## அரிப்பும் சொறிவதும்

மேல் தோலில் உள்ள நரம்பு முனைகளுக்கு ஏதாவது சிறு தொல்லை அல்லது தூண்டுதல் ஏற்பட்டால், அதன் பலனாக நிகழ்பவையே கிச்சுக்கிச்சு மூட்டும் உணர்ச்சியும் அரிப்புணர்ச்சியும். கொசு நம்மைக் கடிக்கிறது. கடிவாயில்

உள்ள சிறு நரம்புகள் மூளையினிடம் சென்று முறையிடு கின்றன. மூளை அனுப்பும் பதில் கட்டளையால் அந்த இடத்தைச் சொறிகிறோம். சொறிவதால் ஏற்படும் அதிகத் தொல்லையால் கொசுக்கடி காரணமான சிறிய தொல்லை மறைந்து ஆறுதல் ஏற்படுகிறது. கொசுக்கடியால் ஏற்படும் தொல்லை தரும் அரிப்பைவிடச் சொறிவதால் ஏற்படும் சிறு வலி பொறுக்கக்கூடியதாக இருக்கிறது. ரூல் தடி போன்ற ஒன்றினால் பட்டென்று அரிப்பெடுக்கும் இடத்தில் ஓர் அடி போடுவது, சொறிவது போலவே பயன்பட்டு அரிப்பின் எரிச்சலைக் குறைத்து விடுகிறது.

## சிரிப்பும் சிந்தையும்

கிச்சுக்கிச்சு மூட்டுவதால் ஏற்படும் சிரிப்பான மறிவினை இயக்கத்துக்குக் காரணம் விளங்கவில்லை. இந்தத் தூண்டுதலை மூளை புரிந்துகொள்ளும் விதமே சிரிப்புக்குக் காரணமாகலாம். கிச்சுக்கிச்சு மூட்டுவதைப் பொறுக்காமல் பகபகவென்று சிரிக்கும் இயல்புடைய ஒருவன், அல்லது அதிகக் கூச்சப்படும் ஒருவனுக்குத் தானாக ஓர் இறக்கையால் தன் பாதத்தின் அடிப்பகுதியில் உள்ள தூசியைத் தட்டிக் கொள்ளும்பொழுதோ, தன் விரலால் தன் விலாவை அழுத்தித் தொட்டுக்கொள்ளும் பொழுதோ சிரிப்பு வருவதில்லை. ஆனால் இதே செயல்களை வேறொருவன் செய்தாலோ செய்ய முயன்றாலோ போதும், அவன் வெடிச் சிரிப்புச் சிரிக்கத் தொடங்கிவிடுகிறான். இது ஏன்?

## மயிர் சிலிர்க்கும் மர்மம்

பயம் நம்மை ஆட்கொள்ளும்போது இந்தச் செய்தியை நம் மறிவினைச் செயல்கள் வெளிக்காட்டி விடுகின்றன. முகத்திலுள்ள ரத்தக் குழாய்கள் புடைத்து நிற்கின்றன அதன் பலனாக முகம் வெளிறித் தோன்றுகிறது. மயிர்க்கால்களை இயக்கும் நுட்பமான தசைகள் சுருங்குவதால் மயிர் சிலிர்த்

கிறது. விலங்குகளிடம் காண்பதுபோல் இந்த மயிர்ச் சிலிர்ப்பு மனிதர்களிடம் அவ்வளவாக விளங்கித் தோன்றுவதில்லை.

மிகுந்த குளிர்ச்சி உணர்வு காரணமாகவும், பயம் காரணமாகவும் விலங்குகளுக்கு மயிர்சிலிர்க்கிறது. மயிர்க்கால் தசைகள் சுருங்கி அங்குள்ள ஸெபாஸியஸ் சுரப்பியை அழுத்தி விடுகின்றன. அந்தச் சுரப்பியிலிருந்து கொழுப்பு வெளிப்பட்டு வெப்பம் அதிகரிக்கிறது. மயிர் சிலிர்ப்புறும் பிராணி அதன் உண்மை அளவைவிடப் பெரியதாகவும், பயங்கரமாகவும் அதன் விரோதிக்குத் தோன்றுகிறது. விரோதி மிருகங்களின் கடி, பிருண்டல் இவை உடல் தோலைத் தாக்காதபடியும் இந்தச் சிலிர்ப்பு ஓரளவு அதைக் காப்பாற்றுகிறது.

## வெட்கமும் பயமும்

பயம் காரணமாக முகத்தில் உள்ள ரத்தக் குழாய்கள் இறுகிப் புடைக்கின்றன. ஆனால் வெட்கத்தால் முகம் சிவக்கும்பொழுது இவை தளர்ச்சியடைகின்றன. முகம், கழுத்து இவற்றை மட்டும் வெட்கச் சிவப்புப் பாதிப்பானேன்?உடல் முழுவதையும் ஏன் பாதிப்பதில்லை? இதன் காரணம் யாருக்கும் தெரியவில்லை. வெட்கச் சிவப்பு நேரும்போதெல்லாம் மனக்குழப்பம் நிச்சயம் ஏற்படுகிறது. இந்தச் சமயத்தில் காரண காரியங்களை ஆலோசனை செய்ய முடிவதே இல்லை. பேசும்போது உளறலும் திக்கலுங்கூட ஏற்படுகின்றன.

அடிக்கடி முகம் சிவக்கும் இயல்புள்ள ஒருவன், அடிக்கடி தன் சிவப்பு முகத்தைப் பிறர் காண்பதை விரும்பாமல் கூச்சப்படுவான். ஆனால், அவன் ஒரு வகையில் ஆறுதல் பெறலாம். இந்த முகச்சிவப்பு ஓரளவுக்கு அறிவாற்றலின் அறிகுறியே. (பிறப்பிலே மந்தமாக இருக்கும் ஒருவனுக்கு இத்தகைய முகச்சிவப்பு ஏற்படுவதே இல்லை). பிறர்

பேச்சில் தன்மானத்துக்குக் கேடான அம்சம் இருக்கும் போதும், கூச்சத்தை உண்டாக்கும் சூழ்நிலைஏற்படும்போதும் இந்த முகச்சிவப்புத்தானே தோன்றுகிறது. கூச்சத்துக்குக் காரணமான பழைய சூழ்நிலைகளின் நினைவு வரும் போதும் இது ஏற்படக்கூடும். குருடர்களுக்கும், செவிடர் களுக்கும் இந்தச் சிவப்பு அடிக்கடி ஏற்படுகிறது. சிறு பெண்ணாக இருக்கும்போது ஹெலன் கெல்லருக்கு அடிக்கடி முகம் சிவந்து விடுமாம். கூச்சத்தால் முகம் சிவக்கும் இந்த இயல்பு வயதேற ஏறக் குறைந்து கொண்டே போய் நாளடைவில் மறைந்தே விடுகிறது.

## மறிவினைச் செயல்கள் எண்ணற்றவை

நம் மறிவினைச் செயல்களில் கணக்கற்ற வகைகள் உண்டு. இவைகளில் காணும் சிக்கல்களுக்கும் அளவில்லை. வெளித்தூண்டுதல் எதுவும் இல்லாதபொழுதே நம் வயிறு சுருங்கிப் பசித்தொல்லையை உண்டாக்குகிறது. நம் உடலில் அதிகச் சூடு தோன்றினால் உடனே வேர்வைச் சுரப்பிகள் இயங்கி உடம்பை வேர்வையால் நனைத்து விடுகின்றன. இந்த வேர்வை ஆவியாவதால் நம் உடலின் வெப்பம் தணிகிறது. கோபம் ஏற்படும்போது ஜீரணப் பாதையில் ஓடும் ரத்தம் திரும்பித் தசைகளுக்குச் செல்கிறது. கோபத்துக்குக் காரண மான நிலையைச் சமாளிக்கும் வரையில் ஜீரணச் செயல் காத்திருப்பதும் உண்டு.

தும்மல், கொட்டாவி, உடல் நடுக்கம் போன்ற மறிவினைச் செயல்கள் நேரும்போது நீங்கள் கூச்சப்பட வேண்டாம். நமக்கு விவரம் சொல்லித் தொல்லை கொடுக் காமல் உடல் தன் ஆரோக்கியத்தைத் தன் முயற்சியாலேயே காத்துக்கொள்கிறது என்பதைக் காட்டும் அறிகுறிகளே இந்த மறிவினைச் செயல்கள் என்றறிந்து மன அமைதி அடையவேண்டும்.

# 6

# மனமும் மனக்கிளர்ச்சியும்

**நாம்** சில நாட்களில் சுறுசுறுப்பு இல்லாமல் இருக்கிறோம். சில நாட்களில் மிகவும் உற்சாகமாக இருக்கிறோம். சோர்வாக இருக்கும்போது பிறர்மேல் எரிந்து விழுகிறோம்; அநாவசியமாகக் கோபித்துக்கொள்கிறோம்.

உணர்ச்சி என்பது ஒவ்வொரு மனிதனின் மனோபாவத்திலும் விசித்திரமான ஒரு அம்சமாக இருக்கிறது. உங்களுக்கும் உணர்ச்சி இருக்கிறது; எனக்கும் உணர்ச்சி இருக்கிறது. ஆனால் உங்கள் உணர்ச்சி என் உணர்ச்சியுடன் ஒத்திருக்க வேண்டிய அவசியமில்லை. ஒவ்வொரு மனிதனின் உணர்ச்சியும் தனித்தனியானது. சுற்றுப்புற நிகழ்ச்சிகளையும் சந்தர்ப்பங்களையும் பொறுத்தே தனிமனிதனின் உணர்ச்சியும் சந்தோஷமும் வருத்தமும் அமைகிறது.

நமக்குத் தெரியாமலே உணர்ச்சிகள் தோன்றுகின்றன. நாம் அறியாமலே அவை மாயமாக மறைந்து போகின்றன. உணர்ச்சி தோன்றுவதற்குச் சில சந்தர்ப்பங்கள் அனுகூலமாக இருக்கின்றன என்பதும் உண்மைதான். யாராவது நண்பர் ஒருவர் உங்களைப் பாராட்டினால் உங்களுக்கு மகிழ்ச்சியும் உற்சாகமும் ஏற்படுகின்றன. நீங்கள் எடுத்த காரியங்கள் சரியாக நடந்து கொண்டிருந்தால் உங்களுக்குச் சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் நண்பர் ஒருவர் உங்களிடம் கொஞ்சம் கடுமையாகப் பேசிவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். உங்களுக்கு வருத்தமும் கோபமும் ஏற்படுகின்றன.

## நரம்பில் வலிமை வேண்டும்

உடலில் உள்ள நரம்புகளுக்கு இருக்கும் சக்தியைப் பொறுத்தே உள்ளத்தில் உணர்ச்சிகளும் எழுகின்றன. நரம்புச் சக்தி மிகுதியாக இருந்தால் நீங்கள் எப்போதும் உற்சாகத்துடனும் தைரியமாகவும் இருப்பீர்கள். உங்கள் நரம்புகள் தளர்ந்திருந்தால் நரம்புச் சக்தியை எளிதில் இழந்துவிடுவீர்கள். அந்தச் சமயங்களில்தான் நீங்கள் களைத்துச் சோர்வடைகிறீர்கள். அதனாலேயே நல்ல ஆரோக்கிய நிலையில் இல்லாதவர்கள் விரைவில் அலுப்பும் சலிப்பும் அடைகிறார்கள்.

இரவில் நெடுநேரம் விழித்துக் கொண்டிருந்தால் களைப்பு ஏற்படுகிறது. உங்கள் உடலில் உள்ள நரம்புச் சக்தி முழுவதும் கழிந்துவிடுவதே இதற்குக் காரணம். மேலும் நரம்புச் சக்தியைத் திரட்டிக்கொள்ள உடலுக்கு அவகாசம் கொடுக்கவில்லை என்றே இதற்குப் பொருள்.

## உற்சாகமும் சோர்வும்

நாம் ஒவ்வொருவருமே சில நாட்களில் மிகவும் உற்சாகமாக இருக்கிறோம். வேறு நாட்களில் சோர்வாக இருக்கிறோம். நாள்தோறும் நம் உணர்ச்சிகள் எப்படி இருக்கின்றன என்பதைத் தவறாமல் ஒரு டயரியில் எழுதி வரவேண்டும். இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு இந்த டயரியைப் பார்த்தால் நாம் உற்சாகமாகவும் தைரியமாகவும் இருக்கும் நாட்களும் களைத்திருக்கும் நாட்களும் விட்டுவிட்டு இருந்தாலும் அவற்றில் ஓர் ஒழுங்கு இருப்பதைக் காணலாம். களைத்திருக்கும் நாட்கள் ஒரே சீராக இருக்கும். அவற்றுக்கு இடையே உற்சாகமான நாட்களும் அமைந்திருக்கும். நம் உணர்ச்சிகள் ஒருவகையில் சுற்றிச்சுற்றி வரும் வட்டமாகவே சுழலுகின்றன. சில தினங்கள் உணர்ச்சி மிகுந்தும் சில தினங்கள் உணர்ச்சி குன்றியும் இப்படியே மாறிமாறிச் சுழன்று கொண்டே இருக்கின்றன.

உற்சாகமாக இருக்கும் நாட்களுக்கு இடையே உள்ள வித்தியாசம் எப்போதும் ஒரே மாதிரியாக இருக்காது. ஆனால், பல மனிதர்களின் உணர்ச்சிவட்ட நாட்கள் சீராகவே அமைந்திருக்கின்றன. மூன்று வாரங்களுக்கு ஒரு முறை உற்சாகமான நாட்கள் வரலாம். சிலசமயம் நாலு அல்லது ஐந்து வாரங்களுக்கு ஒருமுறை உற்சாகமான நாட்கள் வரலாம். பெண்களின் விஷயத்தில் இந்த உணர்ச்சிவட்டம் அவர்கள் மாதவிடாய் ஆகும் காலத்தைப் பொறுத்து அமைந்திருக்கிறது. மாதவிடாய்க் காலத்திலும் அதற்கு முந்திய சில நாட்களிலும் பெண்கள் உற்சாகமற்றுக் களைத்திருப்பார்கள்.

## அசட்டை கூடவே கூடாது

நம்மிடம் உள்ள நரம்புச் சக்தியைப் பொறுத்தே நம் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியும் என்று முன்பே சொல்லியிருக்கிறோம். நரம்புச் சக்தியும் கிட்டத்தட்ட ஒரு குறிப்பிட்ட காலவரையறைக்கு உட்பட்டே ஏற்படுகிறது. புதிதாக நரம்புச்சக்தி ஏற்படும் காலத்தில் இயற்கையாகவே நாம் தைரியமும் தன்னம்பிக்கையும் பெறுகிறோம். நம் நரம்புச் சக்தியை விரைவில் அசட்டையாகச் செலவழித்து விட்டால் உணர்ச்சி வட்டத்தின் விதிப்படி வரவேண்டிய சோர்வும் முன்னதாகவே ஏற்பட்டுவிடும். நம் உடம்பில் அவ்வப்போது ஏற்படும் நரம்புச் சக்தியைக் கவமனாகப் பயன்படுத்தினால் களைப்பும் சோர்வும் தோன்றும் காலத்தை எளிதில் சமாளித்து விடலாம்.

## தூக்கம் கெடுவது கூடாது

ஒரே சமயத்தில் அதிகப் பளுவைச் சுமப்பதாக நீங்கள் கருதினால், அதாவது இரண்டு மூன்று காரியங்களைச் செய்ய வேண்டி இருந்தால், பளுவைக் குறைத்துக் கொள்ளுங்கள். இரவில் நெடுநேரம் கண் விழித்துக்கொண்டு அரட்டை அடிப்பதோ, சினிமாப் பார்ப்பதோ நல்லதல்ல. தூக்கம்

கெடுவதால் இழந்த சக்தியை உடல் மீண்டும் ஈடுசெய்வதற்கு எடுத்துக் கொள்ளும் வாய்ப்புக் குறைகிறது. இதன் பயனாக மறுநாள் முழுவதும் குறைந்த சக்தியைக் கொண்டு நிறைய வேலைகளைச் செய்ய நேரும். அதனால் விரைவில் களைப்பும் உண்டாகும்.

நம் மனப்போக்கைப் பொறுத்தே நம் உணர்ச்சிகளும் தோன்றுகின்றன. எனவே, எப்போதும் மனத்திருப்தியுடன் இருக்கவே முயல வேண்டும். இதற்கு என்ன செய்ய வேண்டும்? நாம் உடுக்கும் உடைகள்கூட இதற்குக் காரணமாக அமையக்கூடும். நமக்குப் பிரியமான உடைகளை உடுத்துக் கொண்டிருக்கும்போது, 'நான் நன்றாகத்தான் இருக்கிறேன்' என்று நாமே கருதிக்கொள்வோம். நம் தலையைச் சரியாக வாரிக் கொள்ளாமலும், அழுக்கு உடையை அணிந்து கொண்டாலும், நிச்சயம் இது நம் மனத்தையும் பாதிக்கும்.

## எண்ணமே சோர்வு தரும்

நமக்கேற்படும் சுக துக்கங்களைப் பற்றி எண்ணுவது மட்டும் அல்ல, நம் உணர்ச்சி நிலையைப் பற்றி எண்ணுவதுமே நம்மைப் பாதிக்கும். உங்கள் உணர்ச்சி ஏதோ ஒரு விதமாகச் சோர்ந்திருக்கலாம். 'ஐயோ! இப்படிச் சோர்ந்திருக்கிறோமே' என்று எண்ணினீர்களானால், உங்கள் மனச்சோர்வு இன்னும் பலமாய்ப் போய்விடும். அப்படியில்லாமல், "இந்தச் சோர்வு நிலையானதல்ல. தைரியமும் நம்பிக்கையுமே எப்போதும் என் இயல்பு" என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்ளவேண்டும். சோர்வு வரும் உணர்ச்சி வட்ட நேரங்களில் ஒன்றிப் போய்விடாமல் இப்படி நீங்கள் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டால், சுறுசுறுப்பைத் தரும் உணர்ச்சி வட்ட நேரம் சீக்கிரமாகவே வர உதவியாயிருக்கும். இந்தச் சோர்வும் வரவரக் குறைந்து கொண்டே போகும்.

# 7

# மனமும் சங்கீதமும்

இன்னிசையின் சக்தியானது மனத்தையும் உடலையும் ஆன்மிக உணர்வையும் வெகுதூரம் பாதிப்பது என்ற உண்மை பலகாலமாகத் தெரிந்ததுதான். ஆனாலும் சமீப காலத்தில்தான் அந்தச் சக்தியின் பரிமாணத்தை விஞ்ஞான சோதனைகளின்மூலம் ஆராய்ச்சி செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். மனோதத்துவ நிபுணர்களும் மருத்துவர்களும் இசையின்மூலம் பல உடல் நோய்களை அதிசயிக்கத்தக்க விதத்தில் குணப்படுத்த முடியும் என்ற உண்மையைச் சந்தேகத்துக்கு இடமின்றி ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

## தாலமசும் இசையுணர்வும்

மனித மூளையின் 'உள்ளறை' என்று உடல் கூற்று அறிஞர் குறிக்கும் தாலமஸ் என்ற பகுதியில் போய் இசை தாக்குகிறது. தாலமஸ் என்ற நரம்புக் கேந்திரந்தான் மனிதனுடைய புலனறிவுக்கும், உணர்ச்சி வேகத்துக்கும் உற்பத்தி ஸ்தானம். அந்தக் கேந்திரத்தில் சென்று தாக்கும் இசையொலி யானது, மனிதனின் உணர்ச்சியை மட்டும் அல்லாமல், அவனுடைய இயல்பு முழுவதையுமே அதற்கேற்ப மாற்றிவிடுகிறது.

மகிழ்ச்சி அளிக்கும் வகையில் அந்தக் கேந்திரத்தை இசை தாக்கினால், உடனே மூளையின் உச்சியில் அதையொட்டிய பிரதிபலிப்புகள் உண்டாகின்றன. அந்த உச்சி உறுப்பில்தான் நம்முடைய மிக உயர்வான சிந்தனைகளும் சக்திகளும் விவேகமும் உறைகின்றன. நமது மூளையின் மிக நுட்பமான உள்ளறைகளுக்குள் உடனே ஊடுருவிச் செல்லும்

சக்தி இசைக்குத்தான் உண்டு. ஆகவே, நல்ல அமைதியான இசையின்மூலம் தாமாகவே நம்முடைய எண்ணங்கள் திருந்திவிடுகின்றன. மனத்தாபம் அகன்றுவிடுகிறது ஏமாற்றங்களும் சோர்வுகளும் மறைந்துவிடுகின்றன.

## இசையும் மருத்துவப் பயனும்

"ஒவ்வொரு மருத்துவனும் இசைப் புலவனும் இன்னிசையின் தன்மையை நன்ருக உணர்ந்து கொள்வானுனல் எத்தனையோ மனநோய்களை மிக எளிதிலேயே குணப்படுத்திவிடலாம். எத்தனையோ பேருடைய வாழ்க்கை மகிழ்ச்சியும் ஒளியும் பெற்றுப் பிரகாசிக்கும்" என்று அமெரிக்க மன நோய் மருத்துவர் ஒருவர் கூறுகிருர்.

அமெரிக்காவில் கனெடிகட் மாகாணத்தில் பலவிதமான மூளைக் கோளாறுகள் கொண்ட 1300 மனநோயாளிகள் உள்ள மருத்துவச் சாலையில் "ஆர்ச்செஸ்ட்ரா என்ற கூட்டிசையைக் நோயாளிகளுக்கு வழங்கச் செய்தார்கள். அதன் பலனுகப் பெரும்பான்மையான நோயாளிகள் மன அமைதி பெற்று அமைதியாக நடந்து கொள்ளத் தொடங்கினுர்கள் என்று அந்த மருத்துவச் சாலையின் அதிகாரி கூறியிருக்கிருர். அதுமட்டும் அல்ல; அந்த இசையின் விளைவு பல நாட்கள் வரையும் நீடிக்கிறது என்றும் அவர் கூறுகிருர்.

## இசையும் மனமாற்றங்களும்

நியூயார்க் நகரில் ஸிராக்கூஸ் சர்வகலாசாலையில் சங்கீதப் பேராசிரியராகப் பணியாற்றும் டாக்டர் அலெக்ஸாண்டர் காப்புர்ஸோ ஒரு சோதனை செய்தார். குறிப்பிட்ட வெவ்வேறு மனநிலையை உண்டு பண்ணக்கூடிய ராகங்கள் அல்லது பாட்டுகளைத் தேர்ந்தெடுத்து மாணவர்களிடையே பலநாள் வழங்கச் செய்தார். அவர்களிடம் உண்டான மாறுதல்களையும் பதிவு செய்தார். சில பாடல்கள் எல்லாரிடமும் பொதுவாக அமைதியையும் மனச்

சாந்தியையும் உண்டு பண்ணுகின்றன என்றும், வேறுசில பாடல்கள் அமைதி இழப்பையும், பரபரப்பையும் உண்டு பண்ணுகின்றன என்றும் அவர் கண்டுபிடித்தார்.

பல ரகமான தீவிர மனநோய்கள் பீடித்த நோயாளிகளையும் பைத்தியங்களையும் இசையின் மூலம் குணப்படுத்தி விடலாம் என்பதை அமெரிக்காவில் பல இடங்களில் இப்போது கண்டுபிடித்துப் பயன் அடைந்து வருகிறார்கள்.

ஒரு வாத்தியத்தை மிகச் சாதாரணமாய் வாசித்தால்கூட அதைக்கேட்கும்போது மனம் ஒருமுனைப்படுகிறது. அப்போது நமது மனத்தில் உள்ள குழப்பமும் கவலையும் நீங்கித் தெளிவு ஏற்படுகிறது. சிறு மெட்டு ஒன்றை ஒலிப் பதிவுசெய்த இசைத்தட்டைக் கேட்பது மனத்துக்கு ஒரு டானிக்கைப் போல் உதவி, சோர்வையும் ஏக்கத்தையும் போக்குகிறது.

## இசையும் அறிவுக்கூர்மையும்

வயது வந்தவர்களைப்போலவே குழந்தைகளும் இசையால் மனவிர்வு பெற்று அமைதியாகவும் கட்டுப் பாட்டுக்கு அடங்கியும் நடந்து கொள்கிறார்கள். அமெரிக்காவில் நாடெங்கும் ஆசிரியர்களை விசாரித்ததில் ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளுள் சிறந்தவரில் 90 சதவிகிதம் பிள்ளைகள் ஒரு சிறு வாத்தியத்தையாவது வைத்துக் கொண்டு இசைத்து மகிழ்வதாய்த் தெரிந்தது.

பெரும்பான்மையான மக்களுக்கு இசையை ஒன்றிக் கேட்பதன் மூலமே சிறந்த மனப்பக்குவம் உண்டாகிப் பெரும்பயன் விளைகிறது என்று கூறலாம். இந்த நாளைய மெல்லிசையின் லயஅமைப்பே மனத்துக்கு உற்சாக மூட்டிப் பலன் அளிக்கிறது; உயர்தர இசை அல்ல என்று நிபுணர்கள் கூறுகிறார்கள். ரோமாபுரி மருத்துவ இல்லம் ஒன்றில் இந்த முறையில் அமைந்த நவீன இசையை உபயோகித்துச் சிறந்த பயனைக் கண்டிருக்கிறார்கள்.

இத்தாலியின் புகழ் பெற்ற சத்திர சிகிச்சை நிபுணரான புரொபஸர் கேயிட்டானே ஸப்பலோ என்பவர் 3000 நோயாளிகளுக்கு அறுவையிடம் மட்டும் மரத்துப் போகிற மருந்தைமட்டும் உபயோகித்தார். மயக்கமூட்டுவதற்குப் பதில் பொறுக்கியெடுத்த இசைத்தட்டுகளை இடைவிடாமல் ஒலி பரப்பினர். இந்த நிலையிலே அறுவைச் சிகிச்சையைச் செய்து அவர் வெற்றி கண்டிருக்கிறார்.

## இசையும் வயிற்றுவலியும்

வயிற்று நோயால் வெகுகாலமாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஒரு நோயாளிக்கு குறிப்பிட்ட ஓர் இசைத் தட்டை ஒரு நாளைக்கு மூன்றுமுறை சாப்பாட்டுக்குப் பிறகு கேட்க வேண்டும் என்று மருத்துவர் எழுதிக் கொடுத்தார். சிறிது காலத்தில் அந்த நோயாளி ஆகாரத்தை ரசித்துச் சாப்பிடத் தொடங்கி,நல்ல ஜீரண சக்தியும் பெற்றார். அவர் நோயும் தீர்ந்தது.

நோய்க்கு மருந்தாக மட்டும் அல்லாமல், இயற்கையான உடல்வளர்ச்சிக்கும் இசை உதவி செய்கிறது என்று அமெரிக்காவில் இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள். வயலின் இசையும் பிற வாத்தியங்களின் இசையும் தலைமுடியை நீளமாக வளரச் செய்கின்றன என்று சோதனைகளின் மூலம் நிரூபித்திருக்கிறார்கள்.

"உயர்வான மனிதன் இன்னிசையின் மூலம் உயர்ந்த மனிதப் பண்பை வளர்க்க முயல்கிறான். சிறந்த சங்கீதம் மேலோங்கியிருக்குமானால் மக்களின் லட்சியங்களும்,உயர் நோக்கங்களும் வளர்ந்து, ஒரு நாடு உன்னத நிலையை அடைகிறது." இது கன்பியூஷியஸ் என்ற சீனத்து ஞானி கூறிய உண்மை. இந்த உண்மையை நம் நாட்டு மகான்கள் அறிந்தவர்கள். அதனாலேதான் எண்ணற்ற பக்திப் பாடல்களைப் பாடி வைத்திருக்கிறார்கள். அவற்றைப் பாடும்போதும், பாடக் கேட்கும்போதும், நம் உள்ளம் எவ்வளவோ உயர்ந்த நிலையினை அடைகின்றது அல்லவா!

# 8

# மனமும் மனித இயல்பும்

மனிதன் எவ்வளவோ எந்திரங்களைக் கண்டுபிடித் திருக்கிறான். அவைகளை எல்லாம் முற்றவும் அடக்கி ஆள அவன் என்றாவது கற்றுக்கொள்வானா? அணுக்களைப் பற்றியும் உலகத்தையே அழிக்க அவைகளைப் பயன்படுத்துவதைப் பற்றியும் நமக்குத் தெரியும். ஆனால், மனிதன் எந்த எந்தச் சமயத்தில் எப்படி எப்படி நடந்து கொள்வான் என்பது நமக்குத் தெரியவேண்டாமா?

## அடிப்படை ஒற்றுமைகள்

சமூக விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் சிலர் மக்களின் வாழ்க்கை சம்பந்தமான உண்மைகளைக் கண்டுபிடிக்க முயன்றார்கள். ஆப்பிரிக்காவில் பயங்கரமான இருளடர்ந்த காடுகள், துருவப் பிரதேசம், வட அமெரிக்காவில் சிவப் பிந்தியர் வாழும் கிராமங்கள், தென் கடல் தீவுகள், இங் கெல்லாம் சென்று, நீக்ரோக்கள், எஸ்கிமோக்கள், சிவப்பு இந்தியர், பாலினீஷியர் இவர்களுடைய சமூகப் பழக்க வழக்கங்களை அவர்கள் ஆராய்ந்தார்கள்.

பல தலைமுறைகளாக, பல ஆராய்ச்சியாளர்கள் இப்படி ஆராய்ந்து, எவ்வளவோ வகைவகையான மக்களின் பழக்க வழக்கங்களை எல்லாம் திரட்டி வைத்திருக்கிறார்கள், புரொபஸர் மர்டாக் என்பவர் இவைகளை எல்லாம் தொகுத்து முறைப்படுத்தி ஓர் அகராதி தயாரித்திருக்கிறார். அது அமெரிக்காவிலுள்ள யேல் சர்வகலாசாலையில் இருக்கிறது. ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் தனித் தனியாக வளர்ந்த பல நாகரிகங்களுக்குள் எத்தனையோ வித்தியாசங்கள் இருப்பதை அந்த விஞ்ஞானிகள் கண்டார்கள். இவ்

வளவு வித்தியாசங்களுக்கிடையிலும் சில ஒற்றுமைகளும் இருந்தன. இதுதான் மனிதர் எல்லாரும் ஒரே இனம் என்பதை நிலைநாட்டுகிறது. உலக மக்கள் எல்லாரும் ஒரே குடும்பமாக வாழும் நிலை வரவேண்டுமானால் அடிப்படியான இந்த ஒற்றுமைகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டுதான் அதற்கு முயல வேண்டும்.

## மனித இயல்பின் பொது அம்சங்கள்

இந்த ஆராய்ச்சியிலிருந்து மனித இயல்பைப்பற்றிய சில பொது அம்சங்கள் தெரிந்தன. அவை :

1. குடும்ப வாழ்க்கை என்பது உலகெங்கும் இருக்கிறது. ஒருதார மணம்தான் பொதுவாக எங்கும் காணப்படுவது. பலதார மணமும் பல புருஷ மணமும் எங்கோ சில மக்களிடம் விதிவிலக்காகவே காணப்படுகின்றன.

2. ஆண்மகனுடையதேக பல மிகுதி காரணமாக உலகெங்கும் அவனே குடும்பத் தலைவனாகவும், சமூகத் தலைவனாகவும் இருந்து வருகிறான்,

3. தனிப்பட்டவர் சொத்து வைத்துக்கொள்ளும் வழக்கம் உலகெங்கும் நிலவுகிறது. சொத்துரிமையே இல்லாத கம்யூனிஸம் என்பது ஆதிமக்களுக்குத் தெரியாது.

4. எல்லாச் சமூகங்களிலும் ஒருவன் இவ்வளவு சொத்துக்குமேல் சம்பாதிக்கக்கூடாது என்ற கட்டுப்பாடு உண்டு. நம் சமூகத்தில் உயர்ந்த வருமானத்துக்கு ஒன்றுக்கு முக்கால் பங்கு வருமான வரி இருக்கிறது.

5. சமூகம் தன்னை மதிக்கவேண்டும், தனக்கு ஒரு பதவி கொடுக்கவேண்டும் என்று ஒவ்வொரு மனிதனும் விரும்புகிறான். சந்நியாசிகளும், சமூக வாழ்வை விரும்பாதவர் வர்களும் எங்குமே இருக்கிறார்கள். இவர்கள் இதற்கு விதிக்கு விலக்கு.

6. எஜமான் தன்னை மதித்துக் கௌரவிக்கிறான் என்ற எண்ணமே வேலையாளை அதிக வேலை செய்யத் தூண்டுகிறது. எவ்வளவு பணம் கொடுத்தாலும், வேறு எவ்வளவு

சௌகரியம் செய்து கொடுத்தாலும் நடப்பதைவிட அதிக வேலை இந்தக் கௌரவித்தலால நடக்கிறது.

7. எந்தச் சமூகத்திலும் ஏதாவது ஒருவகை அரசாங்கம் இருக்கவே இருக்கிறது.

## சமூகத் தோற்றம்

சமூகப் பண்பாடு, பரம்பரை இவைகளால் உருவானவன்தான் எந்த மனிதனும். பிறந்தது முதல் சமூகப் பண்பாடு நம்மைத் தன் கட்டுக்கு உட்படுத்தி விடுகிறது. தாய், தந்தை, செவிலி, அண்ணன், அக்காள், நம்மைவிட வயதான குழந்தைகள், உபாத்தியாயர், போலீஸ்காரர் இவர்கள்தான் நாம் இப்படி இப்படி நடக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்கிறார்கள்; நமக்கும் அறிவுறுத்துகிறார்கள். இவர்களிடம் நாம் கற்றுக்கொண்ட கட்டுப்பாடுகளுக்கு அடங்கியே நாம் நம் வாழ்க்கை முழுவதையும் நடத்துகிறோம்.

## கூலியும் உழைப்பும்

சமூகப் பண்பாடுதான் மனித இயல்பு ஆராய்ச்சிக்கு அடிப்படை. ஆனாலும், இந்த உண்மையை இன்னும் நம் அரசியல் தலைவர்கள் அறியவே இல்லையே!

மனித இயல்பைப்பற்றிய மேற்கண்ட பொதுவிதிகளுள் ஒன்றை ஓர் உதாரணத்தால் விளக்கலாம். 'ஓர் எஜமானனிடம் வேலை செய்பவர்கள், அதிக வேலை செய்யவேண்டுமானால் அதற்கு என்ன சூழ்நிலை அவசியம்?' என்பதுபற்றி, டாக்டர் எல்டன் மேயோ என்பவர் ஓர் ஆராய்ச்சி நடத்தினார்.

சிக்காகோவுக்கு அருகே உள்ள ஹாதார்ன் என்ற நகரத்தில் ஒரு பெரிய தொழிற்சாலை. அதிலுள்ள அறை ஒன்றில் ஆறு பெண்கள் ஒரு பெஞ்சில் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு முன்னால் உள்ள மேஜையில் ஊதலைப் போன்ற

டெலிபோன் 'ரிலே' என்ற ஒரு பொருளைச் செய்வதற்கு வேண்டிய பல பாகங்கள் இருக்கின்றன. இவைகளை ஒழுங்காக இணைத்து அந்தப் பொருளை அமைப்பது அவர்கள் வேலை. பெண்கள் பரபரவென்று வேலை செய்கிறார்கள். ஒரு 'ரிலே' அமைத்து முடிந்தவுடன், அதைத் தங்கள் பக்கத்தில் உள்ள குழாய் ஒன்றில் அவர்கள் போட்டு விடுகிறார்கள். இந்தக் குழாய்க்குள் உள்ள ஒரு எந்திரம் அவைகளை எண்ணுகிறது. ஒவ்வொரு மணி நேரத்திலும் ஒவ்வொரு பெண்ணும் செய்த வேலையின் விகிதத்தையும், அந்தக் கோஷ்டி முழுவதும் செய்த வேலையின் விகிதத்தையும் அந்த எந்திரம் பிசகில்லாமல் காட்டிவிடும்.

அந்த அறையின் பின்புறத்தில் நோட்டுப் புத்தகம் ஒன்றை வைத்துக்கொண்டு ஒருவர் உட்கார்ந்திருக்கிறார். அந்த அறையில் நடக்கும் ஒவ்வொரு செயலையும் அவர் கவனித்துக் குறித்துக்கொள்கிறார். அந்தப் பெண்களுக்கு அவர்மேல் வெறுப்பில்லை. அவருடன் சகஜமாகப் பழகுகிறார்கள். தங்கள் கஷ்டங்களை அந்தப் பெண்கள் அடிக்கடி அவரிடம் சொல்லுகிறார்கள்.

வேலை நேரத்தை மாற்றுவது, ஓய்வு கொடுப்பது, இவ்வளவு வேலைக்கு இவ்வளவு கூலி என்று நிர்ணயிப்பது போன்ற முறைகளால் பண்ட உற்பத்தி அளவு எப்படி மாறுகிறது? பண்ட உற்பத்தி அதிகரிக்கும்படி தொழிலாளர்களைத் தூண்டுவது எப்படி? இந்த விஷயங்களைக் கண்டு பிடிப்பதே இந்த ஆராய்ச்சியின் நோக்கம்.

கூலி அதிகமாகக் கொடுத்தால் வேலை வேகமாக நடைபெறும்; தினசரி வேலை செய்யும் நேரம் குறைந்தால் வேலையின் அளவும் குறையும் என்பதுதான் எல்லாரும் இதுவரை ஒப்புக்கொண்ட முடிவு.

### புதிய முடிவுகள்

ஒரு வருஷம் சோதனை நடத்தியதில், இந்தமாதிரியான பல பழைய முடிவுகள் தவறானவை என்பது விளங்கி விட்டது.

1. 'அதிக வேலை நடந்திருக்கிறதா? வேலை அளவு குறைந்துவிட்டதா?' என்று கண்டுபிடிக்க வேண்டுமானால், அடிப்படை அளவு ஒன்று வேண்டுமே. அந்த அடிப்படை வேலை அளவைக் கண்டுபிடிக்க முதல் ஏழு வாரம் சோதனை நடந்தது. வாரம் ஒன்றுக்கு 48 மணி நேரம் அந்தப்பெண்கள் வேலை செய்தார்கள். சனிக்கிழமையிலும் வேலை செய்தார்கள். வாரச் சம்பளம் கொடுக்கப்பட்டது. சராசரியாக, ஒவ்வொரு பெண்ணும் ஒரு வாரத்தில் 2400 'ரிலே' அமைத்தார்கள்.

2. இவ்வளவு வேலைக்கு இவ்வளவு கூலி என்று நிர்ணயம் செய்து எட்டு வாரம் வேலை நடந்தது. நடந்த வேலையின் அளவு அதிகமாயிற்று.

3. காலையில் சிறிது ஓய்வு, மாலையில் சிறிது ஓய்வு என்று இரண்டு தடவை ஓய்வு கொடுத்து, ஐந்து வாரம் வேலை நடந்தது. வேலையின் அளவு அதிகமாயிற்று.

4. நாள் ஒன்றுக்கு ஆறு தடவை ஓய்வு கொடுத்து சில வாரம் வேலை நடந்தது. வேலையின் அளவு கொஞ்சம் குறைந்தது. "விட்டு விட்டுச் செய்ததால் வேலை ஓடவில்லை" என்று பெண்கள் சொன்னார்கள்.

5. பழையபடியே இரண்டு தடவை ஓய்வுக்கு மாற்றினார்கள். வேலையின் அளவு அதிகரித்தது.

6. வாரம் ஒன்றுக்கு 44 மணி நேரம் வேலை வாங்கினார்கள். வேலையின் அளவு அதிகரித்தது.

7. வாரம் ஒன்றுக்கு ஐந்தே நாள் வேலை வாங்கினார்கள். வேலையின் அளவு அதிகரித்தது.

இப்படியாக ஒன்றன்பின் ஒன்றாகப் பல சோதனைகள் நடந்தன. ஒவ்வொன்றையும் சிலவார காலம் நடத்தினார்கள். புதுமுறை ஒன்றைப் புகுத்தியபோதெல்லாம் வேலையின் அளவு அதிகரித்தது. நான்காவது முறையில் மட்டுமே வேலையின் அளவு குறைந்தது. தங்கள் கொள்கை

களெல்லாம் தவறுனதைக் கண்ட ஆராய்ச்சியாளர்களுக்குக் கவலை வந்துவிட்டது. கூலி, வேலை செய்யும் நேரம், வேலைச் சூழ்நிலை இவைகளை எப்படி மாற்றினுலும், வேலையின் அளவு மட்டும் அதிகரித்துக் கொண்டே வந்தது.

## முடிவான சோதனை

முடிவாக ஒரு சோதனை செய்துவிடுவது என்று அவர்கள் தீர்மானித்தார்கள். இவ்வளவு வாரமாக அந்தப் பெண்களுக்குக் கொடுத்து வந்த சலுகைகளையெல்வாம் நிறுத்தினுர்கள். ஆரம்பத்தில் இருந்தபடி வாரம் ஆறு நாள் 48 மணி நேரம் வேலை. ஒய்வே இல்லை. கம்பெனிச் செலவில் டிபன் இல்லை. இவ்வளவு வேலைக்கு இவ்வளவு கூலி என்ற முறை இல்லை. இந்தச் சோதனை 12 வார காலம் நடந்தது. முடிவில் கணக்கெடுத்தபோது, வாரம் ஒன்றுக்கு ஒவ்வொரு பெண்ணும் சராசரி மூவாயிரம் 'ரிலே' தயார் செய்திருந்தாள். இதுவரையில் எந்தச் சோதனையிலும் இவ்வளவு அதிக வேலை நடந்ததே இல்லை.

ஆராய்ச்சிக்காரர்களின் மூளை குழம்ப ஆரம்பித்தது. பெண்களைப் பழைய சூழ்நிலைக்குக் கொண்டுபோக முயன்றுர்கள். ஆனுல் பழைய சூழ்நிலை மறைந்தே போய்விட்டது. பழைய சூழ்நிலையை மாற்றிய அம்சம் எது? இதைக் கண்டு பிடிக்க அவர்கள் தொழிற்சாலை முழுவதையும் ஆராய்ந்தார்கள்; தெரியவில்லை.

கடைசியாக, அந்த அம்சம் அந்தப் பெண்களிடமே இருப்பதைக் கண்டார்கள்.

## கௌரவமும் வேலை மிகுதியும்

அந்தப் பெண்களுக்கு வேலையில் தங்களுக்குள்ள சம்பந்தத்தைப் பற்றிய மனநிலை மாறிவிட்டது. அவர்களிடம் அன்போடுநடந்துகொண்டதாலும், அவர்களுடைய யோசனைகளைக் கேட்டதாலும்தான் மாறுதல் ஏற்பட்டது. தாங்களும் எந்திரத்தைப் போன்ற கருவிகளே, தங்களுக்குப்

பதவியோ கௌரவமோ இல்லை என்ற உணர்வு மாறித் தங்களுக்கும் ஒரு பதவி உண்டு, கௌரவம் உண்டு, தங்களை வெறும் எந்திரமாக எஜமான் மதிக்கவில்லை, மனிதர்களாகவே மதிக்கிறார் என்ற எண்ணம் அவர்களுக்கு உண்டாகிவிட்டது. யாருக்காகவோ எந்திரம் போல் செய்யும் வேலை அல்ல இது; இது நம் வேலை என்ற உணர்ச்சி அவர்களுக்கு வந்துவிட்டது. இதுதான் வேலையின் அளவு உயர்ந்ததற்குக் காரணம். சூழ்நிலை எப்படி இருந்தாலும் அவர்களை அது பாதிக்கவில்லை.

தொழிலாளியை அதிக வேலைசெய்யத் தூண்டுவது பணம் அல்ல; மதிப்புத்தான். எங்கே தொழிலாளியைக் கௌரவமாக நடத்துகிறார்களோ, அங்கே வேலையின் அளவு தானே உயர்ந்துதான் தீரும்.

சமூக விஞ்ஞானம் எவ்வளவோ முன்னேறியிருக்கிறது. எவ்வளவோ உண்மைகளைக் கண்டுபிடித்திருக்கிறது. எவ்வளவோ பழைய கொள்கைகள் தப்பு என்று நிரூபித்திருக்கிறது.

### முடிவாகாத விஷயங்கள்

ஆனால், 'சமூக விஞ்ஞானிகள் மனித இயல்பு, மனித இயக்கம் சம்பந்தமான எல்லா உண்மைகளையும் கண்டு பிடித்து முறைப்படுத்தி விட்டார்கள். மனித இயல்பு சம்பந்தமான ஏதாவது ஒரு விஷயம் தெரிய வேண்டுமானால் அந்த விஞ்ஞானப் புத்தகம் ஒன்றைப் புரட்டினால் போதும்' என்ற நினைப்பு உங்களுக்கு வந்துவிடக்கூடாது. அவர்களுடைய ஆராய்ச்சியில் சில விஷயங்களை அவர்கள் கண்டிருந்தாலும் இன்னும் பல விஷயங்கள் புரியவில்லை. அவைகளில் சில இவை:'

1. சமூகப் பண்பாட்டுக்கும் தனி மனிதனின் குணாதிசய வளர்ச்சிக்கும் உள்ள தொடர்பு என்ன? சமூகம் எவ்வளவு பெரியதாக வளரும் வரையில் மனிதர்கள் ஒரு

வரோடு ஒருவர் பழக வசதியாக இருக்கும்? அது எதற்கு மேல் வளர்ந்தால், மனிதர்கள் ஒருவருக்கொருவர் தொடர்பற்று மனித இயல்பை இழப்பார்கள்?

2. தனி மனிதனுக்குச் சுதந்திரம் சமூகத்துக்குப் பொருள் சுபிட்சம் இரண்டும் கிடைக்கவேண்டுமானால், பொருளாதார முறை எப்படி இருக்கவேண்டும்?

3. அதிகாரம் ஏற்ற தலைவர்கள் ஒழுக்கம் குலையாமல் இருக்கும்படி தடுப்பது எப்படி?

4. சட்டசபை, ஐ. நா. சபை முதலியவற்றில் வீண் ஆத்திரம் குறைந்து, விவேகம் நிறைந்த விவாதம் நடக்கும் படி செய்ய வழி என்ன?

5. தப்பை 'நியாயம்' என்று நினைக்கும் மயக்கம்தான் சகல தகராறுகளுக்கும் காரணம் என்று சமூக விஞ்ஞான ஆராய்ச்சியால் புலனாகிறது. அந்த மயக்கத்தைப் போக்கு வது எப்படி?

உலக ஆரம்பம் முதல் இதுவரையில் மனித இயல்பைப் பற்றித் தெரியாத பல உண்மைகளைச் சமூக விஞ்ஞான ஆராய்ச்சி வெளிப்படுத்திவிட்டது. இன்னும் ஒரு தலைமுறை இந்த ஆராய்ச்சி சுவாதீனமாக நடக்குமானால், இன்று விளங்காத இன்னும் பல பிரச்சினைகள் விளங்கிவிடும். யாரோ ஒருவருடைய மனோராஜ்யப்படி சமூகத்தைச் சீர்திருத்தமுடியாது. மனித இயல்பை ஒட்டியே அதைச் சீர்திருத்த முடியும். இப்படிச்சீர்திருத்துவதற்குரிய வழிகளைச் சமூக விஞ்ஞானிகள் இந்த தலைமுறைக்குள் கண்டு பிடித்து வார்கள் என்று நாம் நம்பலாம்! நம்பவேண்டும்! இதுதான் நம்மால் செய்யக்கூடிய செயல்!

# ௯

# மனமும் பாலுணர்வும்

## பால் வேறுபாடுகள்

விலங்கு இனமும், தாவரங்களிற் பலவும் ஆண் பெண் என இரு பால்களாகப் பகுக்கப்பட்டிருப்பதைப் பார்க்கின்றோம். இதனால் இனப்பெருக்கம் நடைபெறுகிறது. பிறக்கும் உயிர் ஆணும் பெண்ணுமாகிய இருவருக்கும் பிறக்காமல், ஒருவர்க்குமட்டுமே பிறப்பதாயின், அது தன் தாய் அல்லது தந்தையாகிய ஒருவரைப் போன்றே இருக்கும். 'பிறவிக் குணம்' என்று சொல்லப்படும் கொள்கைக்கு அது தக்க ஆதாரமாகிவிடக்கூடும். மேலும், ஒரே பிறவிக்குணம் பரம்பரைதோறும் தொடர்ந்து வந்துகொண்டே இருக்குமாதலால், உயிர்களின் வாழ்க்கையில் எவ்வகையான மாறுதலோ, முன்னேற்றமோ இருக்கமுடியாது. ஆனால் வேறு வேறான ஆண்பெண் ஆகிய இரண்டின் சேர்க்கையாலும் தோன்றும் மூன்றாவது உயிர், முன்னிரண்டையும் போன்று அல்லாமல், ஒரு தனிப்பிறவியாகத் தலை யெடுக்கின்றது.

## பால்வேறுபாடும் மனவேறுபாடும்

ஆகவே, இருபாலாருடைய பிறப்பு உறுப்புக்கள் அல்லது கோளங்களிலுள்ள வேற்றுமைதான், அவர்களிடையே நிலவும் உண்மையான உடல் வேற்றுமையாகும். இந்தக் கோளங்களின் சுரப்பினால்தான் அவரவருடைய உடல் வளர்ச்சியும், மன எழுச்சி அல்லது இயல்பும் ஆளப்படுகின்றன. கோளங்களின் அடிப்படை வேறுபட்டால் அவர்களுடைய மனத்திலும் உடலிலும் அதற்கேற்ற சில வேறு

பாடுகளும் நேர்கின்றன. அடிப்படையாகவுள்ள ஆண் பெண் குறிவேறுபாட்டைப்பற்றி இங்கு நாம் ஆராய வேண்டியது முதன்மையில்லை. அவ்வேறுபாட்டால் நேரும் உடல் இயல் மன இயல்களைப் பற்றியே கவனிப்போம். ஆண் பெண் இருவருடைய உடற்கூறுகளும் வெவ்வேறென்பது வெளிப் படையாகவே இருக்கின்றது. ஒரு பெண்ணை ஓர் ஆணின் அருகில் வைத்துப் பார்த்தால், அவன் அவளைக் காட்டிலும் மிகுதியான அழகு உடையவனாக இருப்பது மிகவும் தெளிவாக விளங்கும்.

## அழகு ஆணுக்குச் சொந்தம்

பறவைகளுக்குள் சேவல் பெட்டையைக் காட்டிலும் அழகியது. விலங்கினங்களுள்ளும் ஆண் சிங்கம் பெண் சிங்கத்தைக் காட்டிலும் அழகு வாய்ந்தது. ஆனால், இயற்கை அன்னை பெண்குலத்துக்கு இவ்வாறு நேர்ந்திருக்கும் குறையை மிகவும் அற்புதமாக விலக்குதல் செய்திருக்கிறாள். அழகு நிறைந்த ஆண், அழகு குறைந்த பெண்ணை நாடிச் செல்கிறது. பெண்மனத்தின் விந்தைக் குணங்கள் நமக்கு விளங்குவதில்லை. பார்த்த பார்வையில், ஆணுக்கும் பெண்ணுக்கும் அவர்களுடைய உடலின் வெளிப்புறத் தோற்றத்தில் சில வேறுபாடுகள் தோன்றும். அவள் கச்சும் தாவணியும் அணிந்து, நீண்ட சடை அல்லது வட்டக் கொண்டை ஒன்று போட்டு, மணப்பொடி பூசி, மையிட்டு, மின்னல் இடை குழைய, அன்ன நடை நடந்து செல்கிறாள். செயற்கை முறைகளால் தன்னை மேலும் அழகுபடுத்திக் கொள்கிறாள். முதுகெலும்புள்ளவற்றில் வேறு எந்த உயிர்க்கும் இல்லாத பெண்மைப் பண்புடன் ஒயிலாக விளங்குகின்றாள். அவளுடைய உள்ளம் அவளுடைய புறத்தோற்றத்தைக் காட்டிலும் எட்டி நிற்கிறது. பெண்பாலின் உள்ளம் ஆடவனுக்கு எக்காலத்திலும் ஒரு பெரிய மறைபொருளாகவும், விடைதெரியாத புதிராகவும் இருக்கிறது. பலர் அவளுடைய மனத்தின் மறைவுகளைக் கண்டு கொள்வதற்குரிய திறவுகோலைத் தாம் கண்டுவிட்ட

தாகப் பெருமை அடித்துக்கொள்வார்கள். ஆனல், அவர்களுடைய பெருமையெல்லாம் அவர்களுடைய சொந்தக் கருத்துக்களும், கற்பனைச் சரடுகளுமே தவிர உண்மையை அடிப்படையாகக் கொண்டவையல்ல.

## ஆண்மனமும் பெண்மனமும்

ஓர் ஆடவனுடைய மனப்போக்கும், பெண்ணினுடைய மனப்போக்கும் வெவ்வேருக இருப்பதற்குக்காரணம் சமூகத்தின் அமைப்பே என்று சிலர் சொல்கிருர்கள். "ஆடவர் போர்முனைக்குச் செல்கிருர்கள். நாடுவிட்டு நாடு போய்ப் பொருள் ஈட்டுகிருர்கள். ஆனல் பெண்டிரோ வீட்டிலே இருந்து பிள்ளைகளைப் பெற்றுப் பேணி வளர்க்கின்ருர்கள். எனவே, பெண்கள் ஒரு தனி அமைப்பாகி விடுகிருர்கள். ஆண்கள் மற்ருெரு கூட்டமாகி விடுகின்ருர்கள். பிறகு. ஒவ்வொரு கூட்டத்தின் வெவ்வேறு தொழிலுக்கும் தக்கவாறு அவரவர்களுடைய பழக்க வழக்கங்கள் மாறி அமைகின்றன. ஒரு வேளை பிற்கால நாகரிகத்தில் இரு கூட்டத்தவர்க்கும் ஒப்புமை ஏற்பட்டு, ஒரேவகைக் கல்வி, ஒரே வகை ஆடை, அலுவல் முதலியன ஏற்பட்டால், இப்போது அவர்களுக்குள் காணப்படும் இந்த மன வேற்றுமைகள் எல்லாம் நீங்கிவிடலாம். ஆகவே இப்போது நாம் காணும் இவ் வேற்றுமைகள் எல்லாம் மேற்பரப்பில் உள்ளவைகளே. பயிற்சியாலும் பழக்கத்தாலும் ஏற்பட்டவைகளே. இவை உண்மையானவையல்ல என்கிருர்கள்" சிலர்.

## ஆணியலும் பெண்ணியலும்

ஆண்களும் பெண்களும் ஒரேவகையான உடற்கூறு உடையவர்கள். ஆனல் பெண்கள் பூப்பு அடையும்போது அவர்களுடைய பிறப்பு உறுப்புக்களில் ஏற்படும் மாறுதல் காரணமாக, அவர்களுடைய உடல் வளர்ச்சி குன்றுகிறது என்று சிலர் சொல்லுகிருர்கள்.

வேறு ஒரு கொள்கையும் இருக்கின்றது. பிறப்பு முதலே ஆண் பெண் உடல்களின் ரசாயன அமைப்பிலும் வேற்றுமை உண்டு. ஆண் கரு சின்னதாகவும் சுறுசுறுப்பாகவும் இருக்கும். பெண் கரு பெரியதாகவும் மந்தமாகவும் இருக்கும். கருவிலேயே காணப்படும் இந்த வேற்றுமை தொடர்ந்து வந்து அவர்களுடைய உடற்கூறுகளும் இயல்புகளும் வெவ்வேருக இருக்கும்படி செய்துவிடுகிறது. அவன் சுறுசுறுப்பாக இருக்கிருன்; அவள் மந்தமாக இருக்கிருள். அவன் காரசாரமானவன்; அவள் விளையாட்டுப் பெண். அவன் புதிய புதிய துறைகளை வகுக்கிருன்; அவள் அவைகளை ஏற்கிருள். அவன் ஆழ்ந்து சிந்தித்து எதையும் முடிவு செய்கிருன்; அவள் ஒன்றனைக் கண்டமாத்திரத்தில் அல்லது கேட்டமாத்திரத்தில் உணர்ச்சி அடைந்து விடுகிருள். அவன் தன்னைப்பற்றி அக்கறையுடையவன்; அவள் குழந்தை வளர்ப்பில் அக்கறையுடையவள். உடல் கூற்றில் ஒருவர்க்கொருவர் தாழ்ச்சியில்லை. அதுபோலவே மனக்கூற்றிலும் அவர்களுக்குள் தாழ்ச்சி கிடையாது. ஆனல், ஆண்இயல் என்பது வேறு; அதற்கு எதிர்மறையான பெண் இயல் என்பதும் வேறு. இதை நாம் தெளிவாக உணர வேண்டும்.

இக்கொள்கைகளைப் புடமிட்டுச் சோதித்துப் பார்த்தாலன்றி மனவியலார் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். தற்காலம் மன இயலின் வேறுபாடுகளைத் திட்டவட்டமாகவும், எளிதாகவும் அளந்தறிவதற்குரிய தகுதித் தேர்வுகள் பல இருக்கின்றன. அவற்றின்படி ஆயிரக்கணக்கான சிறுவர்களும் சிறுமிகளும், ஆடவரும் பெண்டிரும் சோதிக்கப்பட்டிருக்கிருர்கள். அத் தேர்வுகளின் முடிவுகள் திட்டவட்டமாக எடுக்கப்பட்டிருக்கின்றன.

முதலாவது, மனநிலையின் அடிப்படியிலிருந்து தொடங்கிச் செல்வோம். ஆண் பெண்களுடைய உடல் வன்மையில் உள்ள வேற்றுமையைப் பற்றி ஐயப்பட ஏதுமில்லை. இன்றைக்கு ஐம்பதாண்டுகளுக்கு முன் நடத்திய ஆராய்ச்சியில், பொதுவாக ஓர் ஆண் ஒரு பெண்ணைக்

காட்டிலும் இருமடங்கு வலிமையுடையவன் என்று நிறுவப்பட்டது. இக் காலத்திலே சிறுமிகளும், சிறுவர்களைப்போல ஓடுதல் நீந்துதல் ஹாக்கி முதலிய பந்தாட்டங்கள் ஆடுதல் காரணமாக, அவர்களுடைய உடல் வலிமையுற்று வருகின்ற தென்பதை நாம் மறுக்க முடியாது. உடல் உரத்தால் செய்யக்கூடிய நுட்பவேலைகளில் பெண்களே சிறந்தவர்கள். திக்கல், கொன்னல், ஓரப் பார்வை, இடக்கைப் பழக்கம் முதலிய நுண்தசைக் கோளாறுகள் பெண் இனத்தைக் காட்டிலும் ஆண் இனத்துக்கே மிகுதி. ஆனல், பழக்கம் அல்லது பயிற்சியின்றியே செய்யக்கூடிய கைவேலையில் ஆடவர்களே சிறந்தவர்கள் என்பது ஆராய்ச்சிச் சாலையின் தேர்வு முறையால் வெளியாகி இருக்கிறது.

## சகிப்புத்தன்மை உடையவர்கள் !

நோவைப் பொறுப்பதில் யார் தேர்ந்தவர்கள்? ஆடவரா, பெண்டிரா என்பதைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் பல இருக்கின்றன. அறுவை முறை மருத்துவம் செய்வோர், பல்வைத்தியர்' நர்சுகள் ஆகியோர் 'பெண்களே ஆண்களைக் காட்டிலும் பொறுமையோடு நோவைப் பொறுத்துக் கொள்கிருர்கள் என்று ஒரு முகமாகவே சொல்கிருர்கள். இருபாலருடைய புலன் உணர்விலும் வேற்றுமை யிருப்பதுதான் இதற்குக் காரணம் என்று சொல்ல முடியாது. துன்பத்தை ஏற்பதில் பெண்களுக்குள்ள மனப்பான்மையும், பழக்கமுமே இவ் வேற்றுமைக்குக் காரணமாகலாம். இராமாயணத்திலே உறங்கிக் கொண்டிருந்த கைகேயியை மந்தரை போய்த் தொட்ட மாத்திரத்தில், அவள் கண்விழித்துப் பார்க்காமலே, தனக்குப் பழக்கமான புலன் உணர்ச்சியால் தன்னைத் தீண்டுபவள் வேறுயாருமில்லை மந்தரைதான் என்று அறிந்து, அவளோடு உரையாடத் தொடங்கினுள் என்று கம்பர் குறிப்பிட்டுள்ளார். ஆம்; தற்கால ஆராய்ச்சிச் சாலையில் பெண்கள் ஆண்களைக் காட்டிலும் தொடுதற்புலனை நுட்பமாக அறிந்து சொல்ளக்

கூடுமென்றும், தொடுதலை நுட்பமாக அறிந்து கொள்வது போலவே, நோவையும் அமைதியோடு பொறுத்துக் கொள்கிருர்கள் என்றும் கண்டிருக்கின்ருர்கள்.

## புலன்களின் விந்தை

ஆகவே, நோவை அவர்கள் தாங்குவதற்குக் காரணம் அவர்களுடைய உடல் இயலேயன்றி மனஇயல் அல்ல. குளிரைத் தாங்குவதற்கு அவர்களுக்கு ஆண்களைக் காட்டிலும் குறைந்த அளவு ஆடையே போதும். ஏனென்ருல், அவர்களுடைய உடலினுள் உள்ள நிணப் போர்வை ஆண்களுடைய நிணப் போர்வையைக் காட்டிலும் தடித்திருப்பதே அதற்குக் காரணம். பெண்கள் மணம், சுவை ஆகிய புலன்களை ஆண்களைப் பார்க்கிலும் விரைவில் அறிந்துகொள்ளும் ஆற்றல் உடையவர்கள் என்றும், ஆடவர்கள் மணம் சுவை ஆகிய புலன்களின் பண்பை நன்கறியக் கூடியவர்கள் அல்லர் என்றும் உளஇயல் ஆராய்ச்சியின் மூலம் கண்டிருக்கின்ருர்கள்.

## கேள்வியும் பார்வையும்

ஐம்புலன்களிலும், கேள்வி பார்வை ஆகிய இரண்டு புலன்களுமே மிக உயர்ந்த புலன்கள். இவ்விரண்டு புலன் களிலும்கூட ஆணுக்கும் பெண்ணுக்கும் வேற்றுமை மிகுதியாயில்லை. ஒலிகளையும் நிறங்களையும் அறிவதில் பெண்கள் சிறந்தவர்கள். வடிவங்களையும், உருவங்களையும் அறிவதில் ஆண்கள் பெண்களை மிஞ்சி விடுவார்கள். பார்வைக் குற்றத்துக்காக மூக்குக் கண்ணுடி அணிய வேண்டியவர்கள் தொகை பெண் பாலரில்தான் மிகுதி. ஆனல், தமது முகத்தழகு குன்றி விடுமென்றுதான் பெண்களிற் பலர் கண்ணுடி அணிந்து கொள்வதில்லை. முழுக் குருடு ஆண்களுக்குள் மிகுதி. ஆனல் இது அவர்கள் வெளியேபோய்த் தீங்குதரும் துறைகளில் ஈடுபடுவ தால் ஏற்படுவதேயன்றி அடிப்படையான கண் குற்றத்

தாலன்று. நிறக் குருடு ஆண்களுக்குள் இயல்பு. முப்பது பேருக்கு ஓர் ஆணும், ஆயிரம் பேருக்கு ஒரு பெண்ணும் நிறக் குருடு உடையவர்கள். நிறக்குருட்டின் வரலாறு விந்தையாக இருக்கின்றது. நிறக்குருடு உடைய ஓர் ஆடவன் குற்றமற்ற பார்வையுடைய ஒரு பெண்ணை மணந்தால் அவர்களின் பெண்குழந்தைகளுக்கு நிறக்குருடு ஏற்படாது. ஆனால் அந்தப் பெண் குழந்தைகள் நல்ல பார்வையுடைய ஆடவரை மணந்து கொண்டால், அவர்கள் இருவருக்கும் பிறக்கும் குழந்தைகளுக்கு நிறக் குருடு சிலசமயம் ஏற்படக்கூடும்.

## நினைவாற்றலும் கற்பனையும்

இனி, இருபாலருடைய நினைவாற்றல் கற்பனை வலிமைகளிலும் வேறுபாடு இருக்கின்றதா என்று காண்போம். நினைவாற்றல் தேர்வுகளில் பெண்களே முதன்மையாக விளங்குகிறார்கள். நெட்டுருப்பண்ணி எதையும் ஒப்பிப்பதிலும் ஆண்கள் அவர்களை வெல்ல முடியாது. கற்பனை செய்வதில் பெண்கள் சிறு குழந்தைகளைப் போன்றவர்கள். ஆண்களுடைய கற்பனை வலிமையோ புதுமைகளைக் கண்டு பிடிப்பதற்கு வேண்டிய ஆக்கத்திறன் வாய்ந்ததாகும்.

ஆகவே, நாம் காண்கின்ற பொதுவான உண்மை என்னவென்றால், கற்கும் பொருள்களைக் கைப்பற்றும் ஆற்றல் பெண்களுக்குண்டு. தாம் முன் கற்றறியாத புதிய பொருள்களைத் தாமாகவே கண்டறியும் புதுமையாற்றல் ஆண்களுக்குண்டு. தெளிவான நினைவுடன் அன்றாட வேலைகளைப் பொறுமையோடும், முழு மனத்தோடும் செய்யும் இயல்புடையவர்கள் பெண்கள். ஏதேனும் புதிய துறையில் ஆராய்ச்சி செய்யவேண்டும் என்றால், அதற்கு ஆடவரே தலைசிறந்து விளங்குகின்றார்கள். பெண்கள் பழக்கத்திலுள்ள தையல் பொறி, நெசவு தறி, மாவு பொடி அறைக்கும் எந்திரங்கள் யாவும் ஆடவர்களால் கண்டு பிடிக்கப் பட்டவைகளே யாகும்.

மேற்கூறிய இச் சான்றுகளின் மூலம் நாம் காணும் உண்மை என்ன? அறிவுக் கூர்மையிலும் சூழ்ச்சியிலும் ஆண்பெண் இருபாலர்க்கும் அதிக வேறுபாடு இல்லை. பொதுப்பட்ட வாழ்க்கையில் பெண்களுடைய தருக்க அறிவு மட்டமாக இருப்பதற்குக் காரணம், அவர்கள் யோசனையில் குறைந்தவர்கள் என்பதனுலல்ல. அவர்கள் எளிதாக மன எழுச்சியடைந்து விடுபவர்கள். கற்பனை வலிமையால் உந்தப் படுபவர்கள். இரக்கம்கொண்டு விடுபவர்கள். எனவே, மனத்தின் இயல்புகள் எல்லாவற்றிலும் இருபாலார்க்கு மிடையே குறிப்பிடத்தக்க வேற்றுமை எதுவும் இல்லை என்றும், சிறுசிறு வேறுபாடுகளே உளவென்றும் அறியலாம்.

## புகழ் பெற்றவர்கள் கணக்கு

இந்த முடிவை மறுக்கிறவர்கள் தமது கூற்றுக்குப் பெரும் பாலும் வரலாற்றை ஆதாரமாகக் காட்டுகின்றனர்கள். மேன்மக்களில் ஆயிரம் பேரில் முப்பத்திரண்டு பேர்தாம் பெண்கள். சிறுபான்மையான இவர்களிலும்கூடப் பலர் இலக்கியத்துறையில் பேர்பெற்றவர்களே யாவர். சிலர் தமது அழகினுல் புகழ்பெற்றவர்கள். மற்றைச் சிலரோ அரிய பிறவிகள். இவ்வாறு வகுத்துக் கூறுவதில் இரண்டு பெருந்தவறுகள் இருக்கின்றன. முதலாவது, வரலாறு விஞ்ஞானம் போன்ற துறைகளில் ஈடுபட்டு உழைப்பதற்கு அவர்களுக்குப் போதிய வாய்ப்பு அளிக்கப்படவில்லை. இரண்டாவது, இந்த ஒரே காரணத்தை வைத்தே நாம் ஒரு முடிவைக் கூறிவிடுவதும் பொருந்தாது. ஆடவர்களுக்குள் ளேயே மனிதனுக்கு மனிதன் எவ்வளவோ வேற்றுமைகள் இருப்பதை நாம் பார்க்கின்றோம். எத்தனையோ பேரறிஞர் களும் வள்ளல்களும் தோன்றிய ஆண் சமூகத்தைச் சேர்ந்த பலர் சிறைக்கோட்டங்களிலும் பைத்திய மருத்துவச் சாலை களிலும் அடைபட்டுக் கிடக்கின்றனர்களே! ஆகவே, இவ்விரு திறத்தாரிடையே பிறப்பில் என்ன வேற்றுமை இருக்கிற

தென்பதைக் கணித்தறிவதற்கு உளவியல் முறையைத் தழுவிச் செய்யப்படும் நுட்பமான சோதனையே ஏற்ற கருவியாகும். இத்தகைய சோதனைகளின் ஒருமுகமாக முடிவு என்ன வென்றால், இருபாலாரிடையேயும் அவர்களுடைய பொதுவான அறிவுக்கூர்மையில் வேற்றுமை ஏதும் இல்லை என்பதேயாகும்.

## படிப்பும் ஆணும் பெண்ணும்

ஆனால் படிப்பும், பயிற்சியும் பெற்ற பிறகு அவ்விருவருடைய உளவியலிலும் வேறுபாடு காணப்படுகிறது பெண்கள் வாசித்தல், கட்டுரை எழுதுதல் முதலிய இலக்கியப் பாடங்களில் மிகத்தேர்ச்சியாக இருக்கிறார்கள். பையன்கள் கணக்கில் மிகத்தேர்ச்சியாக இருக்கிறார்கள்• கணக்கிலும்கூட, வாய்பாடுகளைப் படித்து, அடிப்படை முறைகளை ஒட்டிச் செய்யப்படும் கணக்குகளில் பெண்களே நுட்பமானவர்கள். விதிகளையும், அட்டவணைகளையும் பிழையில்லாமல் அவர்கள் ஒப்பித்துவிடுவார்கள். அடைபடாத பெரும் கணக்குகளைச் செய்வதில் பையன்கள்தாம் தேர்ந்தவர்கள். இலக்கண இலக்கியங்கள் மலிந்த பழைய மொழிகளைப் படிப்பதில் பையன்களுக்குத் திறம் மிகுதி. பூகோளம், பௌதிகம், ரசாயனம், சிற்பம் முதலிய நூல்களில் பையன்களும், வரலாற்றிலும் தாவரம் முதலிய உயிர்க் கல்விகளிலும் பெண்களும் தேர்ந்தவர்களாயிருக்கிறார்கள்! பாடசாலைகளில் மட்டுமல்ல; கல்லூரிகளிலும் இதே வேறுபாட்டைக் காணலாம். ஆனால் பையன்களும் பெண்களும் சேர்ந்து படிக்கிற பாடசாலையிலே, ஒரே சோதனை முறைகளைத் தழுவிக் கற்பித்து வந்தால், இந்த வேற்றுமைகளும் கூட மிகவும் மறைந்துவிடுகின்றன. எனவே, இந்த வேறுபாடுகளுக்குக் காரணம் அவர்களுடைய மனத்தின் இயல்பல்ல. அவரவர்க்குள்ள விருப்ப மனப்பான்மைதான். அதாவது, அவரவருடைய இயல்பும் சூழலும்தான் காரணமே தவிர, திறமை வேறுபாடு அல்ல என்று கூறலாம்.

## உணர்ச்சி வேறுபாடுகள்!

வெளிப்படையாகப் பார்த்தால், பெண்கள் ஆண்களைக் காட்டிலும் உணர்ச்சி வசப்படுகிறவர்கள் போலத் தெரியும்! நொடிப்பொழுதில் பெண்கள் கண்ணீர் வடித்துவிடுவார்கள். மளமளவென்று வார்த்தைகளைப் பொரிந்து விடுவார்கள். ஆனால் கூர்ந்து கவனித்தால் ஆடவருடைய உணர்ச்சிகள் மறைவானவை; ஆழமானவை; நெடுங்காலம் நிற்பவை. நீர் நிலைமேல் சிற்றலைபோல அவளுடைய உணர்ச்சிகள் ஆழமற்றுப் பரந்து செல்பவை; சிறிது நேரத்தில் அற்றுப் போகக்கூடியவை. அவனுடைய உணர்ச்சிகள் அசைவற்று, வற்ருது நிற்கின்ற ஆழமான குளம் போன்றது. சண்டையிடுதல், தலைமையேற்று நடத்தல், ஊர் சுற்றுதல், வேட்டையாடுதல், கட்டுதல் முதலிய தூண்டுதல்கள் ஆடவர்கள்பால் வலிமை பெற்றுள்ளன. சோகம் கொள்ளுதல், அச்சம், இரகசியத்தைத் தெரிய விரும்புதல், தாய்மை, தானுகவே பணிதல் முதலிய தூண்டுதல்கள் பெண்களிடம் வலிமை பெற்றுள்ளன. இருபாலாருடைய காமபபற்றையும் பற்றி நாம் பொதுவான ஒரு முடிவு கூறுவது என்பது எளிதற்றதாக இருக்கின்றது. அறிஞர் பெர்னுட்ஷா 'மகனும், மேன் மகனும்' என்னும் தமது நூலில், "ஆடவன்தான் பெண்ணைத் துரத்திச் செல்கிறுன்" என்ற பத்தொன்பதாம் நூற்ருண்டுக் கொள்கையை விளக்கியிருக்கிறுர். வேறு சில நூலாசிரியர்களும், அவரைப் போன்ற கருத்துடையவர்களாகவே இருக்கின்றுர்கள். மருத்துவ உளவியற் புலவர்களிடையே நிலவும் கருத்து இது. மிகுந்த காமி என்று சொல்லக்கூடிய ஓர் ஆடவனைக் காட்டிலும், மிகுந்த காமியான பெண் காமம் மிக உடையவளாக இருப்பாள். காமத் தாழ்ச்சி உடையவன் என்று சொல்லக்கூடிய ஓர் ஆடவனைக்காட்டிலும், காமத் தாழ்ச்சியுடைய ஒரு பெண் பின்னும் குறைந்த காமம் உள்ளவளாயிருப்பாள். ஆகவே, காமமிகுதியிலும், காமக்குறைவிலும் பெண்ணே உணர்ச்சி முன்னணியில் நிற்பதையும் பார்க்கிறேம்.

## மனச்சான்றுக்குப் பயப்படுகிறவர்கள்!

நன்னெறித் துறையிலே பெண்களே ஆண்களைக் காட்டிலும் மனச்சான்றுக்குப் பயந்து ஒழுகுபவர்கள். இதில் ஒரு வியப்பு என்னவென்றால், இப்பெண்கள்தாம் ஆண்களைக் காட்டிலும், மனச்சான்றை மீறி நடக்கத் துணிபவர்களாகவும் இருக்கிறார்கள். எனினும், இவ்விரு பாலாரிடையேயும் ஒரு பெரிய வேறுபாடும் இருக்கின்றது. அதாவது, எல்லா நாடுகளிலும் எல்லா நூற்றாண்டுகளிலும் வாழ்க்கையின் எந்தப் பருவத்திலுமே ஆறு குற்றத்துக்கு ஒரு குற்றம்தான் பெண்ணால் செய்யப்படுகின்றன என்று சொல்லப்படுகிறது. ஆடவர்கள் வாழ்க்கைத் துறைகளில் முன்னதாக நிற்கும் இயல்புடையவர்கள். ஆகையால்தான் ஒதுங்கிப் பின் நிற்கும் பெண்களைக் காட்டிலும், அவர்களுக்குச் சட்டத்தை மீறும் வாய்ப்புக்கள் மிகுதியாக இருக்கின்றன. இயல்பாகவே ஆடவர்கள் மிகக் கெட்டவர்கள் போலும் என்று நினைப்பது பொருந்தாது!

## பொருளாதாரத்தில் பெண்ணியல்பு

இனிப் பொருளாதாரத் துறையில் பெண்களின் நிலையை ஆராய்வோம். அவள் கூர்மையான மனச்சான்று உடையவள். பொருள்களைக் கைக்கொள்ளும் ஆர்வம் மிகவும் படைத்தவள். ஓரிடத்திலேயே அமர்ந்திருந்து வேலைகளைச் செய்வதற்கு இணங்குகின்றவள். இவைகள் சிலவகை வாழ்க்கைக்கு வெற்றியான நல்ல பண்புகள். தோல்வியான சில இயல்புகளும் அவளிடம் இருக்கின்றன. அவள் உணர்ச்சி வயப்பட்டுப் பிறரைச் சார்ந்தே நிற்பவள். சிக்கலான எண்ணங்களும் உணர்ச்சிகளும் உடையவள். புதிதாக ஒன்றைத் தொடங்கிச் செய்ய அறியாதவள். அவளுடைய ஆட்சியாற்றல் மிகமிகக் குறைவு. தன் நிலைக்கேற்பச் சாதனை செய்யும் திறன் இல்லாதவள். இக்குறைகளால் வாணிபத்துறையில் அவள் தலையிட முடியவில்லை. என்றாலும், பொதுவாக, மனிதனுடைய அறிவைத்திருத்திப்

பெருக்கிக் கொள்வது எப்படி முடியக்கூடியதோ, அவ்வாறே பெண்பாலருடைய இக்குறைகளையும் திருத்தி வெற்றி கொண்டுவிடக்கூடும். ஆண்களில் ஒரு சிலரைப் போலவே, பெண்களிலும் ஒருசிலர் ஒருவேளை தகுதியற்றவர்களாக இருக்கலாம். ஆனால், அவள் பெண்ணாகப் பிறந்துவிட்ட அந்தக் காரணத்தாலேயே அதற்குத் தகுதியாகமாட்டாள் என்று ஒதுக்கிவிட முடியாது. அவளுடைய உடற்கூற்று இயல்புகள் மாற்ற முடியாதவை. அவளால் முரட்டு வேலைகளைச் செய்ய முடியாது. தொடர்ந்து கடும் உழைப்புச் செய்யவும் அவளால் முடியாது. அடிக்கடி முடங்கிக் கொள்வாள். இக் காரணங்களால் அவளை 'மெல்லியல்' என்பதும் பொருத்தமே! எனினும், புதிய அறிவியல் முறைகளை ஒட்டி வளர்க்கப்பட்டால் அவள் மனித வாழ்க்கையின் உரிய சம பங்கை ஏற்பதில் எவ்வகைத் தடையும் இராது என்று உறுதியாகக் கூறலாம்.

## புதுமைப் பெண்

நிலைமைகள் வெகுவிரைவாக இப்போது மாறி வருகின்றன. முற்காலங்களிலே ஒரு தாய் வீட்டுப்பணி செய்து பிள்ளைகளை வளர்த்து வந்தாள். தற்காலத்தில் அவளுடைய வேலை மிகவும் குறைந்துவிட்டது. பிள்ளைகளுக்குப் பயிற்சி அளிப்பதைப் பள்ளிக்கூடங்கள் ஏற்றுக்கொண்டுவிட்டன. அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு ஆண்களிடமிருந்து போலீசாருக்குக் கைமாறிவிட்டது. வீட்டு வேலைகளைச் செய்ய வேலைக்காரிகள் இருக்கிறார்கள். மற்றும் பல வேலைகளைப் பொறிகள் செய்து தருகின்றன. எனவே புதுமைப்பெண் வேறு துறைகளில் கவனம் செலுத்துவதற்கு இப்போது போதிய ஓய்வு இருக்கின்றது. ஆகவே, அவள் கார் ஓட்டுகிறாள், வானூர்தியில் பறக்கிறாள், வேட்டைக்குப் போகிறாள், மருத்துவம் செய்கிறாள், வக்கீல் தொழிலும் செய்கிறாள். இனி, வாணிபமும் செய்வாள், சில நாட்களுக்கு முன்னே லண்டன் துறைமுகத்துக்கு வந்த ஒரு கப்பலை

ஓட்டிவந்தவள் ஒரு ரஷ்யப் பெண். எனவே, பெண்ணுல் செய்யக்கூடாத காரியம் உலகில் ஒன்றுமே இல்லை.

### கல்வியும் பாலியலும்

பொதுவாக, ஓர் ஆணுக்கும் ஒரு பெண்ணுக்கும் இருக்கும் வேறுபாட்டைக் காட்டிலும், ஓர் ஆணுக்கும் மற்றோர் ஆணுக்கும், ஒரு பெண்ணுக்கும் மற்றொரு பெண்ணுக்கும் இருக்கும் வேறுபாடுதான் மிகுதி. ஆணுக்கும் பெண்ணுக்கும் உளவியலில் குறைந்த வேற்றுமைதான் உண்டு. ஆகவே ஒரு பிள்ளைக்கு எப்படிப்பட்ட கல்வி கொடுப்பது என்ற கேள்வி எழும்போது, ஆணு பெண்ணு என்று கவனிக்கக்கூடாது. ஆனல் அவனுடைய விருப்பமும் தகுதியும் எவ்வகைக் கல்விக்கு ஏற்றவை என்றே கவனித்து முடிவு செய்தல் வேண்டும் இனி, வருங்காலத்தில் பெண்ணினுடைய மனவியலைக் கருதாமல், சமூகத்தினுடைய தேவைக்கும் அவளுடைய குறிக்கோளுக்கும் ஏதுவாகவே அவளுக்குப் பயிற்சி அளிக்கப்படும் என்று எதிர்பார்க்கலாம். இன்னும் அரை நூற்றுண்டுக்குப் பிறகு பெண்ணுலகம் என்ன நிலையில் இருக்குமென்பதைச் சொல்வதற்கு திரிகால ஞானிகளால்தான் முடியும். அவ்வளவு வேகமாகப் பெண்ணுலகம் முன்னேறி ஆணுலகத்தோடு போட்டி போட்டு வேகமாக வளர்ந்துவருகின்றது!

[மனம் செய்யும் வேலைகளிலே சிக்கல்கள் ஏற்படும்போது, மனச்சோர்வுகளும் குழப்பங்களும், முடிவில் மனநோய்களும் உண்டாகின்றன. உளவியல் மரபு இவற்றை அறிந்து எளிதாக மாற்றி மனதைச் செம்மைப்படுத்த உதவுகின்றது. அவைபற்றிய செய்திகள் இப் பகுதியில் காணப்படும்.]

## இரண்டாம் பகுதி

# மன நோய்களும் மனித வாழ்வும்!

# 10

# மனநோய் ஆராய்ச்சி

இதுவரை மனத்தின் பொதுநிலே, மனத்தின் தன்மை, அதன் செயல்முறை ஆகியவைபற்றிய பொதுவான தகவல்களேப் பார்த்தோம். இனி, இந்த நூற்ருண்டில் வளர்ந்து பெருகியுள்ள உளநோய்க் கூற்றியலின் தொடக்க நிலேயையும், வளர்ச்சியினேயும் பற்றிக் காண்போம்.

## உளநோய்த் துறை

உளநோய்க் கூற்றியல் என்பது, உளவியல் விதிகளேயும் நியதிகளேயும் கொண்டு உளக்கோளாற்றுப் பிரச்சினேகளே விளக்க முயல்கின்ற அறிவியல் துறையாகும். அறிவியல் துறைகளோடு ஒப்பிடுமிடத்து, இஃது அண்மைக் காலத்தில் தோன்றியதே எனலாம். பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியிலே இத்துறை அறிவியல் துறையாகத் தோன்றி வளரத் தொடங்கியது. மெஸ்மரும் பிறரும் தோற்றுவித்த குறிப்பிடத்தக்க முயற்சிகளே இதற்கு ஊக்கமளித்தன. இதற்கு நூறுஆண்டுகட்கு முன்னரே இத்துறையில் ஆர்வம் மிகுந்தது. ஆனுல், பின்னர்த் தோன்றிய ஆராய்ச்சி யாளர்கள் இந்நிகழ்ச்சிகள் காந்தங்களால் தோன்றுவன வல்ல எனவும், அவை இயக்குநரின் கருத்தேற்றங்களால் தோன்றுகின்றன எனவும் நிருபித்தனர். இக் கருத்தேற்றங்கள் ஓர்வகை உளநிலேயைத் தோற்றுவிக்கும் காரணிகள் என்பதும் தெளிவாயிற்று. இதன் மூலமாக விளேயும் உளவியல் காரணங்கள், உடலிலும் உள்ளத்திலும் திட்ட வட்டமான மாற்றங்களே தோற்றுவிக்கக்கூடியன என்பதும் தெரியவந்தது.

ஆயினும், சார்கோட்டின் காலம் (1825—93) வரையிலும், இக்கருத்தினை நோய்பற்றிய பிரச்சிகளுக்குப் பயன்படுத்த முடியும் என்பது தெரியாது. சில உடற்கோளாறுகள், எண்ணங்களின் விளைவுகளால்தாம் எழுகின்றன என்னும் கருத்தை முதலில் வெளியிட்ட பெருமை சார்கோட்டையே சாரும். அவரது கருத்தே உளநோய்க் கூற்றியலின் அடிப் படை என்று கூறலாம். இவரது கருத்தைத் தொடர்ந்து பல ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. அவை ஹிஸ்டீரியா, உடல் உளம் ஆகியவற்றின் சோர்வு நிலை, இன்னும் இவை போன்ற நிலைகள் என்பவற்றை உள்ளடக்கும் செயல் சார்ந்த நரம்புக் கோளாறுகள் பற்றிய அறிவை மிக வேகமாக விரிவடையச் செய்தன. இவ்வகை நோய்களைத் தோற்றுவிப்பதில் பல்வேறு உளக் காரணிகள் முதன்மை யான பங்கு வகிக்கின்றன என்பதும் விரைவில் தெரிந்து கொள்ளப்பட்டபோது, அவற்றின் பங்கினைத் திட்டவட்ட மாக வரையறுத்துக் காணும் முயற்சி தோன்றியது. பங்கு பெறும் உளக்காரணிகளுள், கருத்தேற்றத்திற்கு முக்கிய மான இடம் தரப்படவேண்டும் என்பதும் தெளிவாயிற்று. அதாவது நோயாளியின் உள்ளத்தில் சில எண்ணங்களையும் நம்பிக்கைகளையும் வேரூன்றச் செய்வதிலும், அதன் விளைவாகப் பல்வேறு அறிகுறிகள் உலைவுகளைத் தோற்று விப்பதிலும் கருத்தேற்றம் முக்கியமான பங்கு வகிக்கிறது என்பதாம். ஆயினும், கருத்தேற்றம் என்பது மிகத்தெளி வற்றதும், பொதுவானதுமான செயலாகையால், நுணுக்க மிக்க கோளாறுகளை நல்ல முறையில் அதனுல் விலக்க முடிவதில்லை. எனவே, இக்கோளாறுகளின் நிகழ்வுத்தன்மைக் காகத் தெளிவுபடுத்தக் கூடியதும், கருத்தேற்றம் எவ்வாறு பலன் தருகிறது என்பதை விளக்குவதுமான புதிய உளவியல் விதிகளைக் காண முனைந்தனர்.

### உளச்சிதைவும் உளக்கோளாறும்

'உளச்சிதைவு' பற்றிய தமது கருத்தினைக் கொண்டு, சானே என்பவர் முதன்முதலில் இவ்வகையில் குறிப்பிடத்

தக்க முன்னேற்றத்தைக் காட்டினர். சென்ற நூற்றுண்டின் இறுதியில் நடத்தப்பட்ட சிறப்பான பல ஆராய்ச்சிகளினின் றும் இக்கருத்துத் தோன்றியது. உளநோய்க் கூற்றியலின் வளர்ச்சியில் இக் கருத்து அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்த ஓர் எல்லைக் கல்லாகவும் அமைகிறது. 'நனவுநிலை' என்பது எப்பொழுதும் சீரானதாக ஒரே ஓடையாக மட்டுமே இருக்கவேண்டியதில்லை எனவும், சில வேளைகளில் அது சுயமாக இயங்கும் பல பகுதிகளாகச் சிதைவுற முடியும் எனவும், இவ்வாறு தோற்றுவிக்கப்படும் உளச்சிதைவு எண்ணிறந்த நிகழ்ச்சிகளை விளக்கக்கூடியது எனவும் சானே காட்டினர். மேலும், ஹிஸ்டீரியா, பிற கோளாறுகள் ஆகிய வற்றில் மட்டுமன்றி, நமது அன்றாட வாழ்விலுள்ள பல செயல்களையும் அதைக்கொண்டு விளக்கமுடியும் எனவும் அவர் காட்டினர். பல நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ள ஒரு கருவியாக இக்கருத்து அமைந்தாலும், நம்மை ஓரளவு தூரம் மட்டுமே இக்கருத்தால் இட்டுச்செல்ல முடியும். இந்த உளச்சிதைவுகள் ஏன் எழுகின்றன? இந்தக் கேள்வி இக்கருத்தினின்றும் இயல்பாகவே எழுகிறது. உளச்சிதைவு பற்றிய இக்கருத்து அக்கேள்விக்குச் சரியான பதிலிறுப்ப தில்லை. உள்ளத்தின் இயக்க சக்திகளை நாம் அறிந்தால் மட்டுமே இக்கேள்விக்கு விடை காண்பதற்கு முடியும். அஃதாவது உளச்செயல்கள் என்னும் பல நிகழ்ச்சிகளைத் தோற்றுவிக்கும் சக்திகளையும், அவை செயல்படுவதற்குக் காரணமான விதிகளையும், நாம் நுட்பமாக அறியும்போது மட்டுமே இக்கேள்விக்கு விடை காணமுடியும்.

## பிராயிடின் பங்கு

உள இயக்கக் கண்ணோட்டத்தினின்று, தொடர்ச்சியான கருத்தை முதன் முதலாக வெளியிட முயன்றவர் பிராயிடு ஆவர். ஆயினும், இவர் வெளியிட்டுள்ள பெருவாரியான கருத்துக்களின் திட்டவட்டமான பயனும் நம்பிக்கையும் இன்னும் ஐயத்திற்கு உரியனவாகவும், விவாதத்திற்கு இடமளிப்பனவாகவும் விளங்குவன. ஆயினும், இன்றைய

உளநோய்க் கூற்றியலில் இவர் தன்னிகரற்ற பேரறிஞராகவே விளங்குகிறார்.

இன்றைய உளவியலில் ஃபிராயிடின் கோட்பாடுகள் மிக முக்கியமான பங்கு வகிக்கின்றன. மேலும் உளக் கோளாறைப்பற்றி அறிய அவரது கருத்துக்கள் உதவும் என்பதோடுகூட, உளக்கோளாறு பற்றிய பிற கருத்துக்களி னின்றும் தனித்து நிற்கும் தன்மை வாய்ந்தனவாகவும், தமது சொந்த முற்கோள்களையும் விதிகளையும் கொண்ட ஒரு முழுச்சிந்தனை அமைப்பாகவும் அவை இருப்பதால், அவற்றை அறிந்திருப்பதும் மிகத் தேவையானதாகும்.

## புரூவரின் ஆராய்ச்சி

1880-ஆம் ஆண்டில், வியன்னாவைச் சேர்ந்த ஜோசப் புரூவர் என்பார் ஒரு ஹிஸ்டீரியா நோயாளியை ஆராய்ந்தார். அந் நோயாளிக்கே தெரியாதிருந்த சில நினைவுகளின் காரணமாகவே, அவரிடம் காணப்பட்ட அந்த அறிகுறிகள் தோன்றியிருந்தன எனவும், அந் நினைவுகளை மீண்டும் நோயாளியின் நனவில் இடம்பெறச் செய்தபோது, அவரது நோய் நீங்கிற்று எனவும். புரூவர் அறிந்தார். தம் ஆராய்ச்சியில் தொடர்ந்து ஈடுபட முற்பட்ட புரூவரோடு ஃபிராயிடு கூட்டுச் சேர்ந்தார் அந்த வேளையிலிருந்து, ஃபிராயிடு தமது பெயரோடு இன்று தொடர்புபடுத்திக் காணப்படும் கொள்கைகள்-நடைமுறைப் பயன்கள்—என்னும் பெருமாளிகையைப் படிப்படியாகத் தொடர்ச்சியாக எழுப்பினார்.

தடை சக்தியின் வேலை சில அடிப்படை நியதிகள் வெளிப்படையாகவே காணப்பட்டன என்பதை நாம் காணலாம். நனவினைத் தவிரப் பிறவும் உள்ளத்தில் இடம் பெற்றன என்பதும், நனவினின்றும் பிரிந்தும் நனவுக்கு எட்டாத நிலையிலும் சில நினைவுகள் தனியாக நின்று விளைவுகளைத் தொடர்ச்சியாகத் தோற்றுவிக்க முடியும் என்பதும் இவற்றுள் முதல் நியதியாகும். எனவே,

உள்ளத்தில் நனவுச்செயல்களோடு நனவிலிச் செயல்களும் இடம்பெறுகின்றன. இரண்டாவதாக, நனவிற்குப் புறமாக நிற்கும் நினைவுகளின்மேல், அவை நனவில் தோன்றிவிடா வண்ணம் சிறப்புறத் தடைசெய்யும் ஏதேனும் மறைப்புச் சக்தி பயன்படுத்தப்படுதல் வேண்டும். ஏனெனில், சாதாரணமான முறைகளின் மூலமாக அவற்றை நினைவுகூற முடிவதில்லை. இவ்வாறு திறம்பட இயங்கும் மறைப்புச் சக்தி தடை எனப்பட்டது. ஒதுக்கப்பட்ட நினைவுகள் நனவில் நுழைந்துவிடா வண்ணம் தடுக்கும் சக்தியையே தடை நினைவுகள் அவ்வாறு தடுக்கப்படுவதற்குக் காரணமாக இருந்திருக்க வேண்டும் என்ற ஊகம் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவே இருக்கிறது.

### ஹிஸ்டீரியாவின் விளக்கம்

இவ்வாறு நினைவுகள் தடைச் சக்தியால் தடுக்கப்பட்டு உள்மனத்துள் ஒடுக்கப்படுவதை 'ஒடுக்குதல்' என்பர். இஃது எவ்வாறு தோன்றுகிறது? இதை நிர்ணயிப்பது அடுத்த படியாக அமைந்தது. உள்ளத்தில் முரணான இரண்டுவகை நினைவுகள் இடம் பெறுவதாலும், உள்ளம் இவற்றில் ஒன்றை நனவினின்றும் நீக்க முற்படுவதாலும், ஒடுக்குதல் தோன்றுகிறது என ஃபிராயிடு கண்டார். வெளியேற்றப் படும் விழைவு பின்னர் உள்ளத்தின் நனவிலிப் பகுதிகளில் சென்று தங்குகிறது. அங்கும் அது செயல்திறன் கொண்டே இருக்கிறது. அது நனவுநிலையில் நேரடியாகத் தோன்ற முடியாது. எனவே, ஹிஸ்டீரியாவில் காணப்படும் நிலையைக் கீழ்வருமாறு நாம் சித்திரிக்கலாம். ஹிஸ்டீரியா வின் அறிகுறிகளான வாதம், உடலின் உணர்விழப்பு என்பன நனவிலி நிலையில் நிற்கும் செயல்திறனுடைய உளக்காரணிகளால் தோற்றுவிக்கப்படுகின்றன. இக்காரணிகள் உள்ளத்திலுள்ள பிற சக்திகளோடு முரண் பட்டு இருந்ததன் காரணமாகவே அவை நனவிலி நிலையை அடைந்தன. இதன் காரணமாகக் கட்டாயமாகத் தோன் றியிருக்கக்கூடிய போராட்டத்தைத் தவிர்க்கும் ஓர்

உபாயமாக அவை நனவினின்றும் ஒடுக்கப்பட்டன. நோயில் காணப்படும் அறிகுறிகள் உள்ளத்தில் இடம் பெற்றிருந்ததும், நனவினுள் அனுமதிக்கப்படாதிருந்தது மான ஒரு விழைவினை மறைமுகமாகவும், திரிக்கப்பட்டும் வெளியிடுவனவாக அமைகின்றன. ஒடுக்கும் சக்தி காரண மாகவே விழைவு திரிக்கப்படுகிறது. எனவே ஒடுக்கப்பட்ட தற்கும் ஒடுக்கும் சக்திக்கும் இடையேயான இடைவினையின் அறிகுறிகள் ஹிஸ்டீரியாவில் தோன்றுகின்றன எனலாம்.

இந்த இடைவினை பல வழிகளில் நடைபெறுவது விவரமாக ஆராயப்பட்டது. அதனின்று பல உளநுட்பச் செயல்கள் தோற்றுவித்துக் கொள்ளப்பட்டன. இவை உளச்சக்திகள் எவ்வாறு அறிகுறிகளைத் தோற்றுவிக்கக் காரணமாகின்றன என்பதை விளக்கின.

### நரம்புக் கோளாறுகள்

மேலும் ஹிஸ்டீரியாவில் கண்ட உளச்செயல்கள், பலவகையான நரம்புக் கோளாறுகள், உளக்கோளாறுகள் என்பவற்றில் காணப்படும் அறிகுறிகளுக்கும் காரணமாக அமைகின்றன எனவும், அவற்றைக் கொண்டு அன்றாட வாழ்வில் இடம்பெறும் பல உளநிகழ்ச்சிகளை விளக்க முடியும் எனவும் ஃபிராயிடு கண்டார். குறிப்பாகக் கனவு பற்றிய ஆராய்ச்சிகள் இவ்வகையில் குறிப்பிடத்தக்க பயன் தருவனவாக இருந்ததுடன், அவற்றின் அமைப்பும் வளர்கின்ற முறையும் நரம்பு நோய் அறிகுறிகள் தோன்று வதையே மிக ஒத்து அமைகின்றன என்று கண்டுகொள்ளவும் உதவின. இந்தக் கண்டுபிடிப்பு நடைமுறையில் அதிகப் பயனுடையதாக இருந்தது. ஒரு நோயாளியின் கனவுகளை ஆராய்வதன்மூலம், அவன் உள்ளத்தில் இயங்கும் சக்தி களின் தன்மையை ஆராய்ச்சியாளரால் கண்டுகொள்ள முடிகிறது. எனவே, நோயாளியைக் குணப்படுத்துவதற்குத் தேவையான உண்மைகளைக் கண்டுகொள்ள இம் முறையைப் பயன்படுத்த முடியும்.

## நனவு மனமும் நனவிலி மனமும்

மனித உள்ளத்தில் நனவுமட்டுமே இடம் பெறுவதில்லை. அம் மனிதனுக்கு முற்றிலும் தெரியாத உளச்செயல்களும் இடம் பெறுகின்றன. நனவிலுள்ள பிற செயல்கள் இவற்றிலும் உண்டு. இவ்வாறு ஃபிராயிடின் கொள்கைகள் துணிபு கொள்கின்றன என நாம் அறிவோம். நனவிலி உள்ளம் இருக்கிறது என்ற தமது துணிபை பிராயிடு விரிவு படுத்தினார். உளஅமைப்புப் பற்றிய ஒரு புதுக்கருத்தையே அவர் தோற்றுவித்தார். மனித உள்ளத்தில் நனவு, பின் நனவு, நனவிலி என்னும் மூன்று பகுதிகள் உள்ளன என்று அவர் கருதினார். நனவு உள்ளத்தில் இடம் பெறுகின்ற வற்றையே நனவு என்ற சொல் சாதாரணமாகக் குறிப்பிடு கின்றது. பின்நனவுப் பகுதியில் இடம்பெறும் செயல்கள் அவ்வேளையில் நனவில் இடம் பெறாவிடினும், நினைவு கூர்தல் என்ற எளிய செயலைப் புரிந்த உடனேயே நனவில் தோன்றிவிடும். நனவிலியில் இடம்பெறும் உளச்செயல்கள் அவ்வேளையில் நனவில் இடம் பெறாதிருப்பதுடன, சாதாரண முறைகளைப் பயன்படுத்தி அவற்றை நனவில் கொண்டு வரவும் முடியாது. நனவிற்கும் பிற பகுதிகளுக்கும் இடையே தடுப்பு ஒன்று உண்டு. இதன் காரணமாகப் பிற பகுதிகளில் உள்ளவை நேரடியாக நனவில் புக முடியாது. ஆனால் அவை மாற்றமும் திரிபும் பெறுமாயின் நனவிலிச் செயல்கள் அத்தடுப்பினை ஊடுருவி நனவில் புகுந்துவிட முடியும். பிற பகுதிகளிலுள்ளவை நனவிலியில் புகுவது ஒடுக்குதலாகும். நாம் சிறிதுமுன்னர் விவரித்த தடைச் சக்தி உளச்செயல்களைத் திரிக்கும் ஊடகமாகவும் விளங்கு கிறது. அறிகுறிகள் தோன்றும் விதத்தை நாம் விளக்கிய போது இதனைப்பற்றி அறிந்துள்ளோம்.

கனவுகள் நரம்புக்கோளாற்றை விளக்கும் அறிகுறிகள். அவை நிகழ்ச்சிகளைத் தோற்றுவிக்கும் வகையில், உள்ளத்தில் இடைவினை நிகழ்த்தும் சக்திகள் இயங்கும் வகைகளைக் காண முற்பட்ட ஃபிராயிடு, இச்சக்திகள் எவ்வாறு தோன்று

கின்றன என்பதையும், இவற்றின் தன்மையையும் ஆராய வேண்டியதாயிற்று. பால் இயல்பூக்கங்களினின்று பிறக்கும் சக்திகள் அங்கு இடம் பெற்றிருத்தலை அவர் கண்டார். அந்த உண்மைகளை விளக்கும் பொருட்டு அவர் தமது விரிவான பாலியல் கொள்கையைப் படிப்படியாகத் தோற்றுவித்தார். இறுதியில், இக்கொள்கையே அவரது பிற கொள்கைகளுக்கெல்லாம் மூல மையமாயிற்று.

## பாலியல் தன்மை

முதிர்ந்தவரிடம் நாம் காணும் பாலியல் தன்மை ஒரு நீண்ட பரிணமச் செயலினது கடைசி நிலையே! இப் பாலியல் தன்மை குழவிப் பருவத்திலிருந்தே ஆரம்பமாகிறது. இவ்வாறு ஃபிராயிடு கருதினர். பரிணமச் செயலின்போது இது பெருமாற்றங்களுக்கு உள்ளாவதன் காரணமாகவே, அடிப்படையில் உந்துசக்தி (அல்லது லிபிடோ) ஒரே மாதிரியாகவே இருப்பினும், முதிர்ச்சிப் பருவத்தில் முற்றிலும் வேறுபட்டு அமைகின்றன. துவக்க நிலைகளில் லிபிடோ தன்னை நோக்கியே திருப்பிவிடப்பட்டுள்ளது. பின்னர் அது வெளிப்பொருள்களிடமும் திருப்பிவிடத் தக்கதாக மாறுகிறது. பொதுவாக, பெற்றோரில் ஒருவரே இத்தகைய முதல் வெளிப்பொருளாக விளங்குகிறார். அதுவும் எதிர் பாலினரான பெற்றோரே இவ்வாறு இடம் பெறுகின்றனர். இன்னும் சிறிது நாட்கள் சென்றபின்னர், அம்மனிதனது பாலினரான வேறு ஒருவரிடம் லிபிடோ செலுத்தப்படு கிறது. இறுதிக்கட்டத்தில் மட்டுமே வேற்றுப்பாலினர் ஒருவரிடம் லிபிடோ செலுத்தப்படும் முதிர்ச்சி பெற்ற தன்மை தோன்றுகிறது. இவ்வாறு ஒரு மனிதரின் லிபிடோ பல நிலைகளைத் தொடர்ச்சியாகக் கடந்து செல்கிறது என ஃபிராயிடு கருதினர். அந்நிலைகளை முறையே தற்கால நிலை, பெற்றோர் நிலை, தற்பால் நிலை, எதிர்ப்பால் நிலை என்பர். ஒரு மனிதனிடம் லிபிடோ இவ்வாறு வளர்ச்சி பெற்றவேளையில், அவ்வளர்ச்சி நிலைகளோடு தொடர்பு

கொண்ட உடற் பகுதிகளில், லிபிடோ மாறிமாறி அமைந்த வண்ணமாகவும் இருக்கிறது என்பர்.

### லிபிடோவின் வளர்ச்சி முறை

இந்த ரீதியில் லிபிடோ விரைவான வளர்ச்சி அடைவது பலவழிகளில் பாதிக்கப்படலாம் எனவும் பிராயிடு நம்பினூர். லிபிடோவின் வளர்ச்சி பாதிக்கப்படுமாயின் நெறி கோணலும் மனக்கோளாறுகளும் தோன்றும் எனவும் அவர் நம்பினூர். தற்பால் பருவத்திற்கு மேற்பட்டு இவ் வளர்ச்சி ஏற்படாதிருக்கிமாயின் ஒருவகையான பால்நெறிக் கோணல் காணப்படும். லிபிடோ ஒரு நிலையினின்று அடுத்த நிலைக்குச் செல்வது முழுமையாக நிறைவேருது. லிபிடோ முந்தைய பொருளோடு ஓரளவு தொடர்பு கொண்டு, அல்லது 'நிலைத்து' நின்றும், ஓரளவு இயல்பான முதிர்ச்சி பெற்ற மனிதனது பயனை நோக்கி முன்னேறவும் செய்யுமாயின், ஒரு போராட்ட நிலைமை தோன்றும். இப் போராட்ட நிலைமையில் லிபிடோவின் ஓரளவே வளர்ச்சி பெற்ற பகுதிகள் நனவிலியினுள் மறைத்து ஒடுக்கப்படும். இதன் காரணமாகவே நரம்புக் கோளாறுகள் பல தோன்றும்.

### அகமும் லிபிடோவும்

பால் இயல்பூக்கங்களினின்று தோன்றும் சக்திகள் போராட்டங்களிலும், கனவுகள் நரம்புக் கோளாறுகள் என்னும் நிகழ்ச்சிகளைத் தோற்றுவிக்கும் இடைவினைகளிலும், கண்டிப்பாக இடம்பெறுகின்றன எனவும் பிராயிடு கண்டார். லிபிடோவின் செயல் அந்நிகழ்ச்சிகளில் எல்லாம் இடம்பெறுகிறது என நாம் மாற்றியும் கூறலாம். ஆனல், வெளிப்படையாக, முற்றிலும் வேருனவையாகத் தோன்றும் சக்திகளும் அவற்றில் இடம் பெறுகின்றன என்பதையும் ஃபிராயிடு கண்டார். இச்சக்திகள் உயிரைக் கட்டிக் காக்கும் பகுதியை அல்லது ஆளுமையைச்

சார்ந்தவையாகும். இவற்றின் மொத்தத் தொகுப்பையே 'அகம்' என்பர். அகத்தின் முக்கியமான செயல் ஒருவனை அவனது சூழ்நிலைக்கும் உண்மை நிலைக்கும் ஏற்ப அமைந்து ஒழுகச் செய்வதாகும். இது நடைபெற வேண்டுமாயின் கட்டுப்பாடும் உள்தடைகளும் தேவையாகின்றன. இதனால் அகமானது லிபிடோவைத் தடையின்றி இயங்க அனுமதிப்ப தில்லை. நரம்புக் கோளாறு அறிகுறிகளுக்கு உள்ளீடாக அமையும் போராட்டங்கள் உண்மையில் அகம் லிபிடோ என்பவவற்றிற்கிடையே நிகழும் போரின் விளைவாகவே எழுகின்றன என ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. லிபிடோவை ஏதேனும் ஒருவகையில் கட்டுப்படுத்தும் திறனை அகம் இழக்கும்போதே, நரம்புக் கோளாறுகள் தோன்றுகின்றன எனப்பிராயிடு மற்றொரு வேளையில் விளக்கி யுள்ளார். இந்த நிலை எழுமாயின் அப்போது போராட்ட மும் கண்டிப்பாகத் தோன்றும். இப்போராட்டத்தைத் தவிர்ப்பதற்காக, அம்மனிதன் ஒடுக்குதலில் ஈடுபடுவான். இதனால், நாம் ஏற்கனவே வர்ணித்துள்ளபடியான மனக்கோளாறுகளின் 'அறிகுறிகள்' தோன்றும்.

### உளப் பகுப்பாய்வு முறை

தன் கொள்கைகளை உருவாக்குவதற்கு ஃபிராயிடு பயன் படுத்திய ஆராய்ச்சி முறையைப் பற்றியும் நாம் சிறிது தெரிந்துகொள்ளவேண்டும். அவரது முழுப் படைப்பிற்கும் அடிப்படையாக அமைவதனை 'உளப் பகுப்பாய்வு முறை' என்பர். தம் நோயாளிகளிடம் காணப்பட்ட அறிகுறி களுக்கு நனவிலி உளச்செயல்களே காரணம் எனப் பிராயிடு நம்பினர். அவ்வுளச் செயல்களைக் கண்டுகொள் ளப் பயன்படுத்துவதற்காகவே இம்முறை தோற்றுவிக்கப் பட்டது. இவ் வுளச் செயல்களை நனவிலி என்னும் கருது கோளால் அவர் தோற்றுவித்திருந்தால், இவற்றை ஆராய்ச்சி அல்லது உற்றுநோக்கல் என்னும் முறைகளால் கண்டுகொள்ள இயலாது. இதற்கென ஒரு தனி முறை யானது தேவையாயிற்று. தம் முன்னைய ஆராய்ச்சிகளில்

இதற்கெனப் ஃபிராயிடு அறிதுயிலைப் பயன்படுத்தினர். ஒருவனுக்கு முற்றிலும் தெரிந்திராத உளவுணர்வுகளை அறிதுயிலால் காணமுடியும் என்பது நெடுநாட்களாகவே தெரிந்திருந்தது. ஆயினும், அறிதுயிலைவிட இன்னும் பரவலாகப் பயன்படுவதும், அதைவிட வளமிகுந்ததுமான ஒரு முறையைக்கொண்டு நனவிலிச் செயல்களைக் காண முடியும் எனப் பின்னர் தெரிந்து கொள்ளப்பட்டது. தன் சிந்தனைகளைக் கட்டுப்படுத்தவோ, அல்லது அவற்றின் போக்கினை வழிப்படுத்தவோ முயலாது, நோயாளி தடையின்றிப் பேசவேண்டும் எனக் கேட்டுக்கொள்ளப் படுவாரெனின், அவரது பேச்சை நனவிலிக் காரணிகள் ஓரளவு நிர்ணயிக்கும் எனவும், அச் சிந்தனைகளின் தன்மையினின்று அவற்றிற்குக் காரணமான நனவிலிச் செயல்களைத் தேர்ச்சியுடைய ஆராய்ச்சியாளரால் தெரிந்துகொள்ள முடியும் எனவும் ஃபிராயிடு கண்டார். இம்முறையினையே பிராயிடு 'உளப்பகுப்பாய்வு' என்றார். இம் முறையை அவர் படிப்படியாக விரிவுபடுத்தினர். உளக் கோளாறுகளை ஆராயவும் குணப்படுத்தவும் உதவும் ஒரு கருவியாகவும் அதனை மாற்றினர். அதைப் பயன்படுத்துவதையும் அதன்மூலம் பெறப்பட்ட உண்மைகளைத் தழுவியுமே அவரது முழுச் சாதனையும், பின்னாளில் அவர் வெளியிட்ட எல்லாக் கொள்கைகளும் அமைகின்றன.

பிராயிடின் முன்னைய ஆராய்ச்சிகள் அனைத்தும் பெரும்பாலும் நரம்புக் கோளாறுகளைப் பற்றியனவாகவே இருந்தன. ஆனால் அக்கோளாறுகளில் காணப்படுவதைப் பெரும்பாலும் ஒத்தவையான உளச்செயல்கள் சிலவகையான பித்துக்களிலும் காணப்படுகின்றன எனவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## டாக்டர் யூங்கின் ஆராய்ச்சி

அப்போது பிராயிடின் சீடராக இருந்து, பின்னாளில் முற்றிலும் வேறான ஒரு சிந்தனைக் கோட்பாட்டு மரபினைத்

தோற்றுவித்தவரான யூங் என்பவர் இத்துறையில் தொடர்ந்து ஆராய்ச்சி செய்தார். குறிப்பாக, உளக் கோளாறுகளில் மிகச் சாதாரண வகையாகக் காணப்படும் உணர்ச்சிகடந்த நிலைபற்றிய இவரது ஆராய்ச்சிகள் முதல் தரமான முடிவுகளை அளித்தன. ஹிஸ்டீரியா, உணர்ச்சி கடந்த நிலை என்னும் இரு கோளாறுகளுள்ளும் அடிப்படை யான வேறுபாடுகள் இருப்பினுங்கூட, ஹிஸ்டீரியா ஆராய்ச்சிகளில் ஃபிராயிடு கண்ட விதிகள் உணர்ச்சிகடந்த நோயிலும் முக்கியமான பங்கு வகிக்கின்றன என யூங் நிருபித்துக் காட்டினர்.

## ஃபிராய்டு கொள்கைகளின் செல்வாக்கு

இந்நூற்ருண்டின் முதற் பகுதியில் உளக்கோளாறு பற்றிய வரலாற்றில் காணப்படும் தலையாய நிகழ்ச்சி ஃபிராயிடின் நூல்கள் வரவர அதிகமான அளவில் தம் செல்வாக்கைச் செலுத்தின என்பதாகும். இச் செல்வாக்கு பழைய உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டு மரபின் எல்லை களைப் பெருமளவில் தாண்டியும் அமைந்தது. ஏறத்தாழ உளநோய்க் கூற்றியலின் இன்றைய ஆராய்ச்சிகள் அனைத்தின் போக்கையும் அவரது கருத்துக்கள் மிகப்பெரு மளவில் பாதித்துள்ளன என்ருலும், அது மிகையாகாது. இதனின்று பிராயிடு தோற்றுவித்த கொள்கை அமைப்பும், அவர் காட்டிய வழிமுறையும், பொதுவாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன என்ற முடிவுக்கு நாம் வர லாகாது. உண்மையில், அவரது கொள்கையமைப்பு சரியானதுதான என்பது இன்னும் காரசாரமான விவாதங் களுக்கு இடமளிப்பதாகவே இருக்கிறது. ஃபிராயிடினது கொள்கைகளை முழுமையாக ஏற்றுக்கொள்பவர்கள் சிறு பான்மையினர் மட்டுமே! இவர்கள் அவரை உடனடியாகப் பின்பற்றும் பழைய உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டு மரபினரேயாவர். ஆயினும், உளவியல் பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கு ஃபிராயிடு முதலில் காட்டிய திக்குகள், இந்த ஆராய்ச்சிகளில் அவர் பயன்படுத்திய கருவிகள், இயக்கக்

கண்ணேட்டத்தோடு ஆராய்ச்சிகளில் ஈடுபடவேண்டும் என்று அவர் கொண்டிருந்த அரியநிலை ஆகியன உளநோய்க் கூறு இயலின் பின்னைய வரலாற்றையே மாற்றி அமைத்துள்ளன. மேலும், ஃபிராயிடின் முன்னைய கருத்துக்களில் பல குறிப்பாக உளப்போராட்டம் பற்றிய கருத்து—போராட்டம் நரம்புக் கோளாறு நிகழ்ச்சிகளைத் தோற்றுவிக்கப் பயன்படுத்தும் பல உளநுட்பச் செயல்கள் பற்றிய கருத்து ஆகியன—பெரிதும் புகழ்வாய்ந்து விளங்குவதுடன், ஓரளவு பெரும்பாலோரால் ஏற்கப்பட்டுள்ளனவாகவும் உள்ளன.

## ஃபிராயிடின் தனித்தன்மை

ஃபிராயிடின் ஓரளவு நேரடியான கண்காணிப்பின் கீழ், பழைய உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டு மரபு, உளப்பகுப்பாய்வு முறையை ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தத்தக்க வகையில், விரிவானதும் நுட்பம் வாய்ந்ததுமான ஒரு கருவியாக அமைந்துள்ளது. மேலும் தனது ஆராய்ச்சிகளை விரிவடைந்துகொண்டேயிருக்கும் பலகளங்களில் அது நடத்தியுள்ளது. ஃபிராயிடின் முதல் நூல்கள் நரம்புக் கோளாறுத் துறையைச் சார்ந்தனவாக மட்டுமே இருந்தன. ஆனல், இதைத்தவிர, உளவியல், சமூகவியல், மனித இனநூல், கல்வி இயல் என்னும் துறைகளிலுள்ள பிரச்சினைகளையும் வெற்றிகரமாகச் சமாளித்துள்ளன. பிராயிடின் கொள்கைகள் ஓரளவு தனித்துநிற்பதும் தன்னுள்ளேயே அடங்கக்கூடியதுமான ஒரு சிந்தனை அமைப்பாகத் துலங்குகிறது. வாழ்வு, உள்ளம் பற்றிய பிரச்சினைகளைத் தன்வழியில் நின்று பிற முறைகளின் தொடர்பு, ஒத்துழைப்பு என்பன இல்லாமலேயே அது சமாளிக்க முற்படுகிறது.

## லிபிடோவின் ஆராய்ச்சி

உளக்கோளாறு பற்றிய கருத்துக்களின் வளர்ச்சியில் ஃபிராயிடின் முன்னைய கருத்துக்கள் பெரும்பாலும் நிலை

நிறுத்தப் பெற்றுள்ளன. அவை பெருமளவில் விரிவாக்கப் பட்டும் உள்ளன. லிபிடோவின் தோற்றம், அதில் ஏற்படும் மாற்றங்கள் என்பனபற்றிய கருத்துக்கள் மிக விரிவாகக் காணப்பட்டுள்ளன. முன்னர் 'அகம்' என்ற தலைப்பின்கீழ் சுமாராகத் தொகுக்கப்பட்ட காரணிகள், தனித்தனித் தன்மைகளும் செயல்களும் கொண்டவையும் பல பகுதி களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அகத்தின் பகுதிகளுக்கும் லிபிடோவுக்கும் இடையே எழும் இடைவினைகளைக் கொண்டு, இயல்பான உளவாழ்வு நிகழ்ச்சிகளை விளக்க முயற்சி செய்யப்பட்டுள்ளது. ஏறத்தாழ எல்லா உள உடலியல் செயல்களையும் இவ்விளக்கத்தின் அடிப்படையில் காணவும் முயலப்பட்டுள்ளது.

## யூங்கும் ஆட்லரும்

பிராயிடின் சாதனைகளின் செல்வாக்கு பழைய உளப் பகுப்பாய்வுக் கோட்பாட்டு மரபின் எல்லையை மிகவும் தாண்டி அமைந்துள்ளது எனவும், பிராயிடின் கருத்துக்களை முழுமையாக ஏற்றுக்கொள்ளச் சம்மதியாத பல உளநோய்க் கூற்றியல் அறிஞர்களின் நூல்களிலும் பிராயிடின் கருத் துக்கள் சில இடம் பெற்றுள்ளன எனவும் கூறியுள்ளோம். இந்த இடத்தில் யூங், ஆட்லர் என்பவர்களால் தோற்று விக்கப்பட்ட இருகோட்பாட்டு மரபுகளை நாம் விசேடமாகக் குறிப்பிடவேண்டியுள்ளது. இந்த அறிஞர்கள் முதலில் பிராயிடைப் பின்பற்றுபவர்களாகவே இருந்தனர். ஆனால், அவர்களது ஆராய்ச்சியின் போக்கு பழைய உளப் பகுப்பாய்வின் போக்கினின்று பெரிதும் வேறுபட்டுள்ளது. யூங்கும் ஆட்லரும் பிராயிடு காட்டிய புதிய வழிகளைப் பயன்படுத்தி இருப்பதுடன் அவரது சில கருத்துக்களையும் ஓரளவு தழுவியுள்ளனர். ஆனால் இவர்கள் இருவரும் தத்தம் வழியே சென்றிருப்பதுடன், பிராயிடமிருந்து முற்றிலும் வேறுபடுவன என்று சொல்லத்தக்க சில கோட்பாடுகளையும், வழிமுறைகளையும் தோற்றுவித்துள்ளனர்.

உளக்கோளாறு பற்றிய பிரச்சினைகள் இன்று பல கோணங்களிலிருந்தும் தவிர்க்கப்படுகின்றன. இவற்றுள் பிராயிடின் ஆராய்ச்சிகளினின்று முழுமையாகவோ ஓரள வாகவோ எழுந்துள்ள அணுகுமுறைகளைத் தவிர, கணிதம் புள்ளியியல் பரிசோதனை முறைகளைப் பயன்படுத்தும் பல ஆராய்ச்சிகளையும் உளவியலார் பயன்படுத்தி வருகின்றனர். இந்த ஆராய்ச்சிகள் அறிவியல் ஆராய்ச்சி விதிகளுக்குக் கண்டிப்பாக உட்படும் வகையில் இருக்கத் தலைப்படு கின்றன. இயல்பான மனிதர்கள், நோய் நிலையிலுள்ள வர்கள் என்பவர்களது நடத்தைப் பிரச்சினைகளைப் பல நிபுணர்கள் பகுப்பாய்வு உளநோய்க்கூறுஇயல் கருத்துக் களினின்று வேறுவகையில் உருவாக்கப்பட்ட கருத்துக்களைக் கொண்டும் ஆராய்ந்து வருகின்றனர். குறிப்பாக, உளவிய லோடு தொடர்புடைய சமூகவியல், மனித இனஇயல் என்பனவற்றினின்று பெற்ற விவரங்களின் துணைகொண்டும் இத்தகைய ஆராய்ச்சியானது மேற்கொள்ளப்படுகிறது.

# 11

# மனநோயின் வரலாறு

சரித்திரம் தோன்றிய காலத்திலிருந்தே மனிதரிடத்தில் பிறழ்வான உளநிகழ்ச்சிகளும் இருந்துள்ளன. கீழைய மேலைய நாடுகளின் பழங்கால நூல்களில் இந்நிகழ்ச்சிகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. உதாரணமாக, பழைய ஏற்பாட்டில் 'கர்த்தரிடமிருந்து வந்த ஒரு பொல்லாத ஆவி' சவுலின்மீது இறங்கியபோதெல்லாம் அவனிடம் ஒரு சோர்வுநிலை தோன்றியது எனக் காண்கிறோம். மேலும் நேபுசாத்நேசார் தனது சன்னி நிலையில் தான் ஒரு விலங்காக மாறிவிட்டதாத நம்பினன் எனவும் காண்கிறோம். அவன் மாடுகளைப்போல் புல்லை மேய்ந்தான். அவனுடைய தலைமயிர் கழுகுகளுடைய இறகுகளைப்போலவும், அவனுடைய நகங்கள் பட்சிகளுடைய நகங்களைப்போலவும் வளரும்வரை அவன் சரீரம் ஆகாயத்துப் பனியிலே நனைந்தது.

## பித்துப் பற்றிய சிந்தனை

இப் பிறழ்வான உளநிகழ்ச்சிகள் காணப்பட்டபோதெல்லாம், அவற்றை விளக்கும் முயற்சியும் தவருது நடைபெற்றிருப்பதை நாம் காண்கிறோம். ஏனெனில், விளக்கம் பெறவேண்டுமென்பது மனிதஉள்ளத்தின் அடிப்படையான ஒரு பண்பாகும். உளக்கோளாறுகள் அனைத்திலும் குறிப்பாகப் 'பித்து'என்றபதத்தின்கீழ் அமையும் தீவிரவகையான கோளாற்றுக்கு விளக்கம் பெறவேண்டும் என்னும் முயற்சி தொடர்ந்து காணப்பட்டுள்ளது. அக்காலத்தில் நிலவிய பொதுவான எண்ணம், அறிவுநிலை ஆகியவற்றிற்கு ஏற்ற வகையில் விளக்கங்களை உருவாக்கி, மனநிறைவு பெற

அக்கால மனிதன் முயன்றுள்ளான். இவ்வாறு தரப்பட்ட விளக்கங்களை, 'உளக்கோளாறு பற்றிய கருத்துக்கள்' எனலாம்.

## பித்தும் பேய்களும்

பழங்கால ஏடுகளில் காணப்படுவன என நாம் குறிப்பிட்ட உளக்கோளாறுகள்பற்றி அன்று நிலவிவந்த கருத்தினை 'பேய்ச்சார்பானவை' என வர்ணிக்கலாம். இப்பிறழ்வு நிகழ்ச்சிகள் கடவுள் அல்லது பேய்போன்ற ஏதேனும் ஆவிகளின் தோற்றுதல்கள் எனக் கருதப்பட்டன. இந்த ஆவிகள் நோயாளியின் உடலில் புகுந்து தங்கியிருந்தன என்றோ, அல்லது வெளியே இருந்துகொண்டு அம் மனிதனிடம் திருவிளையாடல்கள் புரிந்தன என்றோ நம்பப்பட்டன.

## கிரேக்க ஞானியின் முடிபு

சுமார் கி. மு. 460–ஆம் ஆண்டின்போது, ஹிப்போக்கிரேட்டஸின் தோற்றத்துடன் பித்துநோய் பற்றிய பழைய கருத்து கிரேக்க நாட்டில் பெருமாற்றத்திற்கு உள்ளாயிற்று. இன்றைய மருத்துவத்தின் தந்தை எனக் கருதப்படும் ஹிப்போக்கிரேட்டஸ், 'மூளையே உள்ளத்தின் உறுப்பு' எனவும், 'இவ்வுருப்பு ஏதேனும் ஒருவகையில் உலைவுறுவதன் காரணமாகத் தோன்றுவதே பித்துநோய்' எனவும் தமது கொள்கையை வகுத்தார்.

ஆனால், அறிவியல் முறைகொண்டே பித்து நோயினைக் குணப்படுத்த வேண்டும் என்ற கருத்தும் முதல் முயற்சியும், அன்று பெரும் பயன் தருவனவாக அமைய முடியவில்லை. ஐரோப்பாவின் இருண்ட காலத்தில், அறிவின் வளர்ச்சியில்லாதபோது, இக் கருத்தும் முற்றிலும் மறைந்தது. இக்காலத்தில் சிந்தனை இலக்கியம் கலை என்பன சர்வசக்தி வாய்ந்திருந்த சமயத்திற்கு அடிமைப்பட்டிருந்தன. தத்துவத்திற்குப் பதில் பழமைக் கருத்துக்களும், அறிவியலுக்குப் பதில் தெய்வத்தைச் சேர்தலான பண்பும் இடம் பெற்றன.

ஆவிகளின் செயல்களே!

இதன் காரணமாகப் பித்து நோயின் தோற்றக்காரணம், தன்மை பற்றிய கருத்தும் மறைந்தது. மீண்டும் பேய் சார்ந்த கருத்துக்கள் இடம் பெற்றன. புனிதமான அல்லது தீய ஆவிகளின் செயலின் காரணமாகவே, மனப் பிறழ்வான அறிகுறிகள் தோன்றுகின்றன என்ற கொள்கை மீண்டும் தலையெடுத்தது. இடைக் காலத்தின்போது இதுவே மிகுதியான முறையில் வளர்ச்சி பெற்றது.

மேலும், இடைக்காலத்தின்போது 'சூன்யவித்தை என்பது பெருமளவில் இடம் பெற்றிருந்தது. பிறழ்வான உளநிகழ்ச்சிகளை அக்கருத்தினைக் கொண்டு விளக்க மக்கள் முற்பட்டனர். இன்றைய நிலையிலும், விளக்க முடியாதபடி அமையும் பல பிரச்சினைகளைக் கொண்டதாகச் சூன்ய வித்தைக்காலம் அமைந்திருக்கிறது. சூன்ய வித்தையிலிருந்த சூன்யக்காரரின் ஓய்வு நாள், பிற விருந்துகள் என்னும் சடங்குகள், வரலாற்றுக் காலத்திற்கு முன்னர் ஐரோப்பா வில் நிலவியிருந்த பூர்வ சமயத்தின் அடிச்சுவடுகளாக இருக்கக் கூடும்.

சீர்திருத்தமும் அறிவியல் வளர்ச்சியும்

இந்த அவலமான நிலையில் சீர்திருத்தம் ஏற்படுவதற்கு இருவகை எண்ணங்களின் வளர்ச்சி காரணமாயிற்று. அவை அறிவியல், மனிதாபிமானம் என்னும் கருத்துக்களாகும். பின்னாளில் மனிதஅறிவில் மாபெரும் புரட்சியைச் செய்ய விருந்த அறிவியல் முறை அப்பொழுதுதான் தோன்றி யிருந்தது. அது சட உலகை ஆராய்வதில் மட்டுமே அப் போது கவனம் செலுத்துவதாகவும் இருந்தது. ஆயினும் இச்சிந்தனை மிகச் சிறந்த விளைவுகளை ஏற்படுத்தலாயிற்று. பழமைக் கருத்துக்கள் அழிய ஆரம்பித்தன. பித்துநிலை பேய்க் குற்றம் என்னும் கருத்தும் மறைந்தது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஹிப்போக்கிரேட்டஸ் அடைந்

திருந்த அறிவுநிலையை இறுதியில் ஐரோப்பா பெற்றது. அந்நிலையில் மூளையில் ஏற்படும் செயல்களின் வெளிப்பாடு களாகவே உளநிகழ்ச்சிகள் தோன்றுகின்றன என்பதும் நம்பப்பட்டது. எவ்வாறு நிமோனியா சுவாசப் பைகளில் எழும் நோயாக இருக்கிறதோ, அதே போன்று மூளையில் எழும் ஒரு நோயே பித்துநிலை என்ற கருத்தும் தோற்று விக்கப்பட்டது. இவ்வாறு பத்தொன்பதாம் நூற்றூண்டின் துவக்கத்தில் பித்து நோய் பற்றிய இன்றைய 'உடலியல் கருத்து' திட்டவட்டமாக நிலைநிறுத்தப்பட்டிருபதைக் காண்கிறோம்.

### பித்தர்கள் நோயாளிகளே!

பித்து நோய்த் துறையில் மனிதாபிமானப் பணியை முதன்முதலில் துவக்கிய பெருமை இங்கிலாந்து நாட்டையே சாரும். இலண்டனிலுள்ள செயின்ட்லூக்கில் செய்மப்பட்ட புனரமைப்பிலும், யார்க்கில் பித்து நோயினர் விடுதி தோற்றுவிக்கப்பட்டதிலும், பித்து நோயினரது சுற்றுப்புற சூழ்நிலையைத் திருத்தியமைக்க உண்மையாகச்செய்யப்பட்ட முதல் முயற்சிகளைக் காண்கிறோம். ஒவ்வொரு பித்து நோயினர் காப்பகத்திலும் இதுவரையிலும் மிகத் தேவை யானவை எனக் கருதப்பட்ட சங்கிலிகளை எல்லாம் ஹான்வெல் என்னும் இடத்தில் டாக்டர் கனோலி அறவே அகற்றினர். இத்தகைய சீர்திருத்தங்கள் பிரஞ்சு நாட்டில் பீனல், எஸ்கிரோல் என்பவர்களின் தலைமையின்கீழ் நடந் தேறின. அந்நாட்களிலிருந்து மனிதாபிமான இயக்கம் தொடர்ந்து முன்னேறியுள்ளது. பித்தர்களும் மனிதர்களாக நடத்தப்பட வேண்டிய உரிமை பெற்றவர்கள் என்பது இன்று உலகெங்கணும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இன்றைய மனநோய் மருத்துவ மனைகள் ஒழுங்கான அமைப் பிற்கும் வசதிகளுக்கும் எடுத்துக் காட்டுகளாகத் திகழ்கின்றன.

## மூளைப்பகுதி பற்றிய ஆராய்ச்சி

பத்தொன்பதாம் நூற்றூண்டின் துவக்கத்தில், உடலியல் கருத்து ஏறத்தாழ எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் நிலையைப் பெற்றிருந்தன எனக் கண்டோம். இதன் காரணமாக மூளையின் அமைப்பு அதன் உடலியல்புத் தன்மைகள் என்பன பற்றியே பெருமளவில் ஆராய்ச்சிகள் துவக்கப் பெற்று இவைபற்றிய நமது அறிவும் மிக வேகமாக வளர்ந்தேறலாயிற்று. நுண்ணோக்காடியின் துணைகொண்டு மூளையின் அமைப்பு நன்கு ஆராயப் பெற்றது. புறணி உடலியலில் பரிசோதனை முறைகளைப் பயன்படுத்தியதால் இந்த ஆராய்ச்சியில் இன்னும் முன்னேற்றம் ஏற்படலாயிற்று. 'புறணிக் கிடக்கை' பற்றிய உண்மைகளைப் புறணி உடலியல் துறை விளக்கியது ஒரு தலையாய முன்னேற்றமாகும். இதன்மூலம் திட்டவட்டமான மூளைப் பகுதிகள் திட்டவட்டமான உடற் செயல்களைக்கட்டுப்படுத்துகின்றன என்பதுகண்டுகொள்ளப் பட்டது. உதாரணமாக, இப்பொழுது இயக்கப் பகுதி எனப்படும் மூளைப் பகுதி தலை கை கால்கள் என்பவற்றின் எல்லா அசைவுகளையும் கட்டுப் படுத்துகிறது என்பதும், இப் பகுதியில் ஒரு பகுதி அழிக்கப்படுமாயின். அதனுல் கட்டுப் படுத்தப்படும் உறுப்பும் உடனடியாகச் செயலிழந்து போகிறது எனவும் கண்டுள்ளனர்.

இந்தக் கண்டு பிடிப்புக்களால் எழுந்த உற்சாகத்தின் காரணமாக உளக் கோளாற்றின் காரணங்களும் தன்மையும் விரைவில் கண்டு கொள்ளப்படும் என்று எதிர்ப்பார்க்கப் பட்டது. ஆனுல் இதுவரையிலும் இந் நம்பிக்கைகள் நிறைவேற வில்லை. உடலியல் முறையின் பயனில் ஐயுறவுகொள்ள முடியாதெனினும், இப்பிரச்சினையை வேறு ஏதேனும் முறையில் காண நிறைய இடமுண்டு என்ற எண்ணம் விரைவாகத் தோன்றி வருகிறது. 'உளவியல் கருத்து' வளர்ச்சியே, இம் மாற்று முறையாக இடம் பெற்றுள்ளது.




# 12

# மனநோயும் மனவியலும்

உளக்கோளாறு பற்றிய உளவியல் கருத்து என்ன என்பதையும், அக் கருத்து உளக்கோளாறு பற்றிய உடலியல் கருத்துடன் எத்தகைய தொடர்புடையது என்பதையும், உளவியல் கருத்தின் நோக்கங்கள் அதைப் பயன்படுத்தும் முறைகள் யாவை என்பதையும் தெளிவாகப் புரிந்து கொள்வது இன்றியமையாதது. மேற்கூறியவற்றை நாம் ஆராய வேண்டுமானுல், இன்றைய அறிவியலுக்கு அடிப்படையாக விளங்கும் ஆதார உண்மைகளை நாம் ஓரளவுக்காவது அறிந்திருத்தல் வேண்டும்.

## அறிவியல்துறை மரபுகள் யாவை?

அறிவைப் பெறப் பயன்படுத்தும் ஒரு பயிற்சி முறையே அறிவியல் துறை என்பதை எவரும் அறிவர். ஆனுல், துறை எதுவாக இருப்பினும் இதே பயிற்சி முறைதான் பயன்படுத்தப்படுகிறது என்பதை நம்மில் பலர் அறிந்திருப்பதில்லை.

இரசாயனத் துறையில் ஈடுபட்டுள்ள விஞ்ஞானி ஆராய்வது போன்றே உளவியலில் ஈடுபடும் அறிஞனும் அலசி ஆராய்கிருன்.

இவ்வாறு அறிவியல் அனைத்திற்கும் பொதுவான சில திட்டவட்டமான மரபுகள் உள்ளன. ஓர் எளிய உதாரணத்தின் மூலம் இதனைத் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

அறிவியல் துறை ஆராய்வு என்பது கீழ்வருவனவற்றைக் கொண்டமைவதாகும். 1. நிகழ்ச்சிகளை ஆராய்ந்து பதிவு

## அறிவியல் பகுதிகள்

செய்தல். 2. பதிவு செய்யப்பட்ட நிகழ்ச்சிகளைக் குழுக்க ளாகவோ அல்லது தொடர்களாகவோ வகைப்படுத்தல். 3. இத் தொடர்களைத் தொகுப்பான வகையிலும், வசதி யான முறையிலும் வெளியிட உதவும் ஒரு சூத்திரத்தைக் கண்டுபிடித்தல். இந்தச் சூத்திரம் முற்றிலும் கருத்துச் சாரும் தன்மையுடையதாக இருக்கலாம். அதாவது அவை இயற்கையில் இடம் பெற்றிருப்பதை உண்மையில் நிரூபிக்க முடியாத கற்பனைப் பொருட்கள் பற்றியதாகவும் இருக்க லாம். சூத்திரம் பயனுடையதாக இருக்க வேண்டும் என்பது மட்டுமே அதனிடமிருந்து எதிர்பார்க்கப் படுவதாகும். நடைமுறையில் நாம் காணும் உண்மைகளை அது விளக்க வேண்டும் என்பதுடன், வருங் காலத்தில் எழக்கூடிய உண்மைகளையும் முன்னறிவிக்க அது நமக்கு உதவவேண்டும். எனவே, உளக்கோளாறுகள் பற்றிய ஆராய்ச்சியும் அறிவியல் ஆராய்ச்சியே என ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமெனின், நாம் இந்த அடிப்படை ஆய்வுமுறைகளையே பயன்படுத்த வேண்டும். நமது பணியிலுள்ள பொதுவான படிகள் யாவை என்பது இப்பொழுது தெளிவாகத் தெரிகிறது அல்லவா!

## நனவு நிகழ்ச்சிகளும் மனக் கோளாறும்

உளக்கோளாறு நிகழ்ச்சிகள் எல்லாம் நனவின் நிகழ்ச்சிகளே என்பதை உடலியல் கருத்து ஏற்றுக்கொள் கிறது. அந்த உளச்செயல்களுக்கு ஏற்ற மாற்றங்கள் மூளையில் உளச்செயல்கள் தோன்றும்போதே தோன்றி விடுகின்றன. இவ்வாறு இக் கருத்துத் துணிவுகொள்வதுடன் தனது ஆராய்ச்சிகளையெல்லாம் இந்த மூளை மாற்றங் களிலேயே செலவிடுகிறது. நனவு உண்மை பற்றிய நிகழ்ச்சிகள் அதற்குநேரடியான முக்கியத்துவம் வாய்ந்தவை அல்ல. உளக்கோளாறின்போது மூளையில் ஏற்படும் உண்மையான மாற்றங்களைக் காண்பதும், ஒவ்வொரு உளநோய் நிலையோடும் அதற்குரிய மூளை மாற்றத்தைத் தொடர்புபடுத்திக் காண்பதுவுமே உடலியல் கருத்தின்

முதல் குறிக்கோளாகும். இம் மூளைச்செயல்களைச் சுருக்க மாகவும் தொகுப்பான முறையிலும் வசதியாக வெளியிடும் 'விதிகளை'க் கண்டுபிடிப்பதே இதன் இறுதி நோக்கமாகும். இவ் விதிகளில் உடலியல் பதங்களைத் தவிர வேறு எதுவும் இடம் பெறுது என்பது திண்ணம். நனவுபற்றிய பதங்களுக்கு அங்கு இடமே இல்லை.

இதற்கு மாருக, உளவியல் கருத்தானது முதலிலிருந்தே முற்றிலும் வேருன வழியில் செல்கிறது. உளக் கோளாறில் காணப்படும் நனவுச் செயல்களையே, தான் ஆராயவேண்டிய உண்மையான நிகழ்ச்சிகள் என அது கொள்கிறது. இந்த நனவுச் செயல்களைச் சுருக்கமாகவும் முழுமையாகவும் விவரிக்கத்தக்க வசதியான விதிகளைக் காண்பதையே அது தனது இறுதி நோக்கமாகவும் கொள்கிறது.

## உடலியலும் உளவியலும் கலக்கக் கூடாது

உடலியல் கருத்து அல்லது உளவியல் கருத்து என்பவற்ருல் பெறப்படும் இறுதி 'விதிகளில்' இவற்றின்பதங்களைக் கலக்கக்கூடாது என்பது மிகவும் முக்கியமானது. உடலியல் விதிகளில் உளவியல் பதங்களும் இடம்பெறுதல் கூடாது. உதாரணமாக, மூளை அணுக்கள் 'எண்ணங்கள்' என்னும் பதங்கள் கலக்கப்படுமாயின் பெரிது குழப்பமே தோன்றும்.

உடலியல் கருத்திற்கும் உளவியல் கருத்திற்கும் இடையேயுள்ள உறவினைக் காண வேண்டுமாயின், உள்ளம் மூளை என்பவற்றிற் கிடையேயுள்ள தொடர்பினைக் காண வேண்டியதாகிறது. இத் தொடர்புபற்றிய ஆய்வுகளில் பெருமளவில் கருத்து வேறுபாடுகள் இருப்பதுடன், அந்த ஆய்வுகள் தத்துவத் துறையைச் சார்ந்தவையாகவும் இருக்கின்றன. எனவே, அவற்றை நாம் இங்கு விவரிப்பதற் கில்லை. அறிவியல் கண்ணேட்டத்தினின்றும் காணுமிடத்து நாம் ஏற்கனவே இவற்றிடையே காட்டியுள்ள எளிய வேற்றுமையைத் தெளிவாகப் புரிந்து கொண்டால், அதுவே போதுமானது ஆகும்.

# 13

# மனநோயின் வகைகள்

உளப் பற்றுக்குறையில், நோயாளி தனது பிறப்பின் போது இயல்பான உளத்திறன்கள் பெருதவனுக இருப்பதும் அடிப்படைக் காரணங்களுள் ஒன்ருகும். அவனது உளச் சக்திகள் முழுவளர்ச்சி பெறுவதில்லை என்பதும் மற்ருெரு காரணம். இவ் வளர்ச்சியற்ற நிலை உளச் சக்திகள் ஒரு சிறிது மட்டுமே குறைந்த நிலையிலிருந்து நுண்ணறிவு உடைய நிலைவரையிலும் பலவேருன படிகளில் அமையலாம்.

## உளநோயாளிகளின் தன்மை

மிகக் கடைநிலையிலுள்ள நோயாளிகள் ஒரு குழந்தையின் உளத்திறனுக்குமேல்பெற்றிருப்பதில்லை. மொழித்திறன் அற்ருேராகவும் தம் சூழ்நிலையோடு மிக எளிய வகையான பொருத்தப்பாடுகளை மட்டுமே செய்துகொள்ளக் கூடியவர்களாகவுமே இவர்கள் இருப்பார்கள். இவர்களது வாழ்வில் ஒரு குழந்தைக்கு வழக்கமாகத் தரப்படும் பராமரிப்பும் கவனிப்பும் தேவையாகின்றன.

சிலர் பேசக் கற்றுக் கொள்கின்றனர். ஆனுல் அவர்களால் எழுதவும் படிக்கவும் கற்றுக்கொள்ள முடிவதில்லை. சிலர் இந் நிலையைத் தாண்டி இருப்பதுமுண்டு. இவர்களது அறிவும் மிக எளிய நிலையிலேயே அமைகிறது. பொதுவான எண்ணங்கள் எதையும் இவர்களால் பெறமுடிவதில்லை. தம் வாழ்விற்கு வேண்டிய வருவாயைத் தாமே ஈட்ட முடியாதவர்களாகவும், ஒரு நாட்டின் குடிமக்களாக வாழ முடியாதவர்களாகவும் இவர்கள் இருக்கின்றனர். உளப் பற்றுக் குறை என்பது மூளைவளர்ச்சி குன்றுவதன் காரண

மாகவே தோன்றுகிறது என எளிதில் காட்டக்கூடியதாக இவை எல்லாம் அமைகின்றன.

### உளத்திறன் கெடுதல்

உளத்திறன் கேட்டில் உளத்திறன் குறைபாடு ஒருவனுல் பெறப்படுகிறது. இந் நோயாளி ஒரு காலத்தில் இயல்பான திறமைகளைப் பெற்றிருந்தவனே! பின்னர் இத் திறமைகள் சீரழிவுக்கு உள்ளாயின. மூப்புப் பருவத்தில் இயல்பான நுண்ணறிவு படிப்படியாகக் குன்றுதலை இச்செயலுக்கு மூலவகையாகக் கூறலாம். மூப்பில் ஏற்படும் உளச்சீரழிவு மிகையான அளவில் அமையும் வரலாறுகள் உளத்திறன் கேட்டிற்குச் சிறந்த உதாரணங்களாக விளங்குகின்றன. இத்தகைய நோய் வரலாறுகளைக் 'கிழப்பருவத்து உளத்திறன் கெடுதல்' என்பர்.

### பித்து நோய்களின் தன்மை

பித்து நோய்களில் காணப்படும் மற்ருெரு வகையான பொது உளமாற்றம், எதையும் கொள்ளாமல் மாறி அமைவதாக உள்ளது. இதனைத் தற்காலிகமான அல்லது ஓரளவு நிரந்தரமான அனுபவம்பற்றி, உள்ளத்தின் பொதுவான போக்கில் ஏற்படும் மாற்றம் எனக் கருதலாம். கிளர்ச்சிச் சோர்வு உணர்விழப்பு என்பனவும் இவ்வகையினுள் அடங்கும்.

### கிளர்ச்சியின் வேகம்

கிளர்ச்சி என்பதன் பொருளை நாம் ஒவ்வொருவரும் அறிவோம். எனவே அப் பதத்தை நாம் மீண்டும் இங்கே வரையறுக்கத் தேவையில்லை. பித்து நோயில் இந்த அறிகுறி அடிக்கடி காணக்கிடைக்கிறது. இதே நிகழ்ச்சியை இயல்பான உளவாழ்விலும் காணலாம். ஆனல் மிஞ்சிய வகையில் வெளியாதல், போதிய காரணம் இன்றிக் காணப்படுதல், நோயாளியின் உண்மையான நிலை சூழ்நிலை

என்பவற்றிற்குப் பொருத்தமில்லாது அமைதல் என்பன வற்றில், இயல்பான உளவாழ்வில் காணப்படுவதினின்றும் கிளர்ச்சியானது வேறுபடுகிறது.

பித்து நோயில் ஒரு அறிகுறியாகக் காணப்படும் கிளர்ச்சி பல வகைகளில் அமைவதுண்டு. ஒவ்வொரு வகையும் ஏறத்தாழ மற்ற வகைகளினின்று எல்லா வகை களிலும் வேறுபடினும், இந்நிலையில் உள்ளம் பிறழ்வான அளவில் சக்தியை வெளியிடுகிறது என்பது, எல்லா வற்றிற்கும் பொதுவான அடிப்படை உண்மையாகும். இவற்றுள் மிகச் சாதாரணமாகக் காணக்கிடைக்கும் ஒரு வகையை வீறு கிளர்ச்சி என்பர்.

## சோர்வு நிலை

கிளர்ச்சி நிலைக்கு நேர் எதிர்மாறானது எனச் சோர்வு நிலையினை நாம் கருதலாம். நோயாளி ஆமை வேகத்தில் செயல் புரிகிறான், சிந்தனை செய்வதும் அவனுக்குக் கடின மாக இருக்கிறது. மகிழ்வற்றவனாகவும் துயரமடைந்தவ னாகவும் அவன் சதா காணப்படுகிறான்.

## உணர்விழப்பு நிலை

தன்மை சார்ந்து அமையும் மூன்றாவது பொதுமாற்றம் உணர்விழப்பாகும். இந்நிலையில் நோயாளியிடம் கிளர்ச் சியோ சோர்வோ காணப்படுவதில்லை. இவை எதனாலும் அவன் முற்றிலும் பாதிக்கப் படாதவனாக உள்ளான். அக்கறைகள், விருப்பங்கள், பேரவாக்கள் எவையும் இல்லா தவன் போன்றும் காணப்படுகிறான். ‘மனவெழுச்சி சாரும் உளத்திறக்கேடு’ எனப்படும் நிலையில், உணர்விழப்பு மிகச் சிறப்பாகக் காணப்படுகிறது. மருத்துவ மனைகளில் நிரந்தர மாகத் தங்கும் பல நெடுநாளைய நோயாளிகளிடம் இந்நிலை காணப்படுகிறது.

உணர்ச்சியற்றமுகத்துடனும், தலையைத் தொங்கவிட்ட வண்ணமும் மருத்துவமனையின் அறை மூலையில் உட்கார்ந்

திருக்கிறுன். அவன் எந்தவிதமான செயல்களிலும் ஈடுபட முனைவதில்லை. அவனைச் சுற்றிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளிலும் அவன் அக்கறை காட்டுவதில்லை. அவன் எதையும் கவனியாதவன் போலவே காணப்படுகிறுன். அவனிடம் நாம் பேச முற்படின் பெரும்பாலும் அவன் பதிலளிப்பதில்லை. பதிலளிப்பினும் ஒரே சொல்லில் பதில் தருகிறுன். அதுவும் நமது கேள்விக்கு முற்றிலும் பொருத்தமற்றதாகவே இருக்கிறது.

நாம் அடுத்ததாகக் காணக்கூடிய அறிகுறிகள், குழுஇல் பொருட் காட்சிகளையும் திரிபு உணர்ச்சிகளையும் கொண்டு அமைகிறது. பித்து நிலையின் வெளிப்பாடுகளில் இந் நிகழ்ச்சிகள் முக்கியமான இடம் பெறுகின்றன. பெரும்பாலான நோயாளிகளிடமும் இவை காணப்படுகின்றன.

## தவருன புலன் பதிவுகள்

இப் பொருள்களைத் தவருன புலன் பதிவுகள் எனச் சுமாராக வரையறுக்கலாம். உதாரணமாக, நோயாளி இல்லாத ஒரு பொருளைக் காணவோ, அல்லது கற்பனையானயான ஒரு குரலைக் கேட்கவோ செய்கிறுர். இத் தவருன பதிவுகள் எந்தப் புலன் உறுப்பைச் சார்ந்து அமைகின்றன என்பதைப் பொறுத்து இவற்றை கண்சார்வு, செவிசார்வு, இல்பொருள் காட்கிகள் என்று குறிப்பார்கள். செவிசார்வு இல்பொருட் காட்சிகளே மிகச் சாதாரணமாகக் காணப் படுவனவாகும். அக் 'குரல்கள்' மகிழ்ச்சியூட்டுவனவாகவோ, அல்லது துன்பம் பயப்பனவாகவோ அமையலாம். ஆனுல் பெரும்பாலும் அவை நோயாளியின் மிக அந்தரங்கமான வாழ்வோடு நெருங்கிய தொடர்புடைய நிகழ்ச்சிகளைப் பற்றியனவாகவே இருக்கின்றன. பெரும்பாலும், அவை நோயாளியைப் பற்றி இழிவாகப் பேசுவதாகவோ அல்லது அவனைக் கண்டிப்பதாகவோ இருப்பதுடன், ஒரே மாதிரியாகத் தொடர்ந்தமைவதாகவும் இருக்கின்றன.

உதாரணமாக, 'அவன் இதுவரையிலும் இழைத்துள்ள பாவங்களின் காரணமாக அவன் விரைவில் கொல்லப்படுவான்' என்று தொடர்ந்து கூறிக்கொண்டே இருக்கும் குரலை ஒருவன் கேட்கலாம். இந்த விநோதமான நிகழ்ச்சிகளை விளக்குவதற்காகப் பலவேளைகளில் நம்பமுடியாத கற்பனைகளைத் தோற்றுவித்து அவை உண்மையென நம்புமளவுக்குத் தன்னைத்தான் தூண்டிக் கொள்வதுமுண்டு. உதாரணமாகத் தான் கேட்கும் குரல்கள், 'கம்பியில்லாத் தொலைபேசிகள்' அல்லது 'ஆவி உலகினின்று வருகின்றன' என அவன் நம்பலாம்; கூறவும் கூறலாம்.

## திரிபு உணர்ச்சிகளால் பாதிப்புக்கள்

திரிபுணர்ச்சிகள் இருப்பதால், ஒருவரது நடத்தை எந்த அளவிற்குப் பாதிக்கப்படும் என்பதும் மனிதருக்கு மனிதர் பெரிதும் வேறுபட்டு அமையும். துன்புறுகின்ற எண்ணங்களின் செல்வாக்கிற்கு உட்படும் சில நோயாளிகள், தமது கற்பனையில் அமையும் எதிரிகளைக் கடுமையாகத் தாக்குவதால், சமுதாயத்திற்குத் பெரிதும் அபாயகரமானவர்களாக விளங்குவர். மாறுகப் பெருவாரியான நோயாளிகளிடம் அவர்களது நடத்தையில் நேரடியான விளைவுகள் எதனையும் ஏற்படுத்தாதவையாகவே இத்திரிபுணர்ச்சிகள் காணப்படுகின்றன. ஆனால், பலவேளைகளில் நோயாளியின் நடத்தையும் நம்பிக்கையும் ஒன்றிலிருந்து மற்றொன்று முற்றிலும் தனித்து நிற்பதாகவும், பெரிதும் முரண்பட்டதாகவும் இருக்கின்றன. உதாரணமாக, 'தானே இவ்வுலகின் ராணி' என நம்பும் ஒரு நோயாளி மருத்துவமனையைத் துடைத்துச் சுத்தப்படுத்தும் தனது தினசரி வேலையை மிகுதியான மன நிறைவோடு செய்கிறாள். அதேபோன்று, தன்னைச் சர்வ சக்தி வாய்ந்த கோடீசுவரன் என்பவன் தனக்குக் கொஞ்சம் புகையிலை தருமாறு பெரிதும் இரங்கத்தக்க வகையில் அடுத்தவனைக் கெஞ்சுகிறான்.

## பீடிப்புகளின் வகைகள்

அடுத்தபடியாக பீடிப்புகள் என்னும் சொல்லின் கீழ் அடங்கும் நிகழ்ச்சிகளின் குழுவை ஆராயப் போகின்றேம். இவை திரிபுணர்ச்சிகளையே பெரிதும் ஒத்தவை என மேலெழுந்தவாரியாகக் காணப்படினும், அவற்றை வேறு படுத்தியே அறிதல் வேண்டும். உண்மையான பித்து நோய் களில் பீடிப்புகள் காணப்படுவது மிக அருமையாகும். ஆனல் சிலவகை நரம்புக் கோளாறுகளில் அவை சிறப்பாகக் காணப்படுகின்றன. நனவிலுள்ள குறிப்பிட்ட மூலப் பொருள் ஒன்று 'மிகையான அழுத்தம்' பெற்றிருப்பதுவே 'பீடிப்பு' என வரையறுக்கலாம். அதை நீக்குவதற்கு என்ன தான் முயன்றபோதிலும், அது தன் உள்ளத்தில் மீண்டும் மீண்டும் தோன்றிய வண்ணமாகவே இருக்கிறது என நோயாளி கூறுகிருன். இல்லையேல், பொருளற்றதும், பொருத்தமற்றதுமான செயலைச் செய்யுமாறு அவன் தொடர்ந்து கட்டாயப் படுத்தப் படுகிருன். உதாரணமாகத் தனக்குப் புற்றுநோய் இருக்கிறது என்ற எண்ணம் ஒருவனை வாட்டலாம். இந்த ஐயத்திற்கு ஆதாரம் எதுவுமில்லை என்பதையும், அந்த அச்சம் பயக்கும் நோய்க்குரிய அறிகுறி கள் ஒன்றும் அவனிடம் இல்லை என்பதையும், அவன் நன்ருகத் தெரிந்துகொண்டே இருக்கிருன். உண்மையில் தனக்கு அந்நோய் இருப்பதாகவே அவன் நம்பவில்லை. ஆனுலும், அந்த எண்ணத்தைத் தனது உள்ளத்தினின்றும் நீக்க முடியாதவனுக அவன் இருக்கிருன். அந்த எண்ணம் பொய்யானது எனத் தொடர்ந்து அவன் தன்னைத் தேற்றிக் கொள்ள வேண்டியதிருக்கிறது. திட்டவட்டமான தவருன நம்பிக்கை இல்லாமல் இருப்பதுவே ஒரு பீடிப்பிற்கும், திரிபுணர்ச்சிக்கும் இடையேயுள்ள அடிப்படையான வேறு பாடாகும்.

## படிவார்ப்பான செயல்கள்

தீவிரமான நிலையில் பித்து நோயுற்றிருக்கும் நெடுங் கால நோயாளிகளிடம் பெரும்பாலும் காணப்படுவதான

ஒரு விநோதமான நிகழ்ச்சியினை இப்பொழுது நாம் காண முற்படுவோம். இதனைப் 'படிவார்ப்பான செயல்' என்பர்.

ஒரு செயலைச் சலிப்பூட்டும் வகையில் நாள்தவறாது நோயாளி மீண்டும்மீண்டும் செய்த வண்ணமாகவே இருக்கிறான். பெரும்பாலும் நோயாளியின் சக்தி அனைத்தும் அச் செயலைப் புரிவதிலேயே செலவிடப்பட்டு விடுகிறது. எனவே, ஆண்டாண்டுகளாக வேறு எந்தவிதமான அக்கறை, விருப்பம் அல்லது பேரவா என்பன இல்லாதவனாகவே அவன் தோற்றமளிக்கிறான்.

இப் படிவார்ப்பான செயல்கள் எல்லாவகைகள் சார்ந்தனவாகவும், நுணுக்கத்தில் எல்லாவிதமான தரங்களிலும் அமைவதாகவும் இருக்கலாம். கைகளையோ அல்லது தலையையோ எளிய சந்தம் பொருந்திய அசைவுகளில் ஈடுபடுத்துவதிலிருந்து, தொழில் திறனுடைய ஒருவன் தன் தொழிலைச் செய்வது போன்ற வகையில், விரிவாக அமையும் அசைவுகளாகவும் படிவார்ப்புச் செயல்கள் அமையக்கூடும். சில வேளைகளில் நோயாளி ஒரு சொற்றொடரையோ அல்லது வாக்கியத்தையோ முன்னர்க் கூறியதுபோன்றே, கேட்பவருக்குச் சலிப்பூட்டும் வகையில், மீண்டும்மீண்டும் தொடர்ந்து கூறிக் கொண்டிருப்பதுமுண்டு.

# 14

## மனத்திலே சிக்கல்!

நோய்நிலையான உளநிகழ்ச்சிகளில் உள்ளாக அடங்கிக் கிடக்கும் காரணங்களை நாம் தெரிந்துகொள்ள முற்படும் முன்னர், நமது முயற்சி பயனுடையதுதான் என்பதில் நாம் உறுதிகொண்டிருத்தல் வேண்டும். மேலும், இத்தகைய காரணங்கள் உள்ளன என்பதையும் நாம் உறுதியாக நம்ப வேண்டும். இந்த நம்பிக்கையில் உள நிர்ணயிப்பு என்பதை நாம் ஏற்கவேண்டி யிருக்கிறது. அதாவது சட உலகில் உள்ளதுபோன்று உளஉலகிலும் ஒவ்வொரு விளைவிற்கும் ஒரு காரணம் உண்டு. தேவையாகும் முன்காரணிகள் இருக்கு மாயின், அவற்றின் விளைவும் கண்டிப்பாகக் காணப்படுதல் வேண்டும். நாம் விளைவைக் காண்போமாயின், இவ் விளைவைத் தோற்றுவிப்பதற்கெனக் குறிப்பிட்ட திட்ட வட்டமான காரணங்கள் இருந்திருக்கவேண்டும் எனவும் நாம் அறிந்து கொள்வோம்.

பௌதிகத்தில் தற்செயலாக நிகழ்வன என்பது எவ்வாறு கிடையாதோ, அதேபோன்று உளவியலிலும் அவற்றிற்கு இடமே இல்லை. உள்ளத்தில் மின்னிட்டுச் செல்லும் ஒவ்வொரு எண்ணமும், அது என்னதான் பொருளற்றது போன்றும், அல்லது தற்செயலானது போலவும் தோன்றினாலும், அதற்கு முற்பட்ட பல்வேறு உளச்செயல்களிலின்று தோன்றும் ஓர் எண்ணமாகத்தான் அது இருத்தல் வேண்டும்.

### நினைக்கும் எண்கள்

ஓர் எண்ணை நான் நினைக்கவேண்டும் எனக் கேட்டுக் கொள்ளப்படுவேனாயின், எந்தஎண்ணை இதற்கெனத் தேர்ந்

தெடுப்பேன் என்பது சிக்கலாகத் தோன்றும். ஆனால் உண்மையில் அவ்வேளையிலுள்ள மனநிலைக்கு ஏற்ற முறையிலேயே எந்த அண்திட்டவட்டமாகவும் முழுவதாகவும் நிர்ணயிக்கப் படும். தவிர்க்க முடியாத வகையில் ஒரு குறிப்பிட்ட எண் மட்டுமே உள்ளத்தில் தோன்றும். வேறு எண் தோன்றுவது முடியாததாகும். இது உண்மையற்றது போன்றும் நாமாக வலிந்து தோற்றுவித்துள்ள முடிவுபோன்றும் சிலருக்குத் தோன்றக்கூடும். ஆனால், இதனை ஒரு முதல் அடிப்படை உண்மை என நாம் ஏற்காத வரையிலும், உளவியல் என்னும் அறிவியல் நிலைக்கவே வழியில்லை. நம்முடைய சொந்தக் கருத்துக்கள் வேருக இருக்கலாம். ஆனால் உளவியல் அடிப்படையிலும், அறிவியல் அடிப்படையிலும் சிந்திக்க முற்படும்போதெல்லாம், காரண விதியில் அடங்கியுள்ள எல்லா உட்பொருள்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாகவே இருக்கிறது.

## உளவியலின் இறுதி லட்சியம்

நமது நினவின் ஓட்டத்தை நிர்ணயிக்கும் காரணங்களை அறிந்துகொள்வதே உளவியலின் இறுதி இலட்சியமாகும். நாம் இவ்வாறு காணும் விதிகள் இயல்பான மனிதர்களுக்கும் பித்தர்களுக்கும் பொருந்தும் ஒன்ருகவே இருக்கவேண்டும் என நாம் நிச்சயமாக எதிர்பார்போம். ஏனெனில், நோயுற்ற உடல் பகுதியின் செயல்களை நிர்ணயிக்கப் பயன்படும் உடலியல் விதிகளும், ஆரோக்கியமான உடல் பகுதியின் செயல்களை நிர்ணயிக்கப் பயன்படும் விதிகளும் ஒன்றேயாகும். ஓரளவு தரத்திலும், காரணிகளின் சேர்க்கையிலும் மட்டுமே அவற்றுள் வேறுபாடுகள் காணப் படுகின்றன.

## சிக்கல்களும் எண்ணங்களும்!

சிக்கல்கள் எண்ணிறந்த வகையினதாகவும் பலவகைத் தன்மை கொண்டனவாகவும் இருக்கலாம். இவற்றை உண்டுபண்ணும் எண்ணங்கள் எல்லா வகையைச்

சார்ந்தனவாகவும் இருக்கலாம். இவற்றோடு தோன்றும் மனவெழுச்சிக் கிளர்ச்சி இன்பம் தருவதாகவோ, அல்லது துன்பம் பயப்பதாகவோ இருப்பதுடன், மிகத் தீவிரமானதாகவோ, அல்லது ஒப்பீடாகக் காணுமிடத்து மிக வன்மை குறைந்ததாகவோ காணப்படலாம்.

ஒரு சிக்கலின் மனவெழுச்சிக் கிளர்ச்சித்தன்மை மிகத் தீவிரமாக உள்ளபோது, அச் சிக்கல் நனவில் திணிக்கும் செயலின் தன்மையும் அதற்கேற்றபடியே அதிகமாகும். உதாரணமாக, அண்மையில் காமனின் கடைக்கண் வீச்சிற்குப் பலியாகியுள்ள இளைஞனிடம் தோன்றியுள்ள மிக வன்மைவாய்ந்த சிக்கலை எடுத்துக் கொள்வோம். அவனது நனவிலும் அச் சிக்கலைப்பற்றிய எண்ணங்கள் இடையறாது தோன்றிய வண்ணமாகவே இருக்கின்றன. மிகச்சிறு இயைபுடைய தொடர்புகளும் இந்த எண்ணங் களைத் தூண்டப் போதுமானவையாக இருக்கின்றன. தன் காதலியைப்பற்றிய எண்ணங்களைச் சமைப்பதிலேயே அவனது உளச்சக்தி அனைத்தும் ஒருங்கே ஈடுபட்டிருக்கிறது. எனவே, தனது அன்றைய கடமைகளில் தன் மனத்தைத் திருப்பிவிட முடியாதவனாக அவன் இருக்கிறான். நடை பெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவனது காதல்வேட்கை யோடு தொடர்புபடுத்தப்படுகிறது. அவனைப் பொறுத்த வரையிலும், இந்த அண்டம் அனைத்தும் அவனிடம் முனைப் பாகக் காணப்படும் காதற் சிக்கலின் பின்னணியாகத் தோன்றுமே தவிர, வேறொன்றுமே தோன்றாது.

### நனவை நிர்ணயிக்கும் சிக்கல்கள்

எனவே, சிக்கல்கள் என்பன எல்லாம் நனவு ஓடையின் நடத்தையை நிர்ணயிக்கும் காரணங்களாகும். அவை நனவின்மேல் ஏவும் செயலினைப் பௌதிகத்தில் 'விசை' என்னும் கருதுகோளை ஒத்த உளவியல் கருதுகோள் என லாம். இந்தச் சிக்கல்கள் இடையறாது இயங்கிக் கொண்டும் இருப்பதில்லை. சில குறிப்பிட்ட நிலைகளில் மட்டுமே அவை

இயங்குகின்றன. 'தூண்டுதல்' இருக்கும்போது மட்டுமே இந்நிலைகள் உள்ளன. சிக்கலில் இடம்பெறும் ஓர் எண்ணமோ, அல்லது அதிகமான எண்ணங்களோ ஏதேனும் வெளி நிகழ்ச்சியாலோ, அல்லது உள்ளத்தினுள்ளே ஏற்படும் இயைபுச் செயலாலோ செயலில் ஈடுபடுமாறு தூண்டப்படும்போது மட்டுமே, இச் சிக்கல்கள் இயங்குகின்றன. நாம் கூறிய எளிய உதாரணத்தில், பேச்சின் நடுவே புகைப்படம்பற்றிய ஏதேனும் கருத்துக்கள் புகுத்தப்படுவதனுலோ, அல்லது தொடர்பற்ற எண்ணம் ஒன்றிலிருந்து புகைப்படத்துறையோடு திட்டவட்டமாகத் தொடர்புடைய எண்ணத்திற்கு ஏற்படும் கோவையான இயைபினுலோ, 'புகைப்படச் சிக்கல்' தூண்டப்படலாம். தேவையாகும் தூண்டுதல் ஏற்பட்டவுடன் சிக்கலானது நனவில் தனது செல்வாக்கைக் காட்டுகிறது. சிக்கலில் பங்குடைய எண்ணங்கள், மனவெழுச்சிகள், தொடர் செயல்கள் என்பனவற்றை, நனவில் புகுத்துவதே பெரும்பாலும் இச் செல்வாக்காக அமைகிறது. ஒருவன் பெறும் பிற எண்ணங்கள் விவாதங்கள் என்பனவற்றுள் சிக்கலோடு ஒத்து அமைவன வலுப்படுத்தப்படுகின்றன. சிக்கலோடு ஒவ்வாதன தமது கோர்வையான தன்மையை இழப்பதுடன், நனவின் போக்கைத் தடுப்பதும் நிறுத்தப்படுகின்றன.

## அறிவியல் சிந்தனையும் சிக்கலும்

ஒரு சிக்கல் இயங்குவதனுல் தோற்றுவிக்கப்படும் இவ்வகையான எண்ணச் சுழல்கள், அறிவியலின் அடிப்படையில் சிந்திக்கும்போது எழும் எண்ணச் சுழல்களினின்றும் முற்றிலும் மாறுபட்டு அமைகின்றன. அறிவியல் சாரும் சிந்தனையின் ஒவ்வொரு படியும் முன்னைய படியின் விளைவாகவே அமைகின்றது. பெறப்படும் ஆதாரங்கள் எல்லாம் நடுநிலைமையில் ஆராயப்படுகின்றன. நல்ல முடிவுகள் போலத் தோன்றும் ஒவ்வொன்றின் உண்மையும் நடுநிலையின்றே காணப்படுகின்றது. சாதாரண நடைமுறை

வாழ்வில் இத்தகைய தூய அறிவியல் சிந்தனை இருப்பது அருமையே ஆகும். பெரும்பாலான சிந்தனைகள், சிக்கல் சார்ந்து நிற்பது வெளிப்படையாகவே காணப்படுகிறது. நடுநிலையினின்று பிறழாதும், உணர்ச்சிக்கு இடம் கொடாதும் சிந்திக்கும் விஞ்ஞானமான துறை எனப் பாமர மக்களால் கருதப்படும் விஞ்ஞான உலகிலும்கூடச் சிக்கல்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. அறிஞர் பேரவைகளில் நடைபெறும் விவாதங்கள் இவ்வகையில் மிகச்சிறந்த எடுத்துக் காட்டுகளாகத் துலங்குகின்றன.

## மனம் ஒரே வழியிற்போவதேன் ?

மனவெழுச்சிக் கிளர்ச்சிகொண்ட எண்ணங்களின் இந்த அமைப்புகளில், நம் எண்ணங்கள் செயல்கள் என்பன வற்றின் போக்கை நிர்ணயிப்பதில் (ஓரளவேனும்) பொறுப்பு வகிக்கும் வன்மைமிக்க காரணங்களை நாம் காண்கிறோம். இனி நாம் இன்னும் ஒருபடி முன்னேறிச் செல்லலாம். நாம் அந்தப் புகைப்படக்காரரிடம் அவர் ஏன் எப்பொழுதும் குறிப்பிட்ட முறைகளில் மட்டும் சிந்திக்கவும், செயல் புரியவும் முற்படுகிறார் எனக் கேட்போமாயின், அவர் பெரும்பாலும் உடனடியாக 'நான் புகைப்படக்கலையில் ஆர்வம் கொண்டிருப்பதால்' எனக் கூறக்கூடும். அதாவது புகைப்படச் சிக்கல் தம்மிடம் இருப்பதை அவரே அறிந்து கொண்டிருப்பதுடன், அது எந்த முறையில் தன்னிடம் அதன் விளைவுகளைத் தோற்றுவிக்கிறது என்பதையும் தெரிந்துகொண்டிருப்பார். ஆனால், சிக்கலையும் அதன்செயலையும் பற்றிய அகவய உணர்வு எல்லா நிலைகளிலும் இருப்பதில்லை. ஒரு சிக்கல் தனது விளைவுகளை நனவில் தீவிரமாகத் தோற்றுவிக்கும்போதும், அதனால் பாதிக்கப்படும் மனிதர் சிக்கல் இருப்பதைத் தெரிந்துகொள்ளாமலேயே இருக்கலாம். அதாவது தனது உளச் செயல்களை உண்மையில் நிர்ணயிக்கும் காரணங்களைப்பற்றி அவர் ஒரு சிறிதும் அறியாமலே இருக்கலாம். ஓர் உதாரணம் தந்து இக் கூற்றினைத் தெளிவுபடுத்துவோம்:

**சிக்கலும் கருத்தோட்டமும் !**

ஒரு புதிய சீர்திருத்தம் பற்றித் தமது கருத்தை வெளிப்படுத்துமாறு ஒரு கட்சியைச் சேர்ந்த அரசியல்வாதி கேட்டுக் கொள்ளப்படுகிறார் என்போம். அவர் தரும் முடிவு அவரது 'கட்சிக் கருத்தை' ஒட்டியதாகவே பெரும்பாலும் இருக்கும். குறிப்பிட்ட எண்ண அமைப்புகளையும் சிந்தனைப் போக்குக்களையுமே கட்சிக் கருத்து எனப் பொதுவாகக் கொள்கிறோம். நாம் புதிதாகக் கருதும் முறையில் இவற்றை அவரது 'அரசியல் சிக்கல்' என்போம். இச் சிக்கலின் காரணமாக அச் சீர்திருத்தத்தால் எழும் அடிப்படை நன்மையைச் சிந்தியாது, சிக்கலின் அடிப்படைக் கேற்ற மனப்பான்மையைக் கொள்ளும் கட்டாயத்திற்கு அவர் உள்ளாகிறார். அச் சீர்திருத்தம் பற்றி இந்த அரசியல்வாதியுடன் நாம் வாதம் புரிவோமாயின் தன் கட்சியின் கருத்துக்களை ஆதரிக்கும் காரணங்களை மட்டுமே அச் சிக்கல் அவர் உள்ளத்தில் வலுப்படுத்துவதையும், எதிர்க்கட்சியினரது வாதங்களில் பொதிந்து கிடக்கும் உண்மைகளை ஏற்க முடியாதவாறு அச் சிக்கல் தூண்டுவதையும் நாம் காண்போம். இம் மனிதர் தம் உள்ளம் ஏன் அவ்வாறு இயங்குகிறது என்பதைச் சரிவர உணராமல் இருப்பதையும் நாம் காணக்கூடும். தாம் அச் சீர்திருத்தம் பற்றிய நன்மை தீமைகளை அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்ததன்மூலம் மட்டுமே தம் முடிவைப் பெற்றதாகவும் அவர் கற்பனை செய்து கொள்கிறார். அவர் எச் சிக்கலின் செயலைப் புரிந்து கொள்ளாமல் இருக்கிறாரோ அதுவே அவரது சிந்தனையை இங்கு நிர்ணயிக்கிறது என்பது ஒருபுறமிருக்க, வேறு காரணங்களினாலேயே தமது எண்ணங்கள் தோன்றின எனவும் அவர் நம்புகிறார். உண்மையில் அவர் நம்பும் இந்தக் காரணங்களால் அவர் செயலை முழுவதாக விளக்கமுடியாதெனவும், இக்காரணங்கள் அவர் கற்பனையில் மட்டுமே இடம்பெறுவன எனவும் நாம் அறிவோம். தன் சிந்தனைகளின் உண்மையான ஆதாரங்களை மறைத்துத் தற்செயல் நிகழ்ச்சிகளைக் கோவையாக அடுக்கித் தன்னைத்தானே

ஏமாற்றிக்கொள்ளும் இச்செயலினைக் 'காரணம் கற்பித்தல்' என்பர்.

## காரணம் கற்பித்தல்

அரசியல் வாதியைப் பற்றிய உதாரணத்தில் நம்பிக்கைகளும் செயல்களும் நனவிலியிலிருந்து தோன்றுதல், பின்னர் அவை காரணங் கற்பித்தலாக மாறி இயங்குதல் என்னும் இரு உளநுட்பச் செயல்களைக் கண்டோம். இவை உளவியலில் ஆதார முக்கியத்துவம் வாய்ந்தனவாகும். இவற்றை ஒவ்வொருநாளும் ஒவ்வொரு மனிதனிடமும் நாம் காண முடியும். ஒரு மனிதன் தான் ஏன் குறிப்பிட்ட வகையில் சிந்திக்கிறான் என்பதையும், குறிப்பிட்ட செயல்களில் ஏன் ஈடுபடுகிறான் என்பதையும் பெரும்பாலும் தெரிந்து கொண்டிருக்கிறான் என்ற நம்பிக்கை மனித இனத்திடம் நிரம்பி வழிகிறது. ஆனால் இது பெரும்பாலும் தவறான நம்பிக்கையாகும். அறிவுக்கு ஏற்ற முறையில் மட்டுமே செயல்புரிகிறோம் என்ற நம்பிக்கையில் நிலைக்க நாம் மிகவும் துடிப்பாய் இருக்கிறோம். சில சிந்தனைகளிலும் செயல்களிலும் அவற்றின் உண்மையான நோக்கங்களை அறியாது ஈடுபடுகிறோம் என்று ஏற்க வேண்டியிருப்பதை வெறுக்கிறோம். ஆனால், நமது உளச்செயல்களில் பெரும்பாலனவை மனவெழுச்சிச் சார்புகளாலோ, அல்லது நாம் முன்பு விவரித்த சிக்கல்களாலோ தோற்றுவிக்கப்படுகின்றன. அறிவோடு மட்டுமே நிற்றல் என்ற நமது இலட்சியத்திற்கு இந்த எண்ணம் ஒவ்வாததாக இருக்கிறது. எனவே அதை ஏற்காது ஒரு கற்பனையான அறிவியல் செயலை அதற்குப் பதிலாகக் கொண்டு அந்த குறிப்பிட்ட சிந்தனையோ அல்லது செய்கையோ முறையானது எனவும், இயற்கையான முறையில் எழுந்தது எனவும் நம்பும்படி நம்மை நாமே தூண்டிக் கொள்கிறோம். அரசியல் வாதியிடம் நாம் கண்ட 'காரணங் கற்பித்தல்' இவ்வாறுதான் எழுகிறது. இந் நடத்தையின் விளைவுகள் பற்றிய இன்னும் பல எடுத்துக்

காட்டுகளை இயல்பான உளவியலிலும் பிறழ்வு உளவியலிலும் நாம் நெடுகக் காண்போம்.

## சிந்தனையும் அறிவும் !

மனித சிந்தனை, செயல் என்பன உருவாவதில் அறிவே முக்கியமான பங்கு வகிக்கிறது என்ற தவறான நம்பிக்கை காணப்படுவதற்குக் 'காரணங் கற்பித்தல்' என்னும் தன்மை பரவிநிற்றலே காரணமாகும். உண்மையில், பெரும்பாலான சிந்தனைகளும் செயல்களும் நமது இயல்பூக்கங்கள், அனுபவம் என்பவற்றினின்று பிறக்கும் சிக்கல்களாலேயே உருவாக்கப்படுகின்றன. அறிவு இதில் சற்றும் இடம் பெறுவதில்லை. ஆனால், அறிவோடு நிற்றல் வேண்டும் என்னும் நமது அவாவை நிறைவேற்றும்படியாக, அறிவு என்பது பின்னர் வலிந்து புகுத்தப்படுகிறது.

## நோயாளியை ஆராய்ந்து அறியலாமா ?

ஒரு மனிதனின் செயலில் உள்ளீடாக அடங்கி நிற்கும் உண்மையான காரணங்களைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு, அம் மனிதனிடம், 'அவன் ஏன் குறிப்பிட்ட செயலில் ஈடுபடுகிறான்?' என வினவுவது அதிகப் பயனைத் தராது என்பது இடபோது தெளிவாகும். எவ்வளவுதான் உண்மையோடு நாம் அகக்காட்சியில் ஈடுபட்டாலும், நனவின் மேல்வாரியான நிலைகளைத் தவிர அடிப்படையாக உள்ளனவற்றை அதனாலும் வெளியிட முடிவதில்லை. ஒரு செயல் ஏற்படுவதற்குரிய உண்மையான காரணத்தைக் கண்டு அறிவதை நோக்கமாகக் கொண்டு அக்காட்சி இயங்குமாயின், பெரும்பாலும் அதனால் அதன் முடிவைப் பெற முடிவதில்லை. முடிவைப் பெற முடியாத வண்ணம் 'காரணங் கற்பித்தல்' என்னும் நுண்ணிய மனச் செயல் தடுத்துவிடுகிறது. இயல்பான உள்ளங்களை மட்டும் ஆராய முற்படும் உளவியல் அறிஞனுக்குக்கூட இந்த உண்மை அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பிறழ்வுத் துறையில்

ஆராய்ச்சிகளை நடத்த முற்படும் அறிஞனுக்கு, இந்த உண்மை பெரும் முக்கியத்துவம் வாய்ந்தது. சிக்கல்களின் செயல்களை விளக்கும்பொழுது இந்த உண்மையின் முக்கியத்துவம் மேலும் நன்ருகப் புலப்படும்.

உளசி செயல்கள் ஏற்படுவதற்கு உண்மையான காரணங்களாக விளங்கும் சிக்கல்களைக் கண்டு கொள்ளவும், அவற்றைக் காணும் முயற்சியில் உள்ள சிரமங்களைத் தவிர்ப்பதற்குமாக பல விவரமான முறைகள் உள்ளன. இவற்றைப் பயன்தரும் முறையில் பயன்படுத்தப் பெரும்பாலும் ஆழ்ந்த அறிவும், அனுபவமும் தேவையாகும். இங்கு நாம் பாதையிலிருந்து சிறிது விலகிப் பரிசோதனை உளவியல் துறையைச் சிறிது ஆராய்வதுடன், யூங்வெளியிட்டுள்ள ஒரு சுவையான முறையையும் சிறிது விளக்குவோம். யூங்கின் இம்முறை உளவியல் ஆராய்ச்சிகளில் பெரும் உதவியை ஆற்றியுள்ளது.

## டாக்டர் யூங் சொல்லும் அநுபவம் !

சிக்கல் ஒன்று மறைமுகமான முறையில் தன்னை வெளியிடுவதற்கு மற்ருெரு உதாரணத்தையும் ஈண்டுத் தருகிருேம். சில நாட்களாக இந்த நோயாளியும் அவரது தந்தையும் சுமுகமான உறவுகொண்டிருக்கவில்லை. ஆயினும், இந் நோயாளி தமது தந்தையிடம் உண்மையான பற்றுடையவராகவே இருந்தார். இவரது தந்தையோடு இவர் மீண்டும் சுமுகமான உறவை ஏற்படுத்திக் கொள்ளவும் முயன்ருர். ஆனல், இவரது தந்தை இவரது முயற்சிகளை ஏற்காதது இவரது உள்ளத்தில் பெருவேதனை தருவதாக நின்றது. ஒருநாள் அசாதாரணமான முறையில் மிகவும் மனம் சோர்ந்தவராக இந்நோயாளி என்னிடம் வந்தார். வெளி நாட்டினர் இருவர் இழிவான முறையில் நடத்தப் பட்டதைத் தாம் அன்று காலையில் கண்டதாகவும், அந் நிகழ்ச்சிப்தமக்குப்பெருஅதிர்ச்சி ஊட்டுவதாக இருந்ததால், தாம் அந்நாள் முழுவதும் மனம் வெதும்பி இருந்ததாகவும்

அவர் கூறினர். அவரது உள்ள நிலையைப் பற்றி நான் சரிவர அறிந்தேன். எனவே, அவரிடம் காணப்பட்ட உள்ளச் சோர்வை அவர் குறிப்பிட்ட நிகழ்ச்சி தோற்றுவித்திருக்க முடியாது என உணர்ந்தேன். எனவே, இதைப் பற்றிச் சரிவர அறிய அவரை முழுவதாக ஆராய்ந்தேன். இதன் மூலமாக அவரது அப்போதைய மன நிலையைத் தோற்றுவித்திருந்த உண்மையான சிக்கலைக் கண்டு கொண்டேன். அன்று காலையில் இந் நோயாளி தமது தந்தையிடமிருந்து ஒரு கடிதத்தைப் பெற்றிருந்தார். வழக்கமான குற்றச்சாட்டுகளையும் கண்டனங்களையும் அது தாங்கி வந்திருந்தது. தந்தை அவரைத் துன்புறுத்தும் முறையில் நடத்தியதே அவரிடம் உளச்சோர்வு தோன்றிய தற்குரிய உண்மையான காரணமாகும். வெளி நாட்டினர் இருவர் பெற்ற தொல்லைகள் காரணங் கற்பித்தலுக்கு அவருக்கு மறைமுகமாக உதவியாகத் தோன்றி நின்றன.

## உள்ளடங்கி வெளிப்படும் உணர்வுகள்!

ஒரு மனிதனின் எண்ணங்கள் செயல்கள் என்பன வற்றின் உண்மையான காரணங்களை அம் மனிதரும் அவரை ஆராய்வோரும் கண்டுகொள்ளா வண்ணம் இப் பல்வேறு நுட்பச்செயல்கள் மறைக்கலாம். நடத்தையைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாக அமையும் காரணங்கள் உள்ளத்தில் மேலெழுந்தவாரியாக இருப்பதில்லை. உள்ளத்தின் ஆழத்தில் நிற்கும் இவற்றினைத் துல்லியமான உளவியல் பகுப்பாய்வின் மூலம் மட்டுமே காணமுடியும். இது போன்ற உளநுட்பச் செயல்கள் பித்து அறிகுறிகளைத் தோற்றுவிப்பதில் பங்கு கொள்ளக்கூடும் என இப்பொழுது நாம் தெரிந்துகொள்கிறோம். மேலும், இந்த அறிகுறிகள், மறைந்து கிடக்கும் சிக்கல்கள், தம்மை மறைமுகமாகவும் உருமாற்றியும் வெளியிடுவதாகவும் இருக்கமுடியும் என்பதும் நமக்குப் புலனாகிறது. எனவே, இந்த அறிகுறிகளைப் புரிந்துகொள்ள முடியாது துன்புறுவது அவற்றிற்குரிய சிக்கல்களைப்பற்றி நாம் தெரிந்து கொள்ளாமல் இருப்பதால்

நேருகிறது. இச் சிக்கல்களை நாம் தெரிந்துகொண்ட அளவில் இத்துன்பம் நீங்குகிறது. அழுங்கு நோயாளி பொருத்த மற்றதும் தகாததுமான ஒரு எண்ணத்தால் மிகையான துயரத்திற்கு உள்ளாகி இருப்பதுபோல் தெரிகிறது. ஆனால் வேறு வலிமை மிக்க காரணங்களாலேயே அவனது துயரம் தோன்றியுள்ளது என நம்மால் நிரூபிக்க முடியும்போது, அந்த எண்ணம் நாம் கருதியதுபோன்று பொருத்தமற்றதோ அல்லது தகாததோ அன்று எனத் தெரிந்துகொள்வோம். யூங் உதாரணங் காட்டியுள்ள நோயாளியிடம் கோயில் மணிகளின் இன்னிசை எரிச்சலூட்டியது முதலில் புலனாகாமல்தான் இருந்தது. ஆனால் அம் மனிதனின் உள்ளத்தின் அடித்தளத்தில் புதைந்து நின்ற உளச்செயல்களை நாம் கண்டபோது, நோயாளியின் நடத்தையை விளக்கமுடிந்ததன்றோ? இதுபோன்றே நமது நோயாளிகள் சிலர் வெளியிடும் திரிபுணர்ச்சிகள் விசித்திரமானவையாகவும், அடிப்படையின்றி அமையும் அபத்தங்களாகவும் தோன்றலாம். ஆனால் உள்ளத்தின் ஆழத்தில் நிற்கும் உளச்செயல்களைக் காண்போமாயின், அவற்றை நாம் புரிந்துகொள்ள முடியும். உள்ளடங்கியுள்ள உளச்செயல்கள் மறைமுகமாகத் தம்மை வெளியிடுவதே இத் திரிபுணர்ச்சிகளாக இருக்கலாம். காரணங் கற்பித்தலின் நடத்தையாகவும் இது இருக்கலாம். மேலும் உள்ளடங்கி நிற்கும் இவ் வுள்ளச் செயல்களும் காரணத் தோடும் தொடர்போடும் அமைவனவாகவே காணப்படும்.

### கருதுகோளின் விளக்கம்!

சித்தம் கலங்கிய உள்ளம், மேலெழுந்த வாரியாகக் காணும் ஆராய்ச்சியாளன் எண்ணுவதுபோல வெறும் குழப்பத்தின் இருப்பிடம் அல்ல எனவும், உள்ளத்தின் ஆழத்தில் நின்று சிதைவுற்று நிற்கும் அறிகுறிகளைப் பொருளுடைய ஒன்றாக இணைக்கும் உளச்செயல்களை நாம் அறியாதிருப்பதன் காரணமாகவே பித்தனின் உள்ளம்

குழம்பிக் கிடப்பது போலத் தோன்றுகிறது எனவும் கூற முற்படும் கருதுகோள், கருத்துக்கேற்றதாகவும், நம் சிந்தனையைத் தூண்டுவதாகவும் இருக்கிறது. அண்மையில் நடந்துள்ள உளவியல் ஆராய்ச்சிகள் இக் கருதுகோள் ஏற்கத் தகுந்ததெனக் காட்டி, அவற்றைப் பெருமளவில் வலியுறுத்தியிருப்பதைப் பின்வரும் அதிகாரங்கள் காட்டும். பித்தனின் எண்ணங்களும் செயல்களும் பொருளற்றனவோ, அல்லது புரிந்துகொள்ள முடியாத குழப்பமோ அல்ல வெனவும் நாம் நிரூபிக்க முற்படுவோம்.

மேலும் இயல்பான மனிதனின் உள்ளத்திலுள்ளதைப் போன்றே புரிந்துகொள்ள முடியாதது போல வெளியில் தோன்றும் பித்தனின் உள்ளத்திலும், காரணம்—விளைவு என்பன குறிப்பிடத்தக்க வகையில் பங்கு வகிக்கின்றன. பித்தனின் உள்ளத்தில் நிலவும் உளச்செயல்களை உளவிதிகளைக் கொண்டு விளக்கமுடியும். இதே விதிகள் இயல்பான மனிதனின் உள்ளத்திற்கும் பொருந்தும். நம்மைக் கலக்கமுறச் செய்வனபோன்ற தொல்லை களுடனேயே பிதத்னும் போராடுகிறுன். நம்மைப் போன்றே பித்தனும் எண்ணங்கள் விருப்பங்கள் பேரவாக் கள் என்பனவற்றை வெளியிட முயற்சிக்கிறுன்.

# 15

# மனப் போராட்டம்

## உள்ளம் பிளவுபடுவதேன் ?

ஒரு சிக்கல் ஏதேனும் ஒரு காரணத்தினுலே உள்ளத்தோடு இசைவற்று நிற்கிறது எனக் கொள்வோம். ஒருகிகால், சிக்கல் இயல்பாகவே துயரார்ந்ததாக இருப்பதனுல் இது நேர்ந்திருக்கலாம். இல்லையேல், பொதுக் கருத்துக்களுக்கும் கொள்கைகளுக்கும் ஒவ்வாத செயல்களில் அவனை ஈடுபடுமாறு அச்சிக்கல் தூண்டுவதாலும் நேர்ந்திருக்கக் கூடும். இத்தகைய இசைவற்ற நிலையில் உளப்போராட்ட நிலை காணப்படுகிறது. இது சிக்கலுக்கும் ஆளுமைக்கும் நடுவே எழும் போராட்டமாக அமைகிறது. இவ்விரு சக்திகளும் ஒன்றையொன்று தடைப்படுத்த முற்படும். இதனுல் உள்ளம் தனக்கெதிராகவே பிளவுபடும். இதனுல் செயலில் ஈடுபட முடியாத ஒரு தேக்க நிலை ஏற்படும். முன்னர் நாம் கூறியுள்ள காதலன் உதாரணத்தையே ஒரு சிறிது மாற்றி அமைத்து உளப்போராட்டம் என்னும் இக் கருத்தை விளக்குவோம்.

## காதலிலே மனப் பிரிவு !

ஏற்கனவே வேருெருவரது மனைவியாக இருக்கும் ஒரு பெண் இம் மனிதனின் வேட்கைப் பொருள் எனக் கொள்வோம். இப்பொழுது இக் காதலனின் உள்ளத்தில் எதிராகவும், முரணுன முறையிலும் இயங்கும் இருசிக்கல்கள் காணப்படுகின்றன. இவற்றுள் ஒன்று அப்பெண்ணிற்காக ஏங்கும். மற்ருென்று ஒழுக்க நெறியாலும் பின்விளைவுகள்

பற்றிய அச்சத்தாலும் உருவாகி எதிர்முறையில் இயங்கும். இத்தகைய நிலையில் இவை இரண்டாலும் உரிய செயலின் மூலம் தடையின்றித் தம்மைப் புறத்தே வெளியிட முடிவ தில்லை. இதனால், மனப்போராட்ட நிலை தோன்றுகிறது. இப் போராட்ட நிலையில், மகிழ்வற்ற மனவெழுச்சி கொண்ட விறைப்புக் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இந் நிலையில் மாறுபட்ட இரண்டு நடத்தைகளில் எதில் ஈடுபடுவது எனத்தெரியாமல் அம்மனிதன் தயங்குகின்றான். அவனால் இவ்விரு நடத்தைகளில் எதிலுமே ஈடுபட முடியாது· ஏனெனில், ஒன்றில் ஈடுபட முடியாவண்ணம் மற்றது எதிர்த்து நிற்கிறது அல்லவா!

## போராட்டமும் முடிபும்!

நம்முள்ளே போராட்டத்தில் ஈடுபட்டுள்ள சக்திகளை நாமே அறிந்து கண்டுகொள்வதும், நனவுநிலையில் தேர்ந் தெடுக்கப்பட்ட நடத்தையில் அவற்றை உணர்ந்து ஈடுபடு வதும், சிக்கலைத் தவிர்ப்பதற்குரிய அறிவானமுறை எனவும், இலட்சிய முறை எனவும் கருதலாம். உண்மையாகக் கூறின், சிக்கலைத் தவிர்ப்பதற்குரிய வழியை இம்முறை மட்டுமே தருகிறது. நாம் இப்பொழுது விவரிக்க இருக்கும் பிற முறைகளில் எல்லாம் உள்ளம் தன்னிடமுள்ள மன வெழுச்சி விறைப்பையும் செயலிழப்பையும் நீக்குவதற்கு இறுதிமட்டும் போரிடுவதில்லை. மாறாகச் சிக்கலையே முற்றிலும் தவிர்க்கும் செயலின் மூலமாக இவ்வாறு செய்து கொள்கிறது. இங்கு, போராடும் இரு சிக்கல்களும் ஒன்றை யொன்று சந்திக்க உள்ளம் இடம் தருவதில்லை. இதனால், இப்போரில் எழும் அழுத்தம் தொல்லை என்பனவற்றினின்று உள்ளம் தப்பித்துக் கொள்கிறது.

## தாழிட்ட தனியறை

இவற்றுள், முதல் முறையில், உள்ளத்தில் காணப்படும் எதிர்மாறான இரு எண்ணக் குவியல்களும் பாதுகாக்கப்

படுகின்றன. அதே வேளையில், அவற்றினிடையே தொடர்போ அல்லது இடைவினையோ ஏற்படுவது மிகக் கவனமாகத் தவிர்க்கப்படுகிறது. இவை ஒவ்வொன்றும் அடுத்த எண்ணத்திற்கு முரணாக இருப்பதைப் பற்றிக் கவலை கொள்ளாது, தன்வழியில் தொடர்ந்து செல்லவும் வளரவும் அனுமதிக்கப்படுகிறது. இத்தகைய நிகழ்ச்சி காணப்படும் உள்ளத்தை, ஒரு இசைக்குழுவில் பிறர் ஏற்படுத்தும் சீரான இசையைக் கலைப்பதைப் பற்றிக் கவலைகொள்ளாது, தன் விருப்பப்படி தனக்கிசைந்த இசையை எழுப்பும் கலைஞனுக்கு ஒப்பிடலாம். இதுவே 'தாழிட்ட தனியறை' எனப்படுவதும், சாதாரணமாகக் காணக்கிடைப்பதுமான உளநுட்பச் செயலாகும். இதன் மூலமாகவே தனது சொந்த வாழ்வில் நெறியோடு நிற்கும் மனிதன், தனது வணிக ஈடுபாடுகளில் நெறியற்றவனாக இருக்க முடிகிறது. இவ்விரு துறைகளிலுள்ள நடத்தையும், உள்ளத்தால், அவை சிறிதும் தம்முள் கலந்துவிடா வண்ணம் தனித்தனியே பிரித்துவைக்கப்படுகிறது. கொள்கை ஒன்றாகவும், நடத்தை வேறொன்றாகவும் இருப்பதை இது விளக்குகிறது. தம் சமயத்தை வாயால் புகழ்ந்து தமது நடத்தையால் இகழுப வர்களாகவும், 'படிப்பது இராமாயணம், இடிப்பது கோயில்' என்னும் வகையிலும் வாழும் பெருவாரியான மக்கள் திட்ட மிட்டுச் செய்யும் போலி வேடதாரிகள் எனவும் தவறாகக் கொள்ளப்படுகின்றனர். இவர்களைச் சரிவரப் புரிந்து கொள்ளவும் எடைபோடவும் இக் கருத்து உதவுகிறது.

**காணமறுக்கும் உள்ளம்!**

தன் காதல் நங்கையிடம் தெளிவாகக் காணப்படும் குறைபாடுகளைப் புரிந்துகொள்ளமுடியாமல் இருப்பதையும் அதே உளநுட்பச் செயல் விளக்கும். அவரது உள்ளம் அக்குறைபாடுகளைக் காண மறுப்பதால் அவரால் அவற்றைக் கண்டுகொள்ள முடிவதில்லை. ஆகாத இந்த உண்மைகளும் அவற்றினின்று பிறக்கும் எண்ணங்களும் அவரது வேட்கையோடு தொடர்பு கொள்ள அனுமதிக்கப் படுவதில்லை.

# 16

# மன நோயாளர் தன்மை

பித்துப் பிடித்த நோயாளிகளிடம் பேதைமைக் குணம் காணப்படுகிறது. இதுவே அவர்களிடமுள்ள மிகப் பொதுமையானதும், மிக வெளிப்படையாகக் காணப்படுவதும், மிகத் தலையோங்கிக் காணப்படுவதுமான குணமாகும். அவனது திரிபுணர்ச்சிகள் தவறான நம்பிக்கைகள் என்பதும், அவனது இப் பொருட்காட்சிகள் உண்மையில் இல்லாதன என்பதும், அவனது அப்போதைய நிலையில் உளச்சோர்வு அல்லது இறும்பூதுநிலை என்பன முற்றிலும் பொருந்தாதவை என்பதும் மிகத் தெளிவாகவே தெரிகின்றன. மேலும், அவனது அனுபவங்கள் சுட்டும் முரணான தன்மைகளை ஒரு சிறிதும் புரிந்துகொள்ள முடியாதவனாகவும், மிகத் திறமையுடன் தரும் விவாதங்களையும் நிருபணங்களையும் புரிந்து கொள்ள முடியாத அளவில் மடமையானவனாகவும் அவன் இருக்கிறான். இவற்றையெல்லாம் மேலெழுந்தவாரியாகக் காணும் ஒருவர், நோயாளி ஆராயும் திறனை இழந்து விட்டிருப்பதன் காரணமாகவே விசித்திரமான அவ்வறிகுறிகள் தோன்றியுள்ளன என்று முடிவு செய்வர். இத்தகைய ஆராய்வாளரைப் பொறுத்தமட்டிலும் அம்மனிதனின் அறிவாற்றல் திறன்கள் அனைத்தும் நோயுற்றுள்ளன; இதனால் அம் மனிதனின் உள்ளம் எத்தகைய சிந்தனையையும், அவை எவ்வளவு மடமையாகவும், ஆதாரமற்றனவாகவும் இருப்பினும் சீர்தூக்கிப் பகுத்தறியும் திறனற்றதாக உள்ளது.

## சிந்தனைகளும் திரிபுணர்ச்சிகளும்

ஆனால், இதனை நாம் கவனமாக ஆராயும் போது பெறும் உண்மைகள், இக் கருத்திற்கு ஒவ்வாதனவாக இருத்தலைக் காண்போம். பல நோயாளிகளிடம் அவர்களது சிந்தனைகள் அவர்களிடமுள்ள திரிபுணர்ச்சி அமைப்புகளோடு உடனடியாகத் தொடர்பு கொண்டிராத நிலையில், அவர்களது சிந்தனைத் திறன்கள் மிகத் திறம்பட இயங்குகின்றன. உதாரணமாக, தாம் மூன்றும் ஜார்ஜ் மன்னரின் மகன் என உறுதியாக நம்பும் நோயாளி மிகக்கடினமான கணக்குகளைப் போடும் திறனுடையவராக இருக்கலாம். அவருக்கு மருத்துவமனையில் தரப்பட்டுள்ள பணிகள் சிறந்த முடிவுத்திறனையும் பாகுபடுத்தி அறியும் திறனையும் வேண்டுவனவாக இருப்பினும், அவற்றை அவர் மிகச்சிறந்த முறையில் செய்து முடிக்கவும் கூடும். நோயாளியின் குடும்ப ஆராய்ச்சியில் இறங்காத வரையிலும், அவர்களுடைய சிந்தனைத் திறன்கள் இயல்பாகவும் திறம்படவும் இயங்குகின்றன எனவும், அத்தகைய ஆராய்ச்சி தொங்கப் பட்டவுடன் உள்ளம் திடீரென நோய்வாய்ப்பட்டு அறிவைத் துறந்து பயனற்ற வகையில் விந்தையான எண்ணங்களைத் தோற்றுவித்துக் கொள்கிறது எனவும் நாம் துணிவு கொள்ளலாமா? இல்லையேல், அந்த மேல் வாரியான ஆய்வாளரின் கொள்கை பொருந்தாது; சிந்தனைத் திறன்கள் நோயுறுவதால் இந்நிலை தோன்றுவதில்லை எனக் கொள்ளலாமா?

## புரியாதது புரியும் !

மறைந்து வதியும் ஓர் உளச்செயலை மறைமுகமாக வெளியிடுவதே நோயாளிகளிடம் காணப்படும் திரிபுணர்ச்சியாகும். எனவேதான் இத் திரிபுணர்ச்சி மடமையானது போன்று காணப்படுகிறது. அவ் உளச்செயலை நாம் தெரிந்து கொள்வோமாயின் அது பொருளுடையதாகவும் புரிந்துகொள்ளக் கூடியதாகவும் காணப்படும். ஆனால் அது

மறைந்துள்ள வரையிலும் அத் திரிபுணர்ச்சி அடிப்படை இல்லாதது போன்றும் தொடர்பற்றதாகவுமே காணப் படும். சென்ற அதிகாரங்களில் கூறியுள்ள உண்மைகள் இக் கூற்றின் உண்மையை விளக்க உதவும். ஒரு மனிதன் அற்பக் காரியத்திற்காகக் கடும் சினம் கொள்வதை நாம் புரிந்துகொள்ள முடியாது இருக்கிறோம். ஆனால், உண்மை யில் அச்சினம் வேறு போதிய காரணத்தால்தான் தோன்று கிறது என நாம் அறியும்போது, அத் திகைப்பு மறைகிறது. அதைப் போன்றே திரிபுணர்ச்சிகள் தோன்றுவதற்குக் காரணமான உளச்செயல்களின் கோவையை நாம் கண்டு கொள்ளும் போதெல்லாம், அவற்றைப் புரிந்துகொள்ள முடியாது என்னும் நிலையும் மறைகிறது என்பதை முன்னரே கண்டோம்.

## விவாதமே பயனற்றது !

பித்து நோயாளியிடம் அவனது திரிபுணர்ச்சிகளைப் பற்றி விவாதிப்பது பயனற்றது எனப்படுகிறது. இதன் காரணத்தை நாம் புரிந்து கொள்ளலாம். நமது விவாதங் கள், திரிபுணர்ச்சியைத் தோற்றுவிக்கும் மறைந்துள்ள உண்மைக் காரணத்திற்கு எதிராகத் தரப்படாமல் மேலெழுந்த வாரியான அதன் வெளிப்பாட்டுக்கு எதிராகத் தரப்படுவதால் அவை பயனற்றுப் போகின்றன. நோயாளியைக் ‘காரணம் கற்பித்தலில்’ ஈடுபடத் தூண்டுவதே அவற்றால் விளையும் பயனாகும். அதாவது, உள்ளுறையும் சிக்கலால் உண்மையில் தோன்றியுள்ள அத் திரிபுணர்ச்சிகளுக்கு வேறு அறிவியல் சார்பான காரணங் களைக் கற்பித்துக் காண அவை அவனைத் தூண்டும்.

## சிக்கலின் விளைவான சிந்தனைகள்

ஆர்வம் மிகுந்த அரசியல் வாதியும், சமயவாதியும் ஏன் நம் விவாதங்களைப் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கிறார் கள் என வினவுவோமாயின், ‘அவர்களது அறிவுத் திறன்கள்

நோய்வாய்ப்பட்டுள்ளதால்' என நாம் கருதமாட்டோம். ஆயினும், அந்நிலையில் அவர்களது உளச்செயல்கள் அறிவியல் விதிகளுக்கு முரணான வகையில்—அறிவற்ற வகையிலேயே உள்ளன. ஆதாரங்களைச் சார்பின்றி ஆராயாததினாலே நம் அரசியல் வாதிகள் அத்தகைய முடிவுகளைப் பெறுகிறார்கள். அவரது சிந்தனை முன்னுள்ள உண்மைகளினின்று படிப்படியாக அறிவியல் ரீதியில் பெறப் படுவதில்லை. மாறாக, அவர் பெறும் முடிவு அவரிடமுள்ள அரசியல் சிக்கலினின்று எழுவதாகவே உள்ளது. சார்பற்ற முறையில் அறிவியல் உண்மைகளை அவர் பயன்படுத்து வாரெனின், அந்த ஆதாரங்களினின்று அவர் பெற்றுள்ள முடிவுக்கு நேர்மாறான முடிவினையும் அவர் பெறக்கூடும். அவரது 'அரசியல் சிக்கல்' பங்கு வகிக்கும் நிலைகளிலெல்லாம் அவரது அறிவுத் திறன்கள் தமக்கு இயல்பான முறையில் இயங்க அனுமதிக்கப்படாதிருப்பதால், அவ்வரசியல்வாதி அறிவு நிலையினின்று சிந்திக்க முடிவதில்லை என்ற முடிவுக்கே நாம் வரவேண்டியதிருக்கிறது. தனது சிந்தனைகள் அறிவுக்குப் பொருந்தாவண்ணம் அமைந்துள்ளன என்பதை அவரே தெரிந்து கொண்டிருப்பதில்லை. தனது சிந்தனைகள் மிகத் தெளிவாகவும் ஐயத்திற்கு இடமின்றியும் அமைந்திருப்ப தாகவே அவருக்குத் தோன்றுகின்றன. இந்த உண்மைகளைக் கொண்டு மற்றொரு ஆராய்வாளர் எவ்வாறு வேறொரு முடிவிற்கு வரமுடியும் என்பதையே அவரால் புரிந்து கொள்ள முடிவதில்லை. 'உண்மைகளைப் புரிந்து கொள்ள முடியாத தன்மையும், பொதுச் சிக்கல்களுக்குத் தரக்கூடிய ஒரே வகையான முடிவுகளை ஏற்க முடியா திருப்பதுமே' எதிர்க் கட்சியினரிடம் காணப்படும் வியப்பூட்டும் தன்மை என்றுமாற்றுக் கட்சியினன் கருதுகிறான்.

### சராசரி மனிதனின் கருத்துக்கள்!

ஒரு சராசரி மனிதனின் உள்ளத்தில் இடம் பெற்றுள்ள னவற்றை நாம் ஆராய்வோமாயின், அதில் எண்ணிறந்த னவும், சிக்கல் வாய்ந்தனவும், கடினமானவையுமான பல

வகைப்பட்ட பொருட்களைப் பற்றி மிகத் திட்டவட்டமான முடிவுகள் இடம்பெற்றிருத்தலைக் காண்போம். அண்டம் எவ்வாறு தோன்றிற்று, அதன் தன்மை யாது என்பனபற்றி ஓரளவு நல்ல முடிவுகளுக்கு வந்திருப்பதுடன், அதன் பொருள் யாது எனவும் அவன் புரிந்து கொண்டிருப்பான். சாவின் போதும் அதற்குப் பின்னரும் தனக்கு நேரப் போவது பற்றியும், ஒழுக்கம் என்ருல் என்ன, ஒழுக்கத்தின் அடிப்படையாக அமைய வேண்டுவது யாது என்பன பற்றியும் முடிவுகளைக் கொண்டிருப்பான். நாட்டை எவ்வாறு அரசோச்ச வேண்டும் எனவும், அது ஏன் இன்று இழிநிலையில் உள்ளதெனவும் அவன் புரிந்து கொண்டிருப்பான். அதுபோன்றே ஒரு சட்டம் ஏன் நன்மை பயப்பது என்பதையும், மற்ருென்று ஏன் தீமை பயக்கிறது என்பதையும் தெரிந்து கொண்டிருப்பான். மேலும் இராணுவ, கடற்படைத் தந்திரங்கள், வரி விதிக்க வேண்டிய முறைகள், அம்மை குத்துதல், மது வகைகள் என்பன வற்றைப் பயன்படுத்த வேண்டிய வகை, காய்ச்சலைக் குணப் படுத்தும் முறை, நீரினுல் எழும் பீதியைத் தவிர்க்கும் உபாயம், நகராண்மையினர் விற்பனைகளில் ஈடுபடல், கிரேக்க மொழியைப் போதிக்கும் முறை, கலையில் புகுத்தப் படக்கூடியன, இலக்கியத்தில் மனநிறைவு தருவன, அறிவி யலில் நம்பிக்கை ஊட்டுவன என்பன பற்றியும் திட்ட வட்டமான கருத்துக்களைக் கொண்டிருப்பான்.

## தெளிவும் மடமையும்!

அறிவியல் சாராத மேற்கூறிய எல்லா எண்ணங்களும் நம்பிக்கைகளும் அவற்றைக் கொண்டிருப்பவருக்கு உண்மை யாகவே தெளிவாகவும், உடனடியாகவும் தெரியும் கூற்றுக்கள் போன்றும், அவற்றின் உண்மையை ஐயுறுவது மடமையானது போன்றும் தோன்றும். ஆயினும், ஒரு தனிப்பட்ட மனவெழுச்சியானது எழுச்சியோடும் உண்மை யானவை என்றறியல்பூக்க உறுதியோடுமே கொள்ளப்படும்

இம்மனவெழுச்சியின் எழுச்சியையும் இயல்பூக்க உறுதி யையும் வரையறுப்பது கடினமாகும். ஆனல் அகக்காட்சியில் இறங்கும்திறனை ஓரளவு இயல்பாகக் கொண்டுள்ள எவருக் கும் அவற்றின் தன்மை உடனடியாகப் புலனுகும். காணப் படும் உண்மைகளை அறிவியல் ரீதியில்பகுப்பதால்தோன்றும் உண்மை அறிவு, இவற்றைப் போன்று தோற்றமளிப்ப தில்லை. அறிவியல் சாராத உண்மைகளில் காணப்படும் எழுச்சியின்றி, அது ஓரளவு சப்பென்றும் காணப்படுகிறது. அவற்றின் உண்மையைப் பிறர் சோதிக்க முனையும்போது நாம் எரிச்சலடைவதில்லை. மாருக, அது எந்த அடிப்படை களின் மேல் நிற்கிறது என்பதை இன்னும் ஆராயவே நாம் தூண்டப்படுகிருேம். ஒரு பெண்ணைத் துன்புறுத்துபவன் கயவன் என்னும் கூற்றுப்பற்றியும், உலகம் பகலவனைச் சுற்றிச் சுழல்கிறது என்ற கூற்றுப்பற்றியும் தனது மனப் பான்மைகளை அகக்காட்சி நிலையினின்று வாசகர் ஒப்பிட்டு நோக்குவாராயின், இவ்விருவகை உளச்செயல்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடு உடனடியாகத் தெளிவாகும்.

### சிக்கலில் பிறக்கும் சிந்தனைகள் !

பித்தரிடம் காணப்படும் திரிபுணர்ச்சிகளின் உண் மையான தன்மைகளும் இவையேயாம். அவையும் அறிவியல் சாராது, சிக்கல்களினின்றே பிறக்கின்றன. அவற்றிலும் ஒரு தனிவகையான மனவெழுச்சியும் அவையே உண்மையானவை என்ற இயல்பூக்கம் சார்ந்த உறுதியும் காணப்படுகின்றன. மேலும் அவற்றின் உண்மை உடன டியாகப் புலனுவது போன்றும், மறுக்கமுடியாத உண்மை போன்றும் தோன்றும். தனது முடிவுகள் மறுக்க முடியாத உண்மைகள் என்பதையும், தனது முடிவுகள் மட்டுமே சரியா னவை, முடிவாகத் தோன்றக்கூடியன என்பதையும் எவ் வாறு பிறர் புரிந்துகொள்ளாது இருக்கமுடியும் என்ப தையும், அவனுல் புரிந்துகொள்ள முடிவதில்லை.

ஒரு திரிபுணர்ச்சியின் அகவயநிலை நமக்கு எங்ஙனம் தோன்றுகிறது? அதாவது அதைக் கொண்டிருக்கும் நோயாளிக்கு அத் திரிபுணர்ச்சி எவ்வாறு தென்படுகிறது என்ற கேள்வி முன்பு ஒரு பக்கத்தில் எழுந்தது. அதன். விடை சென்ற பத்தியின் கடைசி வரியில் அடங்கியுள்ளது? அது அப்பட்டமான உண்மை என நோயாளிக்குத் தோன்றுகிறது. அதன் உண்மையைக் கிறுக்கர்கள் தவிர மற்றெவரும் ஐயுறமாட்டார் எனவும், அத்தகைய தெளிவான உண்மையைத் தாங்குவது பயன் தராததும், மடமையானதும், அல்லது விஷமமானதுமான செயல் என்றுமே நோயாளிக்குத் தோன்றும்.

பித்து நிலையிலுள்ள நோயாளியின் சிந்தனைத் திறன்கள் இயல்பான மனிதர்களது சிந்தனைத் திறன்களினின்றும் வேறுபடுவன அன்று. எனவே. பித்து நோயாளி அறிவியலுக்கு ஒவ்வாது நிற்பவன் என்றும் நாம் முடிவு செய்யலாகாது. அவனிடமுள்ள சில உளச்செயல்கள் அறிவியலுக்கு ஒவ்வாத மூலத்தினின்று தோன்றுகின்றன என்பது தான் உண்மை. ஆனால் இயல்பான மக்களிடமுள்ள பெரும்பாலான எண்ணங்களும் நம்பிக்கைகளும் அதே வகையில் தானே தோன்றுகின்றன. எனவே, இக் காரணத்தைக் கொண்டுமட்டும் பித்துப்பிடித்தவர் வினோதமான வகையில் அறிவியல் சாராதவர் எனக் கருத முடியாது.

## பித்து—நோய்தானா ?

எனவே, நமக்கு இப்பொழுது மற்றொரு சிக்கலும் எழுகிறது. அறிவியல் சாராத தன்மை பித்து நோயினது தலையாய அறிகுறி அல்ல என நாம் இந்த அதிகாரத்தில் கூற முற்பட்டிருக்கிறோம். இது சரியாயின், பின்னர் பித்தனை இயல்பான மனிதனிடமிருந்து வேறுபடுத்தும் அடிப்படையான தன்மைகள்தாம் எவை? இன்று நாம் பெற்றுள்ள அறிவைக்கொண்டு இக் கேள்விக்கு மிகப் பொருத்தமான விடையைத் தருவது அரிது என்பதை நாம் ஒத்துக்கொள்

ளத்தான் வேண்டும். ஆனால், இத் தோல்வி ஏற்படுவதற்கு நமக்குத் தரப்பட்டுள்ள சிக்கல் திட்டவட்டமின்றியும், பெருமளவில் பொருளற்றதாகவும் இருப்பதே, ஓரள வேனும் காரணமாக அமைகிறது. இங்குப் பயன்படுத்தப் பட்டுள்ள பதங்களுக்கு அடிப்படையான தன்மைகள் என எவற்றையும் கூறுவதற்கில்லை. பித்து நோய் என்பது, காசம், நச்சுக் காய்ச்சல் போன்ற திட்டவட்டமான ஒரு நோய் அன்று. மாறாக, சீரற்ற குழுநிகழ்ச்சிகளுள் ஒன்றினைக் குறிக்கவே இச் சொல் பயன்படுத்தப்படுகிறது. இந் நிகழ்ச்சிகளுக்கிடையே பொதுவானவை அதிகமில்லை. மேலும், அக் காலங்களில் பரவி நிற்கும் கருத்துக்களுக்கு ஏற்ப, இந்நோயின் எல்லைகளும் மாறியுள்ளன. இடைக் காலத்தில் மதிப்போடும் பக்தியோடும் போற்றப்பட்ட பலர், இன்று மனநோய் மருத்துவமனைக்கு இட்டுச் செல்லப் படுவர் என்பது நாம் காணக்கூடியதே.

## தீவிரமே பித்தின் குணம்!

உள நிகழ்ச்சி எவ்வளவு தீவிரமாகக் காணப்படுகிறது என்பது ஒரு பாகுபாடாகும். பித்துநிலையில் காணப்படும் அறிகுறிகள் உளச் செயல்களின் விளைவால் எழுவன என்றும், இவை இயல்பான உள்ளத்தில் இருப்பது போன்றே பித்தரிடமும் உள்ளன எனவும் நிரூபிக்கப்பட்டன. ஆனால் பித்துநிலையில் இச்செயல்கள் இயல்பான நிலையில் உள்ளதை விடத் தீவிரமான நிலையில் இயங்குகின்றன. இவை இயல் பானது எனக் கருதப்படும் வரம்பிற்கு மிஞ்சியவாகவும் இருக்கின்றன. திறமை குறைந்த தொழிலாளி தன்னுடைய வேலையில் குறைகண்டு முதலாளி பாரபட்சத்தோடு தன்னை நடத்துகிறார் எனத் தன் தோல்விக்குக் காரணம் கற்பிக்க முயலும்போது, நாம் அவரை இயல்பானவர் என்றே கொள்கிறோம். ஆனால், 'பிறர் திட்டமிட்டுத் தன்னை ஒதுக்கி வருத்துகிறார்கள்' எனப் போலீசாரிடம் சென்று முறை யிடும் மனிதனே, 'துன்புறு திரிபுணர்ச்சியால் அல்லலுறு பவன்' என முடிவு செய்யப்பட்டு மருத்துவமனையில் அனும

திக்கப்படுகிருன். மேற்கூறிய இரண்டு மனிதர்களிடமும் ஒரே வகையான உளநுட்பச் செயலே இயங்குகிறது. ஆனுல் இரண்டாமவனிடம் அச் செயல் சற்று வரம்புமீறிக் காணப் படுகிறது.

## நடத்தை வேறுபாடுகள்!

இயல்பான நிலைக்கும் பித்து நிலைக்கும் இடையே காணப்படும் இரண்டாவது வேறுபாடு இவ்விரு வகைகளில் காணப்படும் நடத்தை வேறுபாடாகும். உளச் செயல் வரம்புமீறி அமைவது முதல் பாகுபாடு என்ருேம் அதனேடு இது நெருங்கிய தொடர்புடையதாகும். மேலும். இயல்பான நிலையையும் பித்து நிலையையும் பாகுபடுத்து வனவற்றுள் இதுவே மிக முக்கியமானது எனவும் கூறலாம். பெரும்பாலும் பித்தரின் நடத்தை சமூக எதிர்ச் செய லாகவே அமைகிறது. இதனையே 'தனக்கும் பிறர்க்கும் ஆபத்தானவன்' எனச் சட்டம் வரையறுக்கிறது. இந்த நடத்தையைக் கொண்டே ஒரு நோயாளி உளமருத்துவ மனைக்கு இட்டுச் செல்லப்பட வேண்டுமா வேண்டாமா என்பது நிர்ணயிக்கப்படுகிறது. பெரும்பாலும், பித்தர் களிடம் காணப்படும் சமூக எதிர்ச்செயல் தன்மை நேர் நிலையானதாகவோ, அல்லது எதிர் மறையானதாகவோ இருக்கலாம். இவ்வாறு நேர்நிலையில் அமைந்து துன்புறு திரிபுணர்ச்சி கொண்டுள்ள நோயாளியின் நிலை பிறருக்கு அபாயம் விளைவிப்பதாக இருக்கலாம். தன் உயிரைப் பறிக்க அவனைத் தூண்டுவதாகவும் இருக்கலாம். மாருகச் சமூக இயக்கத்தில் திறம்பட அவன் பங்குபெற முடியா வண்ணம் அவன் நடத்தையை அமைப்பதாகவும் சமூக எதிர்ச்செயல் அமையலாம். இத்தகைய எதிர்மறையான சமூக எதிர்ச்செயல் கொண்டமையும் பித்தும் பல வகைப் படும். இதனை 'மனவெழுச்சிக் கிறுக்கு' என்று நாம் குறிப் பிடலாம்.

[குழந்தை மனம் வளர்ந்தோர் மனத்தைவிடத் தீவிரமானது. எதையும் விரைவாகக் கிரகிக்கும் தன்மை வாய்ந்தது. குழந்தையின் வளர்ச்சியையும் இந்த மனப் போக்குகளே உருவாக்குகின்றன! 'விளையும் பயிர் முளையிலே' என்பது உண்மை. அதனைப் பற்றிய செய்திகளை இப்பகுதியில் காணலாம்.]

மூன்றும் பகுதி

# குழந்தை மனமும் குழந்தை இயல்புகளும்

# 17

# குழந்தையும் பெற்ரேரும்

நமக்கும் குழந்தைகளுக்கும் எத்தகைய உறவுவேண்டும் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். குழந்தை பிறந்தது முதல் அது மெல்லமெல்ல அடியெடுத்து வைத்துத் தளர் நடை நடந்து வளர்ந்து சுதந்திரப்பிரஜை ஆகும் வரையில், இந்த உறவு தொடர்ந்து இருந்துவர வேண்டும்.

## பெற்ரேரின் ஆசைகள்

குழந்தைகளை வைத்துக் கொண்டு எத்தனையோ இன்பக் கனவுகளைப் பெற்ரேர்கள் காண்கிருர்கள். குழந்தை தகுதியும் தன்மையும் பெற்று வளரவேண்டும், தங்களுக்குத் தள்ளாத வயதில் ஒரு தாங்கலாக இருக்கவேண்டும் என்றெல்லாம் ஆசைப்படாத தாய்தந்தையரே இல்லை ஆனல், இந்த ஆசைகளெல்லாம் எத்தனைபேருக்கு நிறை வேறியிருக்கின்றன? குழந்தை பெரியவனுக வளர்ந்த பிறகு தான், பெற்ரேரின் மனக் கோட்டையெல்லாம் 'மணல் கோட்டை' என்பது விளங்கும். ஆனல், இதற்குக் காரணம் என்ன? 'பையனுக்கு நன்றியில்லை' என்றும், 'பெற்ரேர் குறையிரப்பது நியாயம்' என்றுமே நாம் நினைப்போம். ஆனல் வளர்த்தவர்கள்தாமே உண்மைக் குற்றவாளிகள்! அவர்கள்தாமே பையனின் போக்குக்குப் பொறுப்பாளிகள்! உங்கள் உள்ளத்தையே சோதித்துப் பார்த்துக் கொள்ளுங் கள். இந்த உண்மை தெளிவாகப் புலப்படும்.

## வாஞ்சை வெளிப்பட வேண்டும்

குடும்பம் சீர்குலையக் காரணம் பையனுக்கும் தாய் தந்தையருக்கும் இருக்கவேண்டிய உறவானது சரியாக

இராமல் போவதுதான். அவர்களுக்கும் குழந்தைகளுக்கும் ஒருவருக்கொருவர் உள்ளத்தைத் திறந்து பேசும் பழக்கம் இருந்திருந்தால், இப்படி நேர்ந்திராது. அன்பை உள்ளத்தின் ஒரு மூலையிலே ஒளித்து வைத்திருக்காமல், சரியான முறையில் குழந்தைகளுக்குப் பெற்ருேர் வெளிப்படுத்த வேண்டும். நம்மிடம் பெற்ருர் வாஞ்சை வைத்திருக்கிருர்கள் என்ற நம்பிக்கை குழந்தைகளுக்கு ஏற்படவேண்டும். அதை வளருமாறும் செய்ய வேண்டும்.

## இரும்புத்திரை வேண்டாம்!

'அன்பு காட்டி வளர்த்தால் குழந்தை கெட்டுப் போய் விடுவான்; பிரப்பம் பழம் கொடுத்தால்தான் நன்ருக வளர்வான்' என்ற தவருன எண்ணம் நம்மில் பலருக்கும் இருந்து வருகிறது. அன்புக்குப் பெரிய அணேபோட்டுத் தடைசெய்யும் தூய மனிதர்களும் பலர் இருக்கிருர்கள். இது குழந்தைக்கும் நமக்கும் இடையேயுள்ள 'இரும்புத் திரை' போல ஆகிவிடுகிறது. இருவரும் ஒருவரை ஒருவர் முழுக்க அறிந்து கொள்ளாமலே காலம் செல்கிறது. விவாக விஷயத்திலும் உத்தியோக விஷயத்திலும் பெற்ருேருக்கும் மக்களுக்கும் இடையே சச்சரவு விளேவது பல குடும்பங்களில் சர்வசாதாரணம். இதற்கு அந்த 'இரும்புத் திரை'தான் காரணமாகும்.

## நம்மைப் போலவே குழந்தைகளும்

நம்மைப் போலவே நம் குழந்தைகளுக்கும் விருப்பங்களும் குறிக்கோள்களும் இருக்கத்தான் செய்கின்றன. பிறந்து கொஞ்ச நாளேக்குத்தான் குழந்தை பிறரையே முழுவதும் சார்ந்து வாழ்கிறது. பிறகு, நாளுக்கு நாள் குழந்தை தானும் ஒரு தனி மனிதனுகவே வளர்கிருன். இதை ஏற்க நாம் தயங்கக்கூடாது. 'உங்கள் மகன்' என்பதற்காக, அவனும் ஒரு 'தனி மனிதன்' என்பதை மறப்பது சரியல்ல. இந்த உண்மையை ஏற்பது மட்டுமல்லாமல்

அவனை ஆளாக்கித் தனிப்போக்கிலே அவன் சுதந்தரமாக வாழவும் அவனுக்கு உதவவேண்டும்.

குழந்தையின் தனி வாழ்விலே நாம் சிரத்தை காண் பிப்பது அவசியம். அவர்களின் மனத்திலே உண்டாகக் கூடிய ஆசைகளையும் உணர்ச்சிகளையும் கவனித்து, அவர் களுடைய வெற்றி தோல்விகளில் உண்மையாய்ப் பங்கு கொள்ளவேண்டும். ஒரு பையன் வகுப்பில் முதலாவதாகத் தேறி வந்து அதைச் சொன்னால், தாய் தந்தையர் வாயை மூடிக்கொண்டு சற்றும் மகிழ்ச்சி காட்டாமல் இருப்பது சரியல்ல. அவனுடைய வெற்றியில் தாங்களும் சந்தோஷப் படுவதை அவன் அறியும்படி செய்யவேண்டும்.

### கூடி மகிழ வேண்டும்

சில தந்தைமார் காலையில் வேலைக்குச் சென்றால் இரவு குழந்தை தூங்கிய பிறகுதான் வீட்டுக்கு வருவார்கள். குழந்தைக்கு தினம் ஒருமுறை தந்தையைப் பார்ப்பதுகூட அரிதாகிவிடும். தாய் தந்தையருடன் பேசிச் சந்தோஷப் படக் குழந்தைக்கு உள்ள ஆசை இதனால் பங்கமாகிறது. பரஸ்பரம் உள்ள உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொள்ளவும் வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. தந்தைக்கு எவ்வளவு அவசர வேலை இருந்தாலும் கொஞ்ச நேரமாவது அவர் குழந்தையுடன் கலந்துபழகுவது அவசியம். காலை உணவைக் குழந்தைகளுடன் சேர்ந்து உண்ணலாம். மாலையிலும் குடும் பத்தினர் அனைவரும் ஒன்றுகூடிச் சிறிது பொழுதையாவது கழிக்க அவகாசம் ஏற்படுத்திக் கொள்வதும் மிகவும் முக்கியமாகும்.

### அளவுக்கு மீறவும் கூடாது

குழந்தையிடம் சிரத்தை காட்டுவது மிகமிக அவசியம். ஆனால் அளவுமீறிச் சிரத்தை காட்டுவதும் தவறுதான். பெற்றோரின் கவனக்குறைவால் குழந்தை தான்தோன்றி யாகவும் துஷ்டனாகவும் மாறவிடுவான் என்றால், அளவுமீறி

அவனைத் தாங்கிக்கொண்டேயிருந்தால், அவன் பயங்கொள்ளியாகவும் சுயநலக்காரனாகவும் மாறி விடுவான். பல் தேய்ப்பதற்கும் சாப்பிடுவதற்கும் மிதியடி போட்டுக் கொள்வதற்குங்கூடத் தந்தையின் உதவியோ தாயின் உதவியோ வேண்டும் என்று பிடிவாதம் செய்யும் குழந்தைகள் பலர் உண்டு. அந்தப் பிடிவாதத்தை அன்பு என்று தவருக எண்ணி அதற்கு இடங்கொடுக்கும் பெற்ருேர், தங்கள் குழந்தைகளுக்கு நன்மை செய்பவர்கள் அல்லர். பெற்ருேரின் துணை இல்லாமல் போகும்போது, அந்தக் குழந்தைகளின் வாழ்க்கையில் ஏதும் செய்பவியலாத ஒருவிதச் சூன்யநிலை இருள் போலச் சூழ்ந்துவிடும்.

## தவறும் திருத்தமும்

தொட்டதற்கெல்லாம் குழந்தையைக் கோபித்துக் கொள்கிருேம். நாமும் தவறுவது இயல்புதானே. தவறு நேர்ந்ததைக் குறித்து விளக்கி அவனுக்கு வழிகாட்ட முயல்வதுதான் நல்லது. அதுபோலவே கிட்டாததிலும், கேடானதிலும் உண்டாகும் ஆசையைத் துறக்கும் மனப்பரிபக்குவத்தைக் குழந்தைக்கு ஏற்படச் செய்வது அவனுடைய வருங்கால வாழ்க்கையில் நலந்தருவதாக விளங்கும்.

குழந்தை 'அம்புலிமாமா' வேண்டும் என்று கேட்டாலும், மாறு பேசாமல் 'நாளைக்குப் பிடித்துத் தருகிறேன்' என்று சொல்லி ஏமாற்றும் பெற்ருேர்களும் உண்டு. இது அந்தக் கணத்தில் குழந்தையின் தொல்லைக்குச் சுலபமான மாற்ருக இருக்கலாம் ஆனல் சற்றே பொறுக்காமல் பொய் சொல்லியதாகக் குழந்தையிடம் மறுநாளே கட்டாயம் நாம் ஒப்புகொள்ளவேண்டியது வரும். இது நல்ல முறையல்ல.

மூக்கை அறுப்பதாயும், நாக்கை நறுக்குவதாகவும், அடித்துக் கொல்வதாயும் எல்லாம் கூறிக் குழந்தையைப் பயமுறுத்தும் தாய் தந்தையர்களும் உண்டு. சிட்சை கொடுப்பதிலுங்கூட இந்த மாதிரிப் பொய்களை குழந்தைகளிடம் சொல்வது முறை அல்ல; அதனுல் நன்மையுமில்லை.

தங்கள் குழந்தையின் திறமையை அவனுக்கு எதிரி லேயே புகழ்வதோ, குறையை மிகைப்படுத்தி உபயோக மற்றவன் என்று அவனைக் கடுமையாகப் பேசுவதோ அவனுக்குத் தீங்கையே செய்யும்.

குழந்தையின் முன்னிலையில் தாயும் தந்தையும் சண்டை போடும் பழக்கத்தையும் அடியோடு கைவிட வேண்டும். பல குடும்பங்களில் இது நித்திய நிகழ்ச்சியாக இருக்கிறது. இதைப் பார்க்கும் குழந்தைகள் மனம் பல சிக்கல்களுக்கு உள்ளாகும் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. அதுவும், வருங்காலத்தில் சதா சண்டை போடும் இயல்புள்ள தாகவோ, அல்லது குடும்ப வாழ்க்கையை அடியோடு வெறுக்கும் இயல்புள்ளதாகவோ மாறிவிடலாம். இதற்கு இடந்தரலாமா? ஆகவே, எந்தக் காரணத்தை முன்னிட்டும தாய் தந்தையர், குழந்தைகள் முன்பாகச் சண்டையிடு வதைக் கட்டாயம் தவிர்த்தாக வேண்டும்.

இன்னும் குழந்தையிடம் எப்படியெல்லாம் பழக வேண்டும் என்பதை பல சமயத்திலும் நன்றாக யோசித்துத் தாங்களே வழி கண்டு பிடித்து அதன்படி நடப்பது பெற்றோரின் முக்கியமான கடமையாகும். இதனால், பிற் காலத்தில் இவர்களும் நிம்மதியாயிருப்பார்கள்; இவர்கள் குழந்தைகளும் நன்றாக நிம்மதியாக வாழ்வார்கள்.

# 18

# குழந்தையும் பழக்கமும்

பள்ளிக்குச் செல்லுமுன்பு உள்ள பருவந்தான் சிறு குழந்தைகள் தம் தினசரிப் பழக்கவழக்கங்களைக் கற்றுக் கொள்ளும் காலம். இந்தச் சமயத்தில்தான் தாய்மாரும் பாலர் இல்லங்களில் பணியாற்றும் பால சேவிகைகளும் மிகவும் கவனமாகச் சின்னஞ் சிறு குழந்தைகளின் நடவடிக் கைகளைப் பயனுள்ள வழியில் திருப்பிச் செலுத்தவேண்டும். தம்முடைய சொந்த முயற்சியாலும் சொந்த சக்தியைக் கொண்டும் குழந்தைகள் தங்களுடைய அன்றாட வேலைகளைக் கவனிக்கும்படியாக அவர்களுக்கு ஊக்கம் அளித்து வழி காட்ட வேண்டும்.

## பயிற்சி தர வேண்டும்

இந்த வயதில் அன்றாடப் பழக்கங்களில் பயிற்சி அளிப்பது முக்கியமானது. இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது மிகவும் மெதுவாகவும், குழந்தையின் வளர்ச் சிக்கு ஏற்றவாறும், பயிற்சியைப் படிப்படியாக அளிக்க வேண்டும். பெரிய கருத்துக்களைச் சொல்லிக் குழந்தைக்கு விளக்கினால் அதனால் பலன் ஏற்படாது. அவனது அறியும் ஆற்றலுக்குத் தக்கபடிதான் கற்பிக்கவேண்டும். குழந்தை யிடம் அவசரமோ கோபமோ பலன் அளிக்காது. பொறுமை யுடன் நடந்தால் வெற்றி நிச்சயம்.

குழந்தை முதலில் கற்றுக்கொள்ள வேண்டிய பழக்கம் காலைக் கடன்; பெரும்பான்மையான குழந்தைகள் இரண் டரை வருஷங்களிலேயே இப்பழக்கத்தைக் கற்றுக்கொண்டு

விடுகிறுர்கள். சில குழந்தைகளோ நாலு அல்லது ஐந்து வயது வரையிலேகூட ஆடையிலேயே கழிந்துகொள்வது உண்டு. அப்படி உள்ள குழந்தையிடம் கோபித்துக் கொள் வதோ, மற்றக் குழந்தைகளின் முன்பாக அவமானப்படுத்து வதோ கூடாது. கொஞ்சங் கொஞ்சமாகப் 'பாத்ரூம்' செல் லும் பழக்கத்தை அதற்குக் கற்றுத் தரவேண்டும்.

## உணவுத் திட்டம்

குழந்தைகளுக்கு சரியானபடி சாப்பிடத் தெரியாது. ஒன்று சாப்பாட்டிலேயே கவனம் இல்லாமல் இருப்பார்கள்; அல்லது உணவை இறைத்து வீண் செய்து விடுவார்கள்.

அப்படி உள்ள குழந்தைகளிடம் தாய்மார் கோபித்துக் கொண்டு பொறுமையை இழப்பதால் பயன் இல்லே. தேவையான உணவு அவ்வளவையும் அவன் சாப்பிடும்படி செய்யவேண்டும். அழகாகச் சாப்பிடும் முறையையும் அவனுக்குக் கற்பிக்க வேண்டும்.

பசி வந்தால் குழந்தை தானுகவே சாப்பிடும். குழந்தை யின் பசியை அறிந்து உணவு அளிக்கவேண்டும். சாதாரண மாகப் பசி உள்ள குழந்தை தனக்கு எவ்வளவு உணவு வேண்டுமோ அவ்வளவு உணவைச் சுயமாகவே சாப்பிடுவான். அவனைக் கட்டாயப் படுத்த வேண்டியதில்லே. அன்று பிறந்த குழந்தைகூடத் தனக்கு பசி வந்ததும் வேண்டிய அளவு பால் அருந்துகிறது.

பொதுவாகக் குழந்தைகள் வெதுவெதுப்பான சூடு உள்ள ஆகாரத்தையே விரும்புகிறுர்கள். மிகவும் சூடான தையும், அதிகமாக ஆறிக் குளிர்ந்து போனதையும், அவர்கள் விரும்புவதில்லே. கையினுல் எளிதாக எடுத்துச் சாப்பிடக் கூடிய உணவையே விரும்புகிறுர்கள். பசையுடன் கூடிப் பற்களில் ஒட்டிக்கொள்ளும் உணவு வகைகளே நீக்குவது நலம்,

## கூடவே வைத்துப் பழக்கலாம்

அழகாக முறைப்படி சாப்பிடும் வழக்கத்தை நம்மிட மிருந்தே குழந்தைகள் கற்றுக் கொள்கிறார்கள். ஆகவே குழந்தைக்கு வார்த்தைகளைக் கொண்டு போதிப்பதைவிட நேரில் செய்து காட்டுவதுதான் சிறந்த முறை. நம்முடன் கூடவே குழந்தைகளையும் உட்கார வைத்துக் கொண்டால் நம்மைப்பார்த்து குழந்தைகள் மிக எளிதில் கற்றுக்கொண்டு விடுவார்கள். நாம் சத்தம் போட்டு உணவு அருந்தினால், குழந்தைகளுக்கும் அந்தப் பழக்கம் வரும். ஆகையால் குழந் தைகளின் முன்பாக வாயில் உணவைத் திணித்துக்கொண்டு பேசும் வழக்கத்தையும், அநாகரிமாக உணவை அள்ளி அள்ளிப் போட்டுக் கொள்ளும் பழக்கத்தையும் அறவே கைவிட வேண்டும். இல்லையென்றால் குழந்தைகளுக்கும் அந்தப் பழக்கங்கள் நிச்சயமாக ஏற்பட்டுவிடும்.

## உறக்கமும் ஓய்வும்

உணவைப்போலவேகுழந்தைகளுக்கு மிகமுக்கியமானது தூக்கம். தூக்கம் முடிந்து எழுந்த குழந்தை எப்போதும் சுறுசுறுப்பாகவும் புஷ்பம்போல் மலர்ச்சியாகவும்இருப்பான். இருந்தும், பகல் நேரத்தில் பல குழந்தைகள் தூங்க மறுப்பதை காண்கிறோம். வீட்டில் எப்போதும் ரகளை இந்தக்கட்டத்தில்தான். அவனுக்கு தூக்கம் தேவையில்லாத சமயத்திலோ, அவன் ரசமான ஏதோ ஒரு நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கையிலோ அவனைத் தூங்கச் சொல்லிக் கட்டா யப்படுத்துகையிலேதான் குழந்தை முறண்டுவான். குழந்தைகள் தமக்குத் தேவையான சமயத்தில் தாமாகவே தூங்கி விடுவார்கள். பெரியவர்களைப்போல் தூக்கம் விழிக்கும் சக்தி அவர்களுக்குக் கிடையாது. இந்த உண்மையை நாம் உணர்ந்து கொண்டால் கஷ்டம் இல்லை. குழந்தைக்குத் தூக்கம் வந்து விட்டது என்பதை வெளிப் படையாகவே அறிந்து கொள்ளலாம்! கொட்டாவி விடு வான். கண்கள் சோர்ந்து இமைகள் சிவந்து கூம்பிவிடும்.

குழந்தைகள் தூங்குவதற்கு வசதியாக அறைகளின் ஜன்னல்களை மூடியிருக்கவேண்டும். அமைதியான சூழ் நிலையை உண்டாக்க வேண்டும். இந்த முன்னெச்சரிக்கைகள் ஓரளவுக்குத் தூங்காத குழந்தைகளையும் தூங்கத் தூண்டும்.

## நண்பர்கள் வேண்டும்

பெரியவர்களைப் போலவே குழந்தைகளுக்கும் நண்பர்கள் அவசியம். மூன்று வயதுக்குப் பிறகு குழந்தைகளுக்கு தோழர்கள் இருக்கவேண்டியது அவசியம். அவர்கள் தங்களுடைய வயதுத் தோழர்களையே தேடுகிறார்கள். ஆரம்பத்தில் அவர்களுடைய நட்புப் பழக்கங்கள் விபரீதமாகத் தோன்றலாம். ஒருவரை ஒருவர் கடித்துக் கொள்வதையும், கன்னத்தில் அறைவதையும், தலையைப் பிடித்து பிய்த்து இழுப்பதையும் காணலாம். ஆனால் இந்தப் பழக்கங்களைக் கண்டு பெற்றோரோ பள்ளி ஆசிரியர்களோ பயப்படத் தேவையில்லை. இது சண்டையின் அறிகுறி அல்ல. குழந்தைகள் தங்களுடைய சுய பலத்தைப் பரீட்சை செய்து பார்க்கும் பழக்கம். நட்பும், பண்பும் போகப் போகத்தான் வளரும்.

குழந்தைகளுக்கு மிகவும் இளம்பிராயத்திலிருந்தே நல்லது எது கெட்டது எது என்று அறியும் பழக்கம் வளர்ந்தால், அது அவர்களுக்கும் நாட்டுக்கும் நன்மை பயக்கும்.

குழந்தைகள் இயல்பாக நம்மைக் கவனித்து நாம் செய்வதையெல்லாம் உடனே செய்வார்கள். ஆகவே அடக்கத்தையும், நன்னடத்தையும் முதலில் நாம்தான் கைகொள்ளவேண்டும்.

# 19

# குழந்தையும் திருட்டும்

## திருடுவது எதனால்?

சிறுவர்களிடமும் பருவம் எட்டும் வாலிபர்களிடமும் நாம் இந்தநாட்களில் காணும் குற்றங்களில் சர்வ சாதாரண மானது சில்லரைத் திருட்டு. கிடைக்க வேண்டிய ஒன்று கிடைக்கவில்லையே என்று ஏங்கும் சிறுவனே திருட ஆரம்பிக் கிறான். உண்மையில் அவனுக்குக் கிடைக்காமல் போனது அநேகமாக அன்புதான். அன்பைத் திருடி அடைய முடியுமா? அதற்குப் பதிலாகத் தான் நினைப்பதை அவன் திருடுகிறான். பொறாமை, அசூயை, பழிதீர்த்துக் கொள்ளும் எண்ணம், இன்பத்தை அடையும் ஆர்வம் உடையவனாக இருக்க உண்டாகும் அவா, இவையும்கூட திருடுவதற்கு மூலத் தூண்டுதல்கள்தாம்.

## வல்லான் வகுத்ததே!

நமது தற்கால சமூக வாழ்க்கை நிலையின் விளைவே சிறுவர்களின் இந்த நெறிதவறிய நடத்தை என்று பெரி யோர்கள் கூறுவார்கள். பெற்றோர்களின் கவனக் குறைவு, வீதிகளிலெல்லாம் காணும் காட்சிகள், தினத்தாள்கள் சினிமா முதலியவை, 'வல்லான் வகுத்ததே வாய்க்கால். என்ற முடிவுக்குச் சிறுவர்களைக் கொண்டுபோய்விடுகின்றன, 'கையாலாகாதவனுக்கே கண்ணியம், கௌரவம், பிறரை மதிப்பது முதலிய நற்குணங்கள் எல்லாம் உரியவை; உலக நடப்பில் பலவானுக்கு அவை பொருந்தமாட்டா, இகழ்ச்சிக்கு இடமும் தரும்' என்ற மனப்பான்மை சிறுவர் களிடம் இவற்றால் வளர்ந்துவிடுகிறது.

## சூழ்நிலையின் விளைவுகள்

திருட்டுக்கள் எத்தனை. வகையோ அத்தனை வகைக்கும் அத்தனை காரணங்களும் உண்டு. ஒவ்வொரு திருட்டுக்கும் ஒவ்வொரு காரணம். தவறு செய்யும் சிறுவனிடம் சகஜமாக அளவளாவிப் பேசித்தான் காரணத்தை அறிய முடியும். அப்படி அறிந்தபின், பிறர் பொருளை எடுப்பதைவிட்டுச் சமூகத்துடன் அவன் ஒத்துவாழும்படி தன்னை மாற்றிச் சீர்திருத்திக் கொள்ள அவனுக்கு நாம் உதவ முடியும். அந்தச் சிறுவனின் குடும்பச் சூழ்நிலை, இவைகளை நாம் நன்ருகத் தெரிந்துகொள்ள வேண்டும். பெற்ருேர்கள் சகோதர சகோதரிகள் உபாத்தியார்கள் இவர்களுடைய உதவியும் நம் சீர்திருத்தப் பணியில் வெற்றிபெற நமக்குத் தேவை.

## வெற்றியார்வமும் திருட்டும்

ஆரம்ப நாட்களில் பிறர் காணுமல் திருடிய தனது சிறு திருட்டை எவனே ஓர் எதிரியை வீழ்த்திய வெற்றியாக அவனுடைய உள்ளம் கருதுகிறது. துணிவு ஏறுகிறது. திருட்டுகளுக்கு இதுவே தூண்டுகோல் ஆகிறது. திருடிக் கிடைத்த பொருள் எதையும் அவன் சேமித்துவைப்பதில்லை. உடனுக்குடன் செலவுசெய்து மகிழ்ச்சி அடையப் பார்க்கிருன். ஒருநாள் பிடிபட்டுத் தண்டனை அடைய நேரிடும் என்ருல், அது தன் தொழிலுக்கு இயல்பாக உள்ள லாப நஷ்டங்களுள் ஒன்றே என்று அவன் துணிந்து விடுகிருன். அதைப்பற்றி அவன் கவலையே படமாட்டான்.

## வறுமை காரணமல்ல!

இளைஞர்கள் திருடப் புகுவதற்கு வறுமை காரணம் என்று சொல்வதற்கில்லை. நல்ல நிலையில் இருக்கும் குடும்பத்தில் பிறந்தவர்களுள்ளேகூட அநேகம் சிறுவர்கள் திருடுகிருர்கள். போலீஸ் இலாகாவினரையும் சமூக மக்களையும் தோற்கடித்து, அவர்களுக்கு மேபட்டவர்களாய்த்

தாங்கள் விளங்க விரும்புகிறார்கள் என்று தோன்றுகிறது. பெற்றோர்களில் ஒருவர் தன்னை நிராகரிக்கிறார் என்ற எண்ணம், தன்னிடம் மிக உயர்ந்த திறமையை எதிர் பார்க்கும் தகப்பனிடம் வெறுப்பு, தன்னைவிடப் புத்திக் கூர்மையுள்ள சகோதர சகோதரிகளிடம் கொண்ட அசூயை, பள்ளிப் படிப்பில் தோல்வி, ஏதோ பிறவிக் குறை பற்றிய உணர்ச்சி, இப்படி ஏதாவது ஒரு காரணத்தால், ஒரு சிறுவன் திருடப் புகுகிறான். அவனைப் போலவே மனோபாவ முள்ள சிநேகிதர்கள் இலகுவாய் அவனுக்குக் கிடைக்கிறார் கள். இந்த மாதிரி ஒரு கோஷ்டியே நாளடைவில் சேர்ந்து விடுகிறது.

## மனச்சோர்வின் விளைவு!

தவறு செய்யும் சிறுவன் பள்ளிக்கூடத்தில் தேர்ச்சி யுள்ளவனாயிருந்து நெறி பிசகியவனாக மட்டும் நடந்தால் அவனது மனத்தைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவருவது சுலபம். உபாத்தியாயர்களின் உதவி கொண்டு எவ்வளவோ செய்யலாம். வீட்டிலும் பள்ளிக்கூடத்திலும் 'உதவாக்கரை' என்று ஏற்பட்டுவிட்டால், அவனுடைய மனச்சோர்வு உச்சநிலையை எட்டுகிறது. தகாத வேறுவழியில் மற்றவர்களை விட அதிகத் திறமை பெற்றவன் என்று தோன்றுவதற்கு முயற்சி எடுக்கிறான். சமூகம் ஒப்புக்கொள்ளும் சாதாரண வாழ்க்கை களிப்பு அளிக்கும்; அதில் லாபமும் கிட்டும் என்று அவனை நன்றாகப் புரிந்துகொள்ளச் செய்வதற்கு அப்போது நமக்கு அளவில்லாப் பொறுமையும் நல்ல மனப்பான்மையும் வாக்குச் சாதுரியமும் தேவை.

## பீட்டரின் உதாரணம்

உதாரணமாகப் பீட்டர் என்ற இளைஞனின் சரிதை யைப் பார்ப்போம். அவன் 11 வயதை எட்டிய சிறுவன். அழகு இல்லாதவன். தோற்றமோ அலங்கோலம். தன் வகுப்புப் பிள்ளைகளுக்குத் தபால்தலை, பென்சில், மிட்டாய்

எல்லாம் அடிக்கடி கொடுத்து வந்தான். அப்படிக் கொடுத்து வந்ததும் அவர்களுடைய சிநேகமோ மதிப்போ அவனுக்குக் கிடைக்கவில்லை. வீட்டில் சேமிப்பு நிதியில் ஐந்து ரூபாய் குறைவதாக ஒரு நாள் தெரிந்தது. சில நாளைக்குப்பின் வகுப்புக்கு ஓய்வு ஏற்பட்ட நேரத்தில் அவனுடைய கை வேறொரு பையனின் சட்டைப் பையில் துழாவுவதை நேரில் சிலர் கண்டார்கள். அந்தப் பையன் தன் பணத்தில் ஒரு ரூபாய் காணுமல் போய்விட்டது என்று புகார் செய் தான். பீட்டரைச் சோதித்ததில் அவனிடம் இருந்தது அந்த ரூபாய்.

பீட்டரின் தாயை—அவள் ஒரு விதவை—உடனே பள்ளிக்கூடத்துக்கு வரவழைத்தார்கள். மனோ தத்துவ நிபுணரிடம் அவனை அழைத்துச் செல்லும்படி சொன்னார்கள். அவளும் ஒப்புக்கொண்டாள். வீட்டிலும் அந்த நாளில் அவன் திருடுவது உண்டு என்றும், என்ன கண்டித்தும் நையப் புடைத்தும் வரவர மோசமாகிறான் என்றும் தாய் கூறினாள். ஒரே ஓர் ஆறுதல் அவளுக்கு. மூத்த பையன் இவனைப் போலல்லாமல் நல்ல யோக்கியனும். பீட்டரைக் கொஞ்ச நாள் அடிக்காமலிருக்கும்படி முக்கியமாய் அவளைப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

மனோதத்துவ நிபுணரிடம் பீட்டருக்குச் சிறிது நம்பிக்கை வந்தவுடன், மனம் விட்டு ஓர் உண்மையை அவன் சொன்னான். அதாவது, தன் தாய் அடித்ததால் அதற்குப் பழிதீர்த்துக் கொள்ளவே அவளுடைய பணத்தை முதலில் எடுத்ததாகச் சொன்னான். "என் தாய்க்கு என்னிடம் அன்பே கிடையாது! அண்ணன் 'லெஸ்லி'யிடந்தான் அவளுக்கு அன்பு. நானும் கெட்ட நடத்தை உடையவன் தான், அவள் அடித்தாள். எனக்குக் கோபம் வந்தது, மிட்டாய் வாங்கக் காசு திருடினேன். மிட்டாயின் இனிப்பில் தாயின் குரூரத்தை மறந்தே விட்டேன்" என்றான். ஐயோ பாவம்! மனக்கசப்புக்கு மாற்றாக மிட்டாய் வாங்கித் தின்ன வேண்டியிருந்தது அவனுக்கு.

பிட்டரின் எதிர்ப்புக்கு மூலகாரணம் என்னவென்று கொஞ்சம் கொஞ்சமாக அவனுக்குப் புலப்படுத்தினர்கள். வீட்டில் மாத்திரமல்லாமல், சகபாடிகளின் அன்பு பள்ளிக் கூடத்திலும் கிடைக்காததே தன் விபரீதப் போக்குக்குக் காரணம் என்று அவன் கண்டுகொள்ளத் தொடங்கினன்.

தாயும் ஒத்துழைத்தாள். அடிப்பதை நிறுத்தினுள். சொற்பப் பிரியமும் காட்டினுள். சில நாளில் பயனுள்ள நல்வாழ்வில் பீட்டர் திருப்திகாணலானன்.

## தவறு எப்படித் திருந்தும்!

தவறு செய்யும் சிறுவன் தனக்குக் எது கிடைக்க வில்லை என்று எண்ணுகிருனே அதைக் கண்டுபிடித்தபின் அவனுடைய குடும்பத்திலிருந்தும் பள்ளிக்கூடத்திலிருந்தும் வேண்டிய ஒத்துழைப்பை நாம் நாடவேண்டும். அவன் விரும்புகிற சிலபொருள்களையும் அவனுக்குக் கொடுக்கலாம். அவன் செல்லும் தவருன வழியில் சுகம் கிடைக்காது என்று அவன் புரிந்து கொள்ளும்படி செய்யவேண்டும். நம்முடைய அனுதாபத்தையும், நல்ல நோக்கையும் காண்பித்தால் சிலநாளில் அவன் நேர்வழியில் நடக்க ஒப்புக்கொள்வான்.

## ஆட்லரின் உபதேசம்!

'ஆல்ஃப்ரட் ஆட்லர் ஒரு சமயம் சொன்னது ஞாபகம் இருக்கட்டும்!

'தவருன வழியில் செல்வது அவ்வளவு சுலபமானது என்று எவரும் நினைக்க வேண்டாம்,'

வீட்டிலும் பள்ளிக்கூடத்திலும் 'பயம்' என்பதை ஒழியுங்கள். எல்லாக் குழந்தைகளிடமும் சரிசமமான அன்பு செலுத்துங்கள். கூடிய வரையில் இளவயதிலேயே பொறுப்பை அவர்களிடம் ஏற்றுங்கள். அதனல் அவர்கள் தன்னம்பிக்கையும் தைரியமும் அடைவார்கள். தங்கள் சுயமதிப்பை உணர்வார்கள். இந்த நிலையில் தன்மதிப்புப் பெற யுக்தி செய்து திருட அவர்களுக்கு அவசியமே இராது.

# 20

# குழந்தையும் பயமும்

## பயம் உண்டாகவே கூடாது

சிறுவன் பிறந்ததிலிருந்து ஒரு கவலையும் இல்லை. நன்றாய் வளர்ந்து வந்தான். அவனுடைய பிறந்த நாள் அன்றுதான் அவனுக்குப் பயம் என்ற விபரீதமான அந்த உணர்ச்சி எப்படியோ உண்டாயிற்று.

அவனை வளர்ப்பதில் எங்களுக்குக் கொஞ்சமும் சிரமம் தெரியவில்லை. கீழே விழுந்து மோதிக்கொள்வது காயம் பட்டுக் கொள்வது என்ற பேச்சே அவனிடம் கிடையாது. எவ்வளவு மாதங்கள் வரைக்கும் தாய்ப்பால் சாப்பிட வேண்டுமோ அவ்வளவு மாதங்கள் வரைக்கும் சாப் பிட்டான். அப்புறம் தானாகவே நிறுத்திவிட்டான். ஏற்ற பருவத்தில், கெட்டி ஆகாரம், நல்ல தூக்கம், விளையாட்டு எல்லாம் கிரமப்படி இருந்தன. அவனுடைய பதினாறாவது மாதத்தில் அவனுக்கு ஒரு தங்கை பிறந்தாள். சிறுவன் அவளிடம் உயிராயிருந்தான். பதினெட்டாவது மாதத்தில் பேசத் தொடங்கினான். இரண்டே மாதத்தில் அவனுக்கு எல்லா வார்த்தைகளும் வந்துவிட்டன. ஓயாமல் பேசத் தொடங்கிவிட்டான். இரண்டு வயது முடிவதற்குள் அவனுக்கு வாழ்க்கை எவ்வளவோ உற்சாகமான விஷயங்கள் நிரம்பியதாய்த் தோன்றியது. அவனுடைய இரண்டாவது பிறந்த நாள் அன்றுதான் அவனுக்கு முதல் கஷ்டம் ஏற்பட்டது. அன்றுதான் பயம் என்பதை நேருக்குநேர் கண்டான்.

### ஏரோப்ளேன் சத்தம்

அந்தச் சிறிய மரத்துக்கு மேலே வானம் பூமியைத் தொடும் இடத்தில் ஓர் ஏரோப்ளேன் 'கிர்' என்று சத்த மிட்டுக் கொண்டிருந்தது. அந்தச் சத்தத்தில் மரத்தின் இலைகள் எல்லாம் சலசல என்று ஆடி அசைந்தன. வானத்தை அது துளைத்ததுடன் அந்தச் சின்னஞ்சிறு குழந்தையின் வாழ்க்கையிலும் அது குத்தித் துளை இட்டுவிட்டது. நான் வீட்டுக்குள் இருந்தேன். ஏரோப்ளேன் சத்தத்தைக் கேட்டதும் வெளியே வந்து பார்த்தேன். பயத்தில் தரையோடு தரையாக அசையாமல் படுத்துக் கிடக்கும் சிறுவனைக் கண்டேன். பயம் என்ருல் சாமான்யப் பயமா? அவன் புத்தியே சிதறிவிடும் போலிருந்தது. அதைக் கண்டு எங்கள் மனம் என்ன பாடுபட்டது! விமான நிலையத்துக்கு மூன்று மைல் தூரத்தில் நாங்கள் இருந்தோம். கொஞ்ச காலத்துக்கு இந்த இடத்தைவிட்டு வேறு இடம் சென்று விடலாம் என்ருலும், சிறுவனுக்காகவே அங்கு தங்கி அவன் பயத்தை ஒழிக்கவேண்டும் என்று எங்களுக்குப் பட்டது. அப்படியே அதை ஒழிப்பதில் நாங்கள் வெற்றியும் அடைந் தோம். ஒவ்வொரு முறை ஏரோப்ளேன் பறக்கும்பொழுதும் நாங்கள் அந்த முயற்சியில் பெரும் பாடுபட்டோம்.

சிறுவனுக்கு ஏற்கெனவே ஏரோப்ளேன்கள் என்ருல் மிகவும் பிடிக்கும். அவன் தினமும் எவ்வளவோ ஏரோப் ளேன்களைப் பார்த்திருக்கிருன். அவை நேரே எங்கள் வீட்டுக் கூரைக்கு மேலேதான் எப்பொழுதும் பறப்பது வழக்கம். ஆனல் தினமும் பார்த்துத் தனக்குப் பழக்கமா யிருந்த அதே ஏரோப்ளேன் தரைக்குச் சமீபத்தில் இன்று திடீரென்று மிகவும் பயங்கரமாக இரைச்சலிடத் தொடங் கியதும், "ஐயோ! இந்த ஏரோப்ளேன் இவ்வளவு பயங்கர மானதா? இதை மிகவும் நல்லது என்று நினைத்திருந்தேனே" என்று சிறுவன் எண்ணிவிட்டான். அன்றுடன் அவனுடைய உற்சாகம் எல்லாம் பறந்தோடிவிட்டது. வெளியே புல் தரையில் புஷ்பச் செடிகளுக்கிடையே இஷ்டப்படி

விளையாடுவது, காய்கறிச் செடிகளின் நடுவில் புகுந்து காய்களைப் பறிப்பது, நாய்க் குட்டியுடன் திரிவது போன்ற விளையாட்டெல்லாம் நின்றுவிட்டன. அவன் சொக்காயில் மூத்திரமே பெய்யமாட்டான் என்ற பெருமையும் போய் விட்டது. இரண்டு வயதான குழந்தை இப்போது தனியே வெளியில் ஓர் அடி எடுத்து வைக்கக்கூட மறுத்ததோடு, வீட்டுக்குள் ஒரு நிமிஷமும் தனியே இருப்பதற்குக்கூடப் பலத்த ஆட்சேபணை செய்யத் தொடங்கிவிட்டான். எப் பொழுது பார்த்தாலும், 'என் கையைப் பிடித்துக்கொள் அம்மா! என் கையைப் பிடித்துக்கொள்ளேன்' என்ற கூப்பாடு! அவனுடைய 'ட்ரைசைகிள்', சக்கரம், ஊஞ்சல் எல்லாம் மூன்று வாரமாகக் கவனிப்பார் இல்லாமல் கிடந்தன.

## பயத்தின் வேகம்

"நாள் செல்லச் செல்லப் பயம் எல்லாம் தானாகவே போய்விடும்" என்று எல்லோரும் சொன்னார்கள். ஆனால் அவனைக் கவனிக்கும்பொழுது அது அவ்வளவு சுலபமாய்த் தள்ளக்கூடிய விஷயம் அல்ல என்று எனக்குத் தோன்றியது. அவனுக்கு முதல்முதல் பயம் எப்படி உண்டாயிற்று என்று யோசித்துப் பார்த்தேன்.

அன்று அவன் பயந்து நடுங்கியபொழுது எனக்கு இருந்த கவலையில்கூட ஓடிப்போய் உடனே அவனைத் தூக்கிக் கொண்டு வந்துவிடக் கூடாதென்று நினைத்தது எனக்கு ஞாபகம் வந்தது. நான் அவனைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டதும் 'ஓ' என்று அவன் அலரத் தொடங்கினான். ஏரோப்ளேன் கண்ணுக்கு மறைந்த பிறகுதான் நாங்கள் வீட்டுக்குள் சென்றோம். அப்புறம் ஒரு வாரம் வரையிலும் என் கையை இறுக்கிப் பிடித்துக்கொள்ளாமல் அவன் வாயிற் பக்கம் வரமாட்டான். துணை இல்லாமல் அவனைத் தனியே வெளியில் போகும்படி செய்ய நாங்கள் ஆனமட்டும் பாடு பட்டோம். "நீ பெரியவனாயிற்றே, ஏரோப்ளேன் ஒன்றும்

செய்யாது" என்று என்ன சொல்லியும் அவன் கேட்கவில்லை. என்னோடு வெளியே வரும்பொழுதுகூட, ஏரோப்ளேன் சத்தம் ஏதாவது கேட்கிறதா என்ற யோசனையுடன் அவன் வானத்தை அண்ணாந்து பார்ப்பான்.

காலையில் எழுந்திருக்கும்பொழுதே, "இன்று ஏரோப்ளேன் வராதே, இல்லையா அம்மா" என்று கேட்டுக்கொண்டே எழுந்திருப்பான். "வராது" என்று சொல்லி விடுவது எளிதுதான். என்றாலும், அது தவறு என்று தோன்றிற்று. அவன் இரண்டு வயதுக் குழந்தையே என்றாலும், "ஏரோப்ளேன் வரத்தான் வரும்; ஆனால் அதைக் கண்டு பயப்படக்கூடாது." இப்படிச் சொல்ல வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. நான் "ஏரோப்ளேன் வராது" என்று சொன்னால், பின்னால் ஏரோப்ளேன் சத்தத்தை அவன் கேட்கும்பொழுது நான் கூறியது தவறு என்று ஆகிவிடும் அல்லவா? ஆகவே நான் மிகவும் சாதாரணமாக "ஒ இன்று பத்து ஏரோப்ளேன் வந்தாலும் வரும்" என்று சொல்லி வைப்பேன். உடனே சிறுவன் அவற்றை ஒன்று இரண்டு மூன்று என்று எண்ணுவதில் உற்சாகம் கொள்வான். அதனால் அவன் பயமும் சற்றுக் குறையும்.

### 'கிர்' என்னும் சத்தம்

தூரத்தில் கிர் என்ற சத்தம் கேட்டதோ இல்லையோ உடனே ஓடிப்போய்ப் படுக்கையில் தலையை நட்டுக்கொண்டு கிடப்பான். நான் வீட்டு வேலையை எல்லாம் விட்டுவிட்டு, எப்பொழுது ஏரோப்ளேன் சத்தம் கேட்கப் போகிறது என்று கவனித்துக் கொண்டிருப்பேன். சத்தம் கேட்டதும், அவனிடம் ஓடிப்போய் 'அது ஏரோப்ளேன் தானா? போய்ப் பார்க்கலாம் வா' என்று சொல்லி அவனை எடுத்துக்கொண்டு சன்னலண்டை செல்வேன். எனக்கு எல்லா ஏரோப்ளேன்களும் ஒரே மாதிரியாகத்தான் தோன்றும். ஆனால் சிறுவனுக்குக் காட்டத் தொடங்கியவுடன் எனக்கு ஒன்றுக்கொன்று வித்தியாசம் தெரிந்தது.

"அதோ பார், அதற்கு இரண்டு வால்கள் இருக்கின்றன போல் தோன்றுகிறதே! இந்த ஏரோப்ளேன் மிகவும் சின்னது இல்லையா? பார்த்துச் சொல்" என்றெல்லாம் நான் கூறுவேன். உடனே அவன் கவனம் எந்த ஏரோப்ளேன் பெரியது என்று கண்டுபிடிப்பதில் செல்லும்.

இப்பொழுதெல்லாம் நல்ல காற்றுக்காகச் சிறிது நேரம் வெளியே போய்விட்டு வருவோம். அவ்வளவுதான். நாங்கள் அவனை இஷ்டப்படி வெளியே ஓடி ஆடச் செய்வதை விட்டுச் சிறு குழந்தையைப்போல் சிறிது நேரம் வெளியே வைத்துக் கொண்டிருப்பது, வண்டியில் வைத்துத் தள்ளுவது இவற்றோடு நிறுத்திக் கொள்ளும்படி ஆயிற்று. எதற்காவது என்னுடன் வெளியில் வரும்பொழுது ஏரோப்ளேன் பறப்பதைக் கண்டுவிட்டான் என்றால், என் ஆடையை இரண்டு கைகளாலும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு விடுவான். ஆகவே, 'அவன் வெளியே போகமாட்டான் என்றால் சரி' என்று நினைத்து நானும் அவனை அவன் இஷ்டப்படி விட்டு விட்டேன். அவனுக்கு வாசலில் போகவேண்டும் என்று தோன்றும்பொழுது அவன் சொல்லாமலே நான் அவன் கையைப் பிடித்துக்கொள்வேன். வாசலில் சென்றவுடன், அவன் கையை மெல்ல விட்டுவிட்டு தோள்மேல் அல்லது தலைமேல் கையை மெதுவாக வைத்துக் கொண்டிருப்பேன். பிறகு, அந்தக் கையினாலேயே அவனுக்கு எதையாவது காட்டிவிட்டு மீண்டும் அவன் கையை மெல்லப் பிடித்துக் கொள்வேன்.

வெளியே இருக்கும்போது நான் அவனைத் தனியே விட்டுப் பரீக்ஷை பார்க்காததால் என்னுடன் போய் வருவதற்கு அவனுக்குச் சிறிது தைரியம் உண்டாயிற்று. நாள் முழுவதும் நானும் அவனும் ஏதேனும் காரியமாய் வாசற் பக்கம் போய் வந்தவண்ணமாக இருப்போம். ஏரோப்ளேன் சத்தத்தைக் கேட்டு அவன் பயப்படுவதற்கு முன்பே நாய், பூனை, சீமைத் தக்காளிச் செடி இவற்றில் ஏதாவது ஒன்றில் அவன் கவனம் முற்றும் ஈடுபடச் செய்து

விடுவேன். ஒவ்வொரு தடவையும் நானே முந்திக்கொண்டு "அதோ பார் ஏராப்ளேன். அது கிடக்கிறது, இந்தத் தக்காளிப் பழத்தைப் பார்த்தாயா எவ்வளவு சிவப்பா யிருக்கிறது" என்று சொல்வேன்.

## பயத்தை வெல்வது எப்படி ?

மீண்டும் மெதுவாய் வாசற் பக்கம் செல்வதில் அவனுக்கு விருப்பம் உண்டாயிற்று என்ருலும் தனியாய் மாத்திரம் போகமாட்டான். சின்னக் குழந்தையையும் கொண்டுபோக வேண்டியிருந்ததால், இரண்டு குழந்தை களையும் தள்ளு வண்டியில் நெருக்கி உட்காரவைத்து வெளியில் அழைத்துச் சென்றேன். அது சிறுவனுக்கு நல்லதாய்ப் போயிற்று. என் கையை விட்டுவிட்டு அவன் வண்டியைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான். அந்த மட்டும் பயத்தை வெல்லுவதில் நாங்கள் ஒரு படி மேலே வந்துவிட்டதாக எனக்குத் தோன்றியது. அதற்குப் பிறகு அவனிடம் நடை வண்டியைக் கொடுத்து "இதைத் தள்ளிக் கொண்டுபோ பார்க்கலாம்" என்று சொன்னேன். தட்டுத் தடுமாறிக்கொண்டு, ஏதோ ஒருவிதமாய் அதைத் தள்ளிக் கொண்டு சென்ருன். இழந்த சுதந்திரத்தை இந்தவிதமாக இரண்டே வாரத்தில் மீண்டும் ஒருவாறு பெற்றுவிட்டான் என்றே சொல்லலாம்.

அந்த நடை வண்டியைக் கொண்டு சென்றபொழுது அவன் நடந்தது மிக அரிய காட்சியாக எங்களுக்குத் தோன்றிற்று. அவன் தட்டுத்தடுமாறிக் கொண்டு செல் லும்பொழுது, அவனைத் தனியே விடாமல் நானும் கூடவே சென்றேன். முதலில் தனியாய் முன் வாசல் பக்கம் வரைக் கும் சென்று உட்கார அவனுக்குத் தைரியம் வந்தது. அந்தச் சமயம் பார்த்து ஏரோப்ளேன் சத்தம் கேட்டுவிடும். உடனே அவன் ஒரே பயத்துடன் வண்டிப் பிடியைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்வான். இருந்தாலும், அந்த இடத்தைவிட்டு மட்டும் ஓடிப் போகமாட்டான். இப்படி

நாளுக்கு நாள் அவன் பயம் குறைந்துகொண்டே வந்தது. ஒருநாள் காலை அவனை 'ட்ரைசைகிளி'டம் அழைத்துச் சென்று அதை விட்டுப்பார்க்கச் சொன்னேன். அது இன்னும் ஒருபடி மேல்பயிற்சியாகும். சைகிளில் தனியாக இருப்பதுடன் தன்னைத்தான் கவனித்துக்கொள்ளவும் வேண்டும் அல்லவா? என்னைப் பிடித்துக்கொள்ளாமல் தானாகவே அதில் ஏறி உட்கார்ந்துகொண்டு உள்ளுக்குள்ளேயே சுற்றிச் சுற்றி வந்தான். ஆனால் அப்பொழுதெல்லாம் அவன் காது மட்டும் ஏரோப்ளேன் சத்தம் கேட்கிறதா என்று கவனிப்பதிலேயே ஈடுபட்டிருந்தது. வீட்டில் ஏரோப்ளேனைப் பற்றிப் பேசிப்பேசி அவனுக்குப் பழக்கமாயிற்று. "அதுவும் 'டிரக்' வண்டி மாதிரிதான். சாமான்களை ஏற்றிக்கொண்டு போகிறது. இதோ இந்த ஏரோப்ளேனும் அப்படித்தான். பாட்டிக்கு எழுதினோமே அந்தக் கடிதத்தைக் கொண்டு போகிறது இந்த ஏரோப்ளேன் என்று நினைக்கிறேன். இப்பொழுது எவ்வளவு ஏரோப்ளேன் போயிற்று எண்ணிப் பார்த்தாயோ? மூன்றா ஒன்பதா எட்டா ஆறா? ஏரோப்ளேன் ஓட்டுகிறானே அந்த ஆளை நீ பார்த்தாயோ?" என்றெல்லாம் கேட்போம்.

இரண்டு பொம்மை ஏரோப்ளேன்கள் வாங்கி அவை எப்படிப் பறக்கின்றன என்பதை அவனுக்கு ஒவ்வோர் அம்சமாக விளக்கிக் காட்டினோம். ஏரோப்ளேன் என்றால் பிரமாதமில்லை என்று அவனுக்குத் தோன்ற ஆரம்பித்தது! அவன் தைரியமாய், 'ட்ரைஸிகிளி'ல் உட்கார்ந்திருக்கும் சமயம் பார்த்து, அவன் சிறு தங்கையைக் கொண்டுபோய் அவனுக்கு எதிரில் உட்கார வைத்து அவனுக்குத் தரையில் குட்டிக்கரணம் போடக் கற்றுக் கொடுத்தேன். சிறுவனுக்கு மெல்ல மெல்ல அது பழக்கமாயிற்று. ஒருநாள் ஏரோப்ளேன் பறக்காத சமயம் பார்த்து அவனைத் தோட்டத்துக்கு அழைத்துப் போய் 'எங்கே, தங்கச்சிப் பாப்பா பார்க்கட்டும், குட்டிக்கரணம் போடு' என்றேன். அவன் போட்டுக் காண்பித்ததும், "ஏதோ அந்த மரத்தண்டை

ஓடிப் போய்ப் போடு பார்க்கலாம்" என்றெல்லாம் தூண்டி னேன்.

### பயம் தெளிந்தது

இரண்டு மூன்று வாரங்களுக்குமுன் கிலி பிடித்துப் போய் எந்தப் புல் தரையில் கவிழ்ந்து படுத்துக் கிடந்தானே அதே புல்தரையில் சிறுவன் இப்பொழுது மீண்டும் பழைய உற்சாகத்துடன் குட்டிக் கரணம் போட்டுக்கொண்டு உருண்டு புரண்டு விளையாடலானுன். எங்கே மறுபடியும் அவன் கிலி திரும்பி வந்துவிடுமோ என்று நான் ஜாக்கிரதை யாக நடந்துகொண்டேன்.

ஏரோப்ளேனைப் பற்றிப் பாடம் கற்றுக்கொடுக்கும் ஒரு ஸ்கூலுக்கு மறுநாள் மாலை அவன் தந்தை அவனை அழைத்துச் சென்முர். அங்கே விதம்விதமான வர்ணமுள்ள அழகிய சின்னஞ்சிறு ஏரோப்ளேன்கள் வானத்தில் மேலுங் கீழுமாய்ப் பறப்பதைப் பார்க்க அவனுக்கு இன்னும் தைரிய மும் உற்சாகமும் பிறந்தன.

இப்படி ஒரு மாத காலம் போராடின பிறகு, சிறுவன் வெற்றி அடைந்தான். அவனுக்கு ஏற்பட்ட கிலி சாதாரண மானதல்ல. பயம் உள்ளூறப் பிடித்து ஆட்டிக் கொண் டிருக்கும்போது, வெளிக்கு ஒன்றுமில்லை என்று அவன் ஒரு போதும் கூறவில்லை.

இதோடு இது நின்றுவிடாது. இதே மாதிரி இன்னும் ஏதாவது பயம் ஏற்படும் என்று எனக்குத் தெரியும். ஆனல் இவ்வளவு பெரிய கிலி ஒருவாறு நீங்கிய பிறகு, இனி வரக் கூடிய கிலிகளைப் பற்றி எனக்கு அவ்வளவு கவலை இல்லை. இரண்டே வயதான ஒரு சிறு குழந்தையின் உள்ளத்தில் வேரூன்றியிருந்த நடுக்கத்தை அடியோடு போக்கிவிட்டதை நினைக்க எங்களுக்கும் பெருமையாகவே இருக்கிறது.

# 21

# குழந்தையும் காப்பும்

குழந்தை பள்ளிக்கூடத்துக்குப் போகத் தொடங்கினல், பிறகு அவனைப்பற்றி நாமே முழுவதும் கவனித்துக் கொள்வது என்பது சாத்தியமில்லை. வீட்டில் ஜாக்கிரதையாக இருக்க நாம் கற்றுக் கொடுத்தால் வீட்டுக்கு வெளியிலும் தன்னைத்தான் பார்த்துக்கொள்ளும் திறமை அவனுக்கு ஏற்படும். பள்ளிக்கூடத்தில் வாத்தியார் பொதுவாகச் சில எச்சரிக்கைகள் செய்வார். அவ்வளவுதான்! மீதிப் பொறுப்பு முழுவதும் பெற்றோரைச் சேர்ந்ததே. எங்கெங்கே குழந்தை ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் பற்றிய சில விவரங்களைக் கீழே தருகிறோம்.

## தெருக்களில் பாதுகாப்பு

சிறுவன் தெருவில் நடந்து செல்லும் பொழுது கீழ்க் கண்ட விதிகளை அனுசரித்து நடக்கும்படி போதிக்க வேண்டும்.

**1.** தெருவில் இறங்கி எதிர்ப்பக்கம் செல்ல வேண்டுமானல், நின்று, ஏதாவது மோட்டார் காரோ வேறு வண்டியோ வருகிறதா என்று இரண்டு பக்கமும் பார்த்து விட்டுப் பிறகுதான் செல்ல வேண்டும்.

2. தெருக்கள் சேருமிடத்தில் மட்டுமே தெருவைக் கடந்து செல்லலாம். எந்த இடத்திலும் ஓடவே கூடாது.

3. தெருவில் விளையாடுவது கூடாது.

4. தெருவின் பக்கத்தில் நடைபாதை இல்லாவிட்டால், இடது பக்க ஓரத்தில் வெகு ஜாக்கிரதையாக நடந்து செல்லவேண்டும்.

5. பள்ளிக்கூடத்துக்குப் போக எந்த வழி ஜாக்கிரதை யாக இருக்குமோ அந்த வழியாகவே செல்லுவது நல்லது.

## சைக்கிள் விடும்போது பாதுகாப்பு

சிறுவன் சைக்கிள் விடும்பொழுது இந்த விஷயங்களைக் கவனிக்க வேண்டியது முக்கியம் என்பதை தெரியப்படுத்த வேண்டும்.

1. எப்படிச் செல்ல வேண்டும், எந்தப் பக்கமாய்ச் செல்ல வேண்டும் என்பவை போன்ற விதிகளை முழுவதும் ஒழுங்காய்ப் பின்பற்றி நடக்கவேண்டும். போலீஸ்காரன் கொடுக்கும் ஒவ்வொரு சமிக்ஞையையும் சரியாய்ப் புரிந்து கொள்ள வேண்டும்.

2. ரோட்டின் இடது பக்கமே செல்ல வேண்டும். ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாகச் செல்ல வேண்டுமே தவிர, வளைந்தும் நெளிந்தும் சைக்கிளை விடலாகாது.

3. இரண்டு பேர் ஒரே சைக்கிளின்மீது ஏறிச் செல்வது ஒருபோதுமே கூடாது.

4. வேறு வண்டி எதுவும் வராமலிருக்கிறதா என்று பார்த்துக்கொண்ட பிறகே தெருவில் இறங்கவேண்டும். நிறுத்தி வைத்திருக்கும் மோட்டார்களின் பின்புறமிருந்து அவைகளைக் கடந்து வரும்பொழுது அவை புறப்பட வில்லையா என்று ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டு வரவேண்டும்.

5. தெருவில் வண்டிகளும் ஜனக்கூட்டமும் அதிகமாக இருக்கும்போது சைக்கிளை விட்டு இறங்கி மெதுவாய்ச் சைக்கிளைத் தள்ளிக்கொண்டு செல்லவேண்டும்.

6. இரவில் விளக்குடன் செல்ல வேண்டும். வெளுப் பான ஆடைகளை]அணிவது நல்லது.

7. சைக்கிளின் பிரேக், விளக்கு முதலியவை நன்ருயிருக்கின்றனவா என்று கவனித்து எப்பொழுதும் பழுதில்லாமல் வைத்துக்கொள்ள வேண்டும்.

## விளையாடும்போது கவனிக்கவேண்டுபவை :

விளையாடுவதற்கென்று ஒதுக்கியிராத மைதானங்களில் சிறுவன் விளையாடாமல் இருக்கும்படி பெற்ருேர்களும், வாத்தியார்களும் மிகவும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும். சிறுவன் விளையாடும் பொழுது யாராவது பெரியவர்கள் கூடவே இருந்து கவனிக்க வேண்டும். பின் கண்ட விதிகளை அவன் அனுஷ்டிக்கச் செய்ய வேண்டியது அவசியம்.

1. 'சறுக்குப் பலகை' (ஸ்லைடு) மீது சறுக்கி விழும்போது கால் கீழ்ப்புறமும் தலை மேல்புறமும் இருப்பது அவசியம்.

2. 'ஆடு பலகை' (ஸி-ஸா) மீதிருந்து இறங்குவதற்கு முன் மற்றவருக்கு எச்சரிக்கை செய்துவிட்டு இறங்க வேண்டும்.

3. பந்து விளையாடுவதென்ருல் மைதானத்தில் அதற்கென்று ஏற்பட்டதும், சிறு குழந்தைகள் இல்லாததுமான இடத்தில் விளையாட வேண்டும்.

4. பெரிய பள்ளங்கள், கட்டிட வேலை நடக்கும் பகுதிகள், குடியில்லாத வீடுகள், ரெயில் வண்டிப் பாதைகள் முதலியவை உள்ள இடங்களுக்கருகில் விளையாடக் கூடாது.

## நீந்தும்போது நினைக்க வேண்டியவை :

குழந்தைகளுக்கு நீந்தக் கற்றுக் கொடுப்பது மிகவும் முக்கியம். அவனுக்கு எவ்வளவு நன்ருய் நீந்தத் தெரிந்துவிட்டாலும், சில விஷயங்களைப்பற்றி எடுத்துரைப்பது நல்லது.

1. ஜில்லென்று குளிர்ந்திருக்கும் ஜலத்தில் தொப்பென்று குதிக்கக் கூடாது. அப்படிக் குதித்தால் உடம்பு

மரத்துப் போய்விடும். குளிர்ந்த ஜலத்தில் மெதுவாய் இறங்க வேண்டும். அதில் அதிக நேரம் நீந்திஞல் சீக்கிரமே சோர்வு உண்டாகிவிடும். ஆகவே கரையை விட்டு அதிக தூரம் நீந்திச் சென்றுவிடக் கூடாது.

2. ஓய்ந்து போகாதிருப்பதற்காகச் சற்று நேரத்திற்கு ஒரு முறை ஜலத்தில் அமைதியாய் மிதக்க வேண்டும்; அல்லது கைவீச்சை மாற்ற வேண்டும்.

3. ஜலத்தில் இறங்குமுன், பாறைகள், மரங்கள் முதலியவை நீருக்கடியில் இல்லாமல் இருக்கின்றனவா என்று பார்த்து இறங்க வேண்டும். 8 அடி ஆழமுள்ள இடத்தில் நீந்துவதுதான் அதிக அபாயமில்லாமல் இருக்கும்.

4. இருட்டில் நீந்துவது எப்போதுமே தவறு.

5. முழுகிப் போவதுபோல் பாசாங்கு செய்து வேடிக்கைக்காகக் கூச்சலிட்டுப் பிறரை உதவிக்கு அழைக்கக் கூடாது.

6, ஏதாவது சிரமம் ஏற்பட்டால் பயந்து போகாமல் அமைதியாக இருக்க வேண்டும். கைகால்களே அடித்துக் கொண்டு அதிகமாகக் கூக்குரலிட்டு ஓய்ந்து போகலாகாது. உதவிக்கு வந்தவருக்குச் சௌகரியமாக நடந்து கொள்ள வேண்டும்.

7. நீந்துவதில் தனக்குள்ள சாமர்த்தியம் இன்ன அளவுதான் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

### வசிக்கும் அறையும் படுக்கையறையும் :

பொதுவாக வீட்டில் கீழ்க்கண்ட அம்சங்களேக் கவனிக்க வேண்டும்.

1. அறையில் குளிர் காய்வதற்குக் கணப்பு இருந்தால் அதைச் சுற்றிலும் ஒரு தட்டி வைத்து மறைத்து வைப்பது நல்லது. புகைப்போக்கியை எப்பொழுதும் பழுதில்லாமல் சுத்தமாய் வைத்திருத்தல் வேண்டும்.

2. உயரத்திலிருந்து ஏதாவது எடுக்க வேண்டும் என்றால், அழுத்தமான முக்காலியையோ அல்லது சிறிய ஏணி ஒன்றையோ உபயோகிப்பது நல்லது. கால்கள் ஆடிப் போன நாற்காலிகளின் மீது ஏறுவது அபாயம்.

3. கீழே விரித்திருக்கும் பாய்களின் ஓரங்கள் சுருட்டிக் கொள்ளாமல் இருக்கும்படி பார்க்க வேண்டும்.

4. விளையாட்டுச் சாமான்களில் எவையும் காலின் கீழ் அகப்பட்டுத் தடுக்கிவிடாமல் இருக்கும் பொருட்டு, அவைகளை ஜாக்கிரதையாய் அப்புறப்படுத்தி விட வேண்டும்.

5. நைந்துபோன மின்சாரக் கம்பிகளை நீக்கிப் புதியவற்றை அமைக்க வேண்டும். டெலிபோன் கம்பியிலோ அல்லது வேறு ஏதாவது கம்பியிலோ கால் மாட்டிக் கொண்டு குழந்தை தடுக்கி விழாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

6. குழந்தைக்கு ஜன்னலின்மேல் ஏறும் வயது வந்து விட்டால் அது விழுந்துவிடாதபடி ஜன்னலுக்குத் தகுந்த காப்புகள் அமைக்க வேண்டும்.

7. குழந்தைக்குப் போட்டிருக்கும் கட்டிலின் இரண்டு பக்கச் சட்டங்களையும் எப்பொழுதும் உயர்த்தியே வைக்க வேண்டும். குழந்தையைத் தனியே தூங்க வைத்து மார்பு வரையில் மட்டுமே போர்த்துவிட வேண்டும்.

8. ஊசி குண்டூசி கத்தரிக்கோல் போன்ற வஸ்துக்கள் கீழே சிதறிக் கிடக்கும்படி விடாமல், அவைகளை உடனே பெட்டியில் போட்டுக் குழந்தையின் கைக்கு எட்டாத இடத்தில் வைப்பது நல்லது.

9. படுக்கை அறையில் சிறு விடிவிளக்கு வைத்து அதற்குரிய எலெக்ட்ரிக் ஸ்விட்சைக் கதவிலேயே அமைத்து வைப்பது நல்லது. உள்ளே வரும்பொழுது அந்த ஸ்விட்சைப் போட்டுக்கொண்டால், இருட்டில் தடுக்கி விழா

மலும் எதன் மீதாவது முட்டி மோதிக் கொள்ளாமலும் இருக்கலாம்.

10. நெருப்புப் பெட்டிகளைக் குழந்தையின் கண்ணில் படாமல் மறைத்து வைக்க வேண்டும்.

11. நடக்கும் வழியில் நாற்காலியோ, மேஜையோ இல்லாமல் அவைகளை ஓரமாய்ப் போட வேண்டும்.

சமையலறையில் கவனிக்க வேண்டியவை :

1. கீழே ஏதாவது கொட்டிவிட்டால் உடனே துடைக்க வேண்டும்.

2. எரியும் அடுப்பில் ஏதாவது கெட்டில் வைத்திருந் தால், அதன் பிடியை உள்பக்கமாகத் திருப்பி வைப்பது நல்லது.

3. அடுப்பில் இருக்கும் பாத்திரத்தை இறக்குவதற்கு இடுக்கி வைத்துக்கொள்வது நல்லது. இல்லாவிட்டால் கையில் பட்டுக் கொப்புளித்துப் போய்விடும்.

4. பினைல், லைசால் போன்றவைகளைச் சிறு குழந்தைகள் எடுக்காதபடி ஒதுக்குப்புறமாய் வைக்க வேண்டும்.

5. அடுப்புத் தீ பட்டு உடனே பற்றிக்கொள்ளக் கூடிய சாமான் எதையும் அடுப்புக்கு அருகே வைக்கலாகாது.

6. பீரோவின் கதவு, பீரோ, டிராயர் ஆகியவைகளை எப்பொழுதும் சாத்தியே வைத்திருப்பது நல்லது.

7. யாரும் குழந்தையை வைத்துக்கொண்டு அகல மில்லாத பெஞ்சியிலோ, நாற்காலியிலோ உட்காரக்கூடாது. அப்படி உட்கார்ந்தால் திடீரென்று குழந்தையுடன் உருட்டி யடித்துக்கொண்டு கீழே விழும்படி நேரலாம்.

ஸ்நான அறையில் சிந்திக்க வேண்டியவை :

1. மருந்துகளை அலமாரியின் மேல் தட்டில் வைக்க வேண்டும். புட்டிகளின் மீது மருந்துகளின் பெயரை எழுதி

ஒட்டி வைப்பது நல்லது. மருந்துகளை உட்கொள்ள வேண்டிய முறைகளைச் சரியாகக் கவனித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

2. க்ஷவர 'பிளேடு'களை உபயோகித்தபின் கண்ட இடத்தில் எறியாமல் தனியாக ஒரு டப்பாவில் போட்டு மூடிவைக்க வேண்டும்.

3. வழுக்கி விழாமல் இருக்கும் பொருட்டு ஸ்நானத் தொட்டியின் கீழே ரப்பர்ப் பாய் போட்டு வைப்பது நல்லது.

4. ஜலமும் மின்சாரமும் ஒன்று சேர்ந்திருப்பது மிகவும் அபாயம். ஸ்நான அறையில் ரேடியோ வைத்துக் கொள்ளக்கூடாது. ஈரக்கையுடன் எலெக்ட்ரிக் ஸ்விட்சை ஒருபோதும் தொடலாகாது.

### மாடிப்படியில் கவனிக்க வேண்டியது

1. மாடிப்படியில் ஒரு சாமானும் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இருந்தால் எதன் மீதாவது இடறி விழும்படி நேரும்.

2. மாடிப்படியின் தொடக்கத்திலும் கதவுகள் இருந்தால் குழந்தை ஏறி விழாமல் மூடி வைக்க வசதியாயிருக்கும்.

3. மாடி நல்ல வெளிச்சமாக இருக்க வேண்டும். மாடிப்படி விளக்குக்குப் படியின் முதலிலும் முடிவிலும் எலெக்ட்ரிக் ஸ்விட்ச் இருப்பது நல்லது.

4. மாடிக் கைபிடி உறுதியாய் இருக்க வேண்டும். அதை ஒரு கையால் பிடித்துக்கொண்டு போவது நல்லது.

5. மரப்படியாக இருந்தால் படிகள் அழுத்தமாக இருக்க வேண்டும். அதன்மேல் கிழிந்த பாய் எதையும் விரிப்பது தவறு.

6. படிகள் மிகவும் வழுவழுப்பாயிருந்தால் வழுக்கி விழ நேரும்.

முற்றமும் கார்ஷெட்டும்:

1. பலகை பெட்டி இவைகளில் ஆணிகள் இருந்தால் அவற்றை எடுத்து அப்புறப்படுத்திவிட வேண்டும். சிறிய மரத்துண்டுகள் கீழே சிதறிக் கிடக்கும்படி விடக்கூடாது.

2. மண்வெட்டி கோடரி போன்ற சாமான்களை ஓரமாய்ப் போட வேண்டும். அவற்றை நிமிர்த்தி வைக்கச் கூடாது.

3. ஷெட்டிலிருந்து காரை எடுக்குமுன் கதவுகளைத் திறந்து வைக்க வேண்டும். குழந்தை எதுவும் ஷெட்வாசலில் இல்லையா என்று கவனித்த பிறகே காரை மெதுவாய் கிளப்பி வெளியில் கொண்டுவர வேண்டும.

4. வழியில், கண்ணாடித் துண்டுகள், உடைந்த தகரம் போன்றவை இறைந்து கிடக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

5. குப்பை கூளம் காகிதம் குவிந்து போகும்படி விடக் கூடாது. எண்ணெய் மெழுகுத் துணிகள் குவிந்து கிடந்தால் சுலபமாய் தீப்பற்றிக் கொள்ளும்.

# 22

# குழந்தையும் பார்வையும்

## கண் பார்வையும் குணமும்

குழந்தையின் கண் பார்வையைப் பொறுத்துத்தான் பெரும்பாலும் அதன் சுபாவமும் இருக்கும் என்று சொல்லி விடலாம். ஒரு சிறுவனுக்குத் தூரத்திலிருக்கும் பொருள் நன்ருகத் தெரியாது; அதனுல் அவன் விளையாட்டில் மந்த மாக இருந்ததுடன் புத்தகப் புழுவாகவே ஆகிவிட்டான். ஒரு சிறுமிக்கோ தூரத்தில் இருக்கும் பொருள்தான் நன்ருகக் கண்ணுக்குத் தெரியும்; ஆகவே அவளுக்குப் படிப்பு தையல் எல்லாம் கஷ்டமாயிருந்தன; ஆனுல் புருஷப் பிள்ளை போல நன்ருக ஓடியாடி விளையாடுவாள். மற்றொரு சிறுவ னுக்கு எல்லாப் பொருள்களும் இரட்டையாகத் தெரி கின்றன; இதனுல் ஏற்படும் மனக் கலக்கத்தில் அவன் குணமே கெட்டுப்போய் அடிக்கடி அவனுக்கு வெறி வந்து விடுகிறது. மற்றொரு சிறுமிக்கு மங்கலான பார்வை, கண்ணைச் சுளித்துப் பார்க்கும் துன்பத்துக்குள்ளாகி ஏதாவது முனகிக்கொண்டே இருக்கிருள்.

## பரீட்சையும் கண் பார்வையும்

சட்டத்தை மீறிய குற்றத்துக்காக சிருர் நீதிமன்றத் துக்குக் கொண்டு வரப்பெற்ற ஐந்து குழந்தைகளைப் பற்றி ஜான் பி. ஓஷீ என்ற கண் டாக்டர், "கண் சுத்தமாகத் தெரியாததாலேயே அந்தக் குழந்தைகள் அனைவரும் ஸ்கூல் பரீட்சையில் தேறவில்லை" என்கிருர். கண்ணைச் சோதித்துப் பார்த்து, அதிலிருந்த குறையை நீக்கியவுடன், அவர்களில் நான்கு குழந்தைகள் நன்ருகப் படித்துத் தேறினுர்கள்,

பெரியவர்களான பிறகும் ஒழுங்கும் நேர்மையுமுள்ள மனிதர்களானுர்கள். பவேரியா முதலிய பட்டணங்களிலுள்ள ஸ்கூல்களில் ஆராய்ந்து பார்க்கும்பொழுது பார்வைக் கெடுதலினுலேயே அநேகம் சிறுவர்கள் பரீட்சையில் தவறுவதாகத் தெரிகிறது.

## பார்க்கும் சக்தி வளர்ச்சி

குழந்தையின் சைகைகள், அதன் அறிவு வளர்ச்சி, மூகவெட்டு அனைத்துமே அதன் கண் பார்வையையே பொறுத்திருக்கின்றன என்று டாக்டர் அர்னுல்டு காஸெல் என்பவர் கூறுகிருர். "பதினுறு வயதுக்குள்தான் கண்கள் தம் முழுத் திறமையையும் அடைகின்றன. பிறந்த குழந்தைக்கு வெளிச்சம் தெரியும். ஆனுல் கண் பார்வை மட்டும் அப்பொழுது பிறந்த பூனைக்குட்டிக்கு எவ்வளவு தெரியுமோ அவ்வளவுதான் தெரியும். மூன்று மாதம் வரைக்கும் குழந்தையின் விழி தானுகப் புரண்டுகொண்டே இருக்கும். சிலநாள் சென்றபின்பே எதையாவது குறிப்பாய்ப் பார்க்கும் சக்தி அதற்கு ஏற்படுகிறது! சிறு குழந்தையாக இருக்கும் பொழுது இரண்டு மூன்று வாரங்களுக்கு ஒருமுறை கண் பார்வை விருத்தியடையும். பிறகு ஒரு வயதிலிருந்து நான்கு வயது வரையில் சில மாதங்களுக்கு ஒருமுறை பார்வைக்கு வளர்ச்சி ஏற்படுகிறது. ஐந்து வயதிலிருந்து பத்து வயதுவரையில் வருஷத்துக்கு வருஷம்தான் கண்பார்வையில் நாம் வளர்ச்சியை எதிர்பார்க்கலாம்" என்று டாக்டர் காஸெல் கூறுகிருர்.

## தாய்க்குக் கவனம் வேண்டும்

நல்ல கண் பார்வையோடு குழந்தை பிறக்கவேண்டுமென்ருல், தாய் கர்ப்பவதியாயிருக்கும் பொழுதே கவனித்து நடந்து கொள்ள வேண்டும். டாக்டர் சொல்லுகிறபடி உணவு உட்கொள்ள வேண்டும்; வாழவேண்டும். தொத்து வியாதிகள் வராமல் பார்த்துக் கொள்ளவேண்டும். கர்ப்பமாயிருக்கும் பொழுது தாய்க்குச் சின்ன அம்மை வார்த்தால்,

அது வயிற்றிலிருக்கும் குழந்தையின் கண்ணைப் பாதிக்கும். குறைப் பிரசவம் ஏற்பட்டு விடாதபடி டாக்டர் சொல்லுகிற முன்னெச்சரிக்கைகளை எல்லாம் எடுத்துக் கொள்ளுங்கள். ஆறு ஏழு மாதக் குறைப்பிரசவங்களில் பிறந்த குழந்தைகளை இப்பொழுதெல்லாம் டாக்டர்கள் காப்பாற்றி விடுகிறார்கள். ஆயினும், அவைகளுக்குக் கண் பார்வை சரியாக இருப்பதில்லை. சில குழந்தைகளின் கண்கள் பொட்டையே ஆகிவிடுகின்றன.

## பிறந்த குழந்தையின் கண்கள்

பிறந்த சிலநாள் வரைக்கும், குழந்தையின் கண்ணுக்கு அதிக வெளிச்சம் ஆகாது. கிரகணத்தின் பொழுது சூரியனை உற்றுப் பார்த்தவர்கள் கண்பார்வை இழந்துபோவதைப் பார்த்திருக்கிறோம் இல்லையா? கைக் குழந்தையை வெளியே வண்டியில் வைத்துத் தள்ளிச் சென்றால், முகத்துக்கு நேரே வெயில் படாதபடி வண்டியைத் தலைப்பக்கம் மூடி வைக்க வேண்டும். குழந்தையின் கண்ணை நாம் கழுவிச் சுத்தம் செய்யவேண்டிய அவசியமே இல்லை. அது அழுவதனாலேயே அதன் கண் அலம்பியதுபோல் சுத்தமாகி விடுகிறது. 'பீளை' சேர்ந்து இமை ஒட்டிக் கொண்டிருந்தால்தான், கண்ணுக்கு டாக்டரைக் கேட்டு மருந்து வாங்கிப் போடவேண்டும்.

குழந்தைக்கு அம்மை டிப்தீரியா போன்ற தொத்து வியாதிகள் வந்தால் கண்பார்வை பாதக மடையும். அப்பொழுது மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

மூன்று மாதம் வரையிலும் சில சமயம் குழந்தையின் கண் பார்வை நேர் பார்வையாக இல்லாதது போல் தோன்றும். அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. ஆயினும் ஆறுமாதத்துக்குப் பிறகும் பார்வை ஒரு மாதிரியாக இருப்பதாகத் தோன்றினால், கண் டாக்டரிடம் காட்ட வேண்டும். சரியானபடி சிகிச்சை செய்யாமல் போனால், ஐந்தாறு வயதாகும் பொழுது பார்வையில் ஊனம் ஏற்பட்டாலும் ஏற்படலாம்.

## கோணல் பார்வை

காலிபோர்னியாவில் பெவர்லிஹில்ஸ் என்ற இடத்தில் வெகு அழகான ஒரு பெண்குழந்தைக்குப் பார்வை மட்டும் ஒரே கோணலாயிருந்தது. கண் வைத்தியத்தில் தேர்ந்த கண் டாக்டர் ஒருவரிட ம் காட்டிய பொழுது, குழந்தைக்குக் கிட்டப் பார்வைக் கண்ணுடி தேவை என்று தெரிந்தது. உடையாத மூக்குக் கண்ணுடி ஒன்றைச் சிறுமிக்கு டாக்டர் போட்டு வைத்தார். இதனுல் பார்வையில் ரொம்பக் குணம் தெரிந்தது. என்ருலும், ஒரு கண்விழி சற்றுக் கோணலாகவே தோன்றியது. ஆபரேஷன் ஆனதும் கண் பார்வை முற்றும் நேராகி விட்டது. குழந்தையின் அழகைக் குலேத்த கண்கள் ஆபரேஷனுக்குப் பிறகு மிகவும் அழகிய கண்களாக விளங்கின.

## ஆண்டு தோறும் சோதனை !

குழந்தைக்கு மூன்று வயதானவுடன் வருஷந்தோறும் கண் டாக்டரிடம் குழந்தையின் கண்களைக் காட்டிப் பரிசோதிக்கச் செய்வது நல்லது. அது ஏன் அவசியம் என்பதற்குப் பின்வரும் அடையாளங்களைக் கொண்டு நாம் அறிந்து கொள்ளலாம்.

அடிக்கடி முகத்தைக் கடுத்துக் கொள்வது, புரியாமல் விழிப்பது, அரைக் கண்ணுல் மேலும் கீழும் பார்ப்பது, கையிலுள்ள புத்தகத்தையோ வேறு சாமானையோ ரொம்பவும் அருகிலாவது அல்லது தூரத்திலாவது வைத்துக் கொண்டு பார்ப்பது, (14 அல்லது 16அங்குல தூரத்தில் புத்தகத்தை வைத்துக் கொண்டுபடிப்பதுதான் சரி), பார்க்கும் பொழுது தலையைச் சாய்த்துக் கொள்வது, வெளிச்சம் தாங்காமல் கண் கூசுவது அல்லது மூடுவது, கண் சிவந்தோ அல்லது நீர் கசிந்து கொண்டோ இருப்பது, கண்சிவந்து இமைகள் தடித்துத் தோன்றுவது, அடிக்கடி தலைவலியால் சிரமப்படுவது, பள்ளிக்கூடப் பாடங்

களைக் குனிந்து எழுதும்பொழுது தலை கிறு கிறுத்து வயிற்றைக் குமட்டி வாந்தி எடுக்க முயல்வது, விளையாட்டுக்களில் மிகவும் பின்னணியில் இருப்பது, அடிக்கடி கால் தடுக்கி விழுவது போன்ற குறிகள் குழந்தைக்கு நல்ல கண்பார்வையில்லை என்பதைத் தெரிவிக்கும். ஒன்பது வயது வரையிலும் சில குழந்தைகளுக்குப் புத்தக எழுத்துகள் நன்ருகப் பார்வைக்கு விளங்காமலிருக்கலாம். பிறகு கண்ணுடி தேவையில்லாமலே அவர்கள் கூரிய பார்வை பெறுவதுமுண்டு.

## வாண வேடிக்கைகள்

வாணங்கள், வெடிகள் விஷயமாக எவ்வளவோ சட்ட திட்டங்கள் இருந்தபோதிலும், வருஷந்தோறும் பல்லாயிரக் கணக்கான குழந்தைகளுக்குக் குறையாமல் வெடிகள்மூலம் கண்ணுக்குத் தீங்கு நேர்கிறது. வெடிகள், கத்திரிக்கோல், கத்தி அம்பு போன்ற வஸ்துக்களைக் குழந்தை எடுக்கும்படி விடக்கூடாது. எடுத்தால் ஜாக்கிரதையாய் உபயோகிக்கும்படி பழக்கவேண்டும். பெண்களைக் காட்டிலும் பையன்கள்தான் அதிகமாகக் கண்ணைக் கெடுத்து கொள்ளுகிருர்கள். கண்ணின்மேல் பெரியவர்களோ பிற குழந்தைகளோ ஓங்கி அறை கொடுப்பதனுலும், சில சமயம் கண்ணுக்குத் தீங்கு ஏற்படுகிறது.

## டாக்டரிடம் உடனே போகவேண்டும்

குழந்தையின் கண்ணில் ஏதாவது பட்டுவிட்டாலும் அல்லது குத்திவிட்டாலும் நாமே ஏதாவது பரிகாரம் செய்து காலத்தைக் கடத்தக் கூடாது. உடனே டாக்டரிடம் கொண்டு போய்க் காட்ட வேண்டும். கண்ணில் ஏதாவது தூசி விழுந்தால் கண்ணை ஒன்றும் செய்யக் கூடாது. சிறிது நேரம் கண்ணை மூடிக்கொண்டிருந்தால் கண்ணீரே தூசியை அப்புறப்படுத்திவிடும். இமையோரத்தில் தூசி ஒதுங்கியவுடன், கையை அலம்பிக் கொண்டு சுத்தமான துணியை

எடுத்து அதை ஒத்தி எடுத்துவிடலாம்; அவசியமாயிருந்தால் டாக்டரிடம் போய்க் காட்டுவது நல்லது.

## வெளிச்சமும் கண்ணும் !

குழந்தை நல்ல வெளிச்சமுள்ள அறைகளில் படிக்க வேண்டும். படிக்கும் பொழுதும், எழுதும் பொழுதும் வெளிச்சம் நேர்எதிரே இராமல் சிறிது பின்புறம் இருப்பதே நல்லது. முகத்துக்கு நேரே வெயில் அடிக்கும் பொழுது குழந்தை படிக்கும்படி விடக்கூடாது. பள்ளிக்கூடப் பாடங்களை எழுதும் பொழுது குழந்தை சரியானபடி உட்கார்ந்து எழுதுகிறதா என்று கவனிக்க வேண்டும். அடிக்கடி கண்ணைக் கசக்கும்படி விடக்கூடாது. குழந்தை கண்ணாடி அணிந்திருந்தால் அதைச் சுத்தமாய்த் துடைத்து போட்டுக் கொள்ளும்படி பழக்க வேண்டும். கண்ணாடி பிரேம் வளையாமல் இருக்கிறதா என்று சில மாதங்களுக்கு ஒருமுறை பார்த்துச் சரிப்படுத்திக் கொள்வது நல்லது. பெரிய கண் வியாதிகள், பார்வைக் குறைவு இவைகளுக்கு ஆச்சரியமான சிகிச்சை முறைகளை இப்பொழுது கண்டு பிடித்து வருகிறார்கள். ஆயினும் கண் கெட்டபின் டாக்டரைத் தேடி ஓடுவதைவிட முன்பே ஜாக்கிரதையாக இருப்பது நலம் அல்லவா!

# 23

## குழந்தைகள் கவனம்!

வருஷந்தோறும் எதிர்பாராத விபத்துக்குள்ளாகி மடியும் பதினைந்து வயதுக்குட்பட்ட குழந்தைகள் கொஞ்ச நஞ்சமல்ல. இம் மாதிரி விபத்துக்களில் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் வீட்டிலேயே நேர்ந்து விடுகின்றன. முக்கிய மாய்ப் பெற்றோர்கள் இந்த விஷயத்தைக் கவனிக்க வேண்டும். அவர்கள்தான் இந்த விபத்துக்களைத் தடுப்பதற்கு ஏதாவது செய்ய முடியும். சரியானபடி நடந்துகொண்டால் பெரும்பாலான விபத்துக்கள் நேராமலே தடுத்து விடலாம்.

முதல் முதலில், வீட்டில் குழந்தைகள் நடமாடும் இடங்கள் தீங்கு விளைவிக்காதபடி இருக்கின்றனவா என்று பார்த்துக் கொள்ளலாம். வீட்டிலும் வெளியிலும்சாதாரண மாய் எப்படி ஆபத்துக்கள் நேரக்கூடும், அவற்றை எந்த விதம் தடுக்கலாம் என்ற விஷயங்களை இங்கே காணலாம்.

குழந்தை இருக்குமிடம் தீங்கு நேராத பத்திரமான இடமாயிருக்க வேண்டும் என்பது முக்கியம்தான். என்றாலும் குழந்தை சந்தோஷமாய் வளர வேண்டுமென்றால், பாதுகாப்பு மட்டும் போதாது. ஜன்னலுக்குத் தக்க பாது காப்புகள் இருந்தாலும், கத்திகளைக் குழந்தைகள் எடுக்காத படி பார்த்துக்கொண்டாலும் மட்டும் ஆபத்துக்கள் வராமல் தடுத்துவிட முடியாது. குழந்தைகளின் இயல் பறிந்து அவர்களைப் பழக்க வேண்டும்.

### படிப்படியாகப் பழக்கவேண்டும்

கீழே விழுந்து காயம்பட்டுக் கொள்ளாமலோ, கத்தியை எடுத்துக் கையை வெட்டிக்கொள்ளாமலோ இருப்பதற்குக்

குழந்தைக்குக் கற்றுக்கொடுக்க வேண்டியது முக்கியம்தான். என்றாலும் குழந்தை தானாகவே இந்த விஷயங்களைத் தெரிந்து கொள்வதும் அவசியமாகிறது. அவர்கள் எந்தக் காரியத்தையும் நம் கண்பார்வையில் தாங்களாகவே ஜாக்கிரதையாய்ச் செய்யும்படி விடவேண்டும். மாடிப்படியில் விழாமல் ஏறுவதற்கும், கத்தியை எடுத்தால் கையை நறுக்கிக்கொள்ளாமல் இருப்பதற்கும் கற்றுக் கொடுக்க வேண்டும். குழந்தை பயம் தெளிந்து தன்னம்பிக்கையுடன் இருக்கும்படி பழக்குவது நல்லது. குழந்தை மேல்படியின் நுனியின் காலை வைத்துக்கொண்டு நிற்பதைக் கண்டால் 'பார்த்து இறங்கு; விழுந்துவிடப் போகிறாய்' என்று கத்தாமல் இருப்பது கஷ்டம்தான். ஆயினும், அநாவசியமாய்ப் பயப்படுத்துவதும் குழந்தையின் தைரியத்தைக் குறைத்துவிடும். ஜாக்கிரதையாயிருக்கக் கற்றுக் கொடுப்பதற்குப் பதிலாய்க் குழந்தைக்குப் பயத்தைக் கற்பித்து விடக்கூடாது,

கீழே விழுவதோ அடிபட்டுக் கொள்வதோ போன்ற விபத்துக்கள் சில குழந்தைகளுக்கு எப்போது பார்த்தாலும் நேர்ந்து கொண்டே யிருக்கும். இந்தக் குழந்தைகள் சந்தோஷமில்லாமல் சோர்ந்த வண்ணமாய் இருக்கும். இது டாக்டர்கள் கவனிக்க வேண்டிய விஷயமென்று கருதுகிறார்கள். கீழே விழுவது, காயம்பட்டுக் கொள்வதுபோல் ஏதாவது விபத்து அடிக்கடி நம் குழந்தைக்கு நேர்ந்து கொண்டே இருந்தால், டாக்டரிடம் அதைப்பற்றிக் கூறி ஆலோசிக்க வேண்டும். எதனால் உடம்புக்கு வருகிறது என்பதைக் கவனித்து ஜாக்கிரதையாக இருப்பதுபோல, இதற்கும் மனக்கோளாறு காரணமா அல்லது உடம்புக் கோளாறு காரணமா என்பதைக் கண்டுபிடித்து அதைச் சரிபடுத்தவேண்டும்.

## எப்படிச் சமாளிப்பது?

கைக் குழந்தையா யிருப்பதிலிருந்து நன்றாய் ஓடியாடி விளையாடக்கூடிய வயது வரையிலும் குழந்தைகளுக்கு

ஒன்றும் நேராமல் நாம் பாதுகாப்பது அவசியம். சாதாரண மாய் என்ன என்ன விபத்துக்கள் நேரக்கூடும்; முன் ஜாக்கிரதையோடு அவற்றை எப்படித் தடுத்துச் சமாளிக்க லாம் என்ற விவரங்களைக் கீழே தருகிறோம்.

1. உட்கார்ந்து கொண்டிருக்கும் குழந்தை திடீரென்று தலை குப்புற விழுந்துவிடும். ஆகையால் குழந்தையைப் பெஞ்சிலோ, கட்டிலிலோ தனியாக உட்கார வைத்துவிட்டு, நாம் அப்புறம் போகக்கூடாது. குழந்தை படுத்துக் கொள்ளும் சிறு கட்டிலின் இரண்டு பக்கங்களையும் ஒரு போதும் கீழே இறக்காமல் தூக்கியே இருக்கும்படியும், தலையை நுழைத்துக் கொள்ளாதபடி சட்டங்கள் நெருக்க மாக இருக்கும்படியும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

2. எந்தச் சாமானையாவது தன் கையில் எடுத்தால் அது விழாமல் சமாளிக்கக் குழந்தைக்குத் தெரியாது. அதனால் சாமானைக் கைகால்களில் குழந்தை போட்டுக் கொள்ளும். இப்படி நேராமல் நாம் கவனமாகப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

3. குளிப்பாட்டும்போது, குழந்தையைத் தனியே ஸ்நானத் தொட்டியில் விட்டுவிட்டுச் செல்லக் கூடாது. ஜலத்தில் அமிழ்ந்து ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிடும். வெந் நீர் சரியான சூடாயிருக்கிறதா என்பதையும் முதலில் கவனிக்க வேண்டும்.

4. குழந்தை எதிலும் வாயை வைத்துக் கடிக்குமாத லால் ஸேஃப்டி பின் போன்ற சாமான்களைக் குழந்தையின் கைக்குக் கிட்டாமல் எட்டவே வைக்கவேண்டும். வீட்டில் 'ரிப்பேர்' நடந்து கொண்டிருந்தால், வர்ணம், வார்னீஷ் இவைகளில் குழந்தை வாயை வைத்து விடாதபடி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

### ஒரு வயதில் கவனிக்க வேண்டியவை!

1. குழந்தை தட்டுத் தடுமாறி நடந்து போய் எதையும் எடுக்கும் வயது இது. கையில் எடுத்தால் தீங்கு விளையக்

கூடிய சாமானைக் குழந்தை எடுத்துவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

2. குழந்தை இஷ்டம்போல் போகட்டும் என்று விட வேண்டும். ஆனால் கீழே விழாதபடி மெத்தைப்படி மேலும் கீழும் கதவு அமைத்துச் சார்த்தி வைப்பது நல்லது.

3 குழந்தை எதைக் கண்டாலும் வாயில் போட்டுக் கொண்டு விடுமாதலால், மருந்துகள், விஷ மருந்துப் புட்டிகள் இவைகளை அதன் கைக்கு எட்டாமல் வைக்க வேண்டும். ஊசி, பித்தான், காசு போன்றவைகளை அப்புறப் படுத்திவிட வேண்டும்.

4. மேசை மீதிருக்கும் துணி கீழே தொங்கும்படி விடக் கூடாது. அதன்மேல் என்ன இருக்கிறது என்று பார்க்கும் ஆவலில், குழந்தை துணியைப் பிடித்து இழுத்து விடும். சுடச்சுட காபியோ டீயோ மேஜைமேல் இருந்தால் குழந்தை மீது கொட்டிவிடும்.

## இரண்டு வயதில் கவனிக்க வேண்டியவை!

1. குழந்தைக்குக் கதவைத் திறப்பதற்கும் மூடுவ தற்கும் தெரிந்துவிடும். தனியே உள்ளே போய்க் கதவைச் சார்த்திக்கொண்டு பிறகு திறக்கத் தெரியாவிட்டால் ஆபத்து. அறைக் கதவையும் தெருக்கதவையும் மூடிப் பூட்டிவிடுங்கள்.

2. ஜன்னலின் மேலேறிக் குழந்தை கீழே விழுந்து விடும். ஜன்னலிலிருந்து விழாதபடி பாதுகாப்பு அமைக்க வேண்டும்.

3. தண்ணீரைக் கண்டால் அதில் அளையவேண்டும் என்று குழந்தைக்குத் தோன்றும். குளம் குட்டைக்கு அருகில் குழந்தையைத் தனியே விடலாகாது.

4. கண்ணாடிபோல் உடைந்து சிதறும் பொம்மைகளைக் குழந்தையின் கையில் கொடுக்கக்கூடாது. கத்தி, நெருப்புப்

பெட்டி, மின்சாரக் கருவி போன்ற சாமான்களை அதன் கைக்கு எட்டாதபடி வைக்கவேண்டும்.

### மூன்று வயதில் கவனிக்க வேண்டியவை!

1. குழந்தை மாடிப்படிமீது ஏறி இறங்கிய வண்ணமாய் இருக்கும். இரண்டு பக்கத்திலும் கைப்பிடிச்சுவர் நன்ருய் இருக்கவேண்டும். படிகளில் விளையாட்டுச் சாமான்கள் எவையும் இல்லாதிருப்பது நலம். படி மிக வழவழப்பாகவோ கிழிந்த நார்ப்பாய் விரித்ததாகவோ இருத்தலாகாது.

2. குழந்தை மற்றச் சிறு குழந்தைகளோடு விளையாடும். அது வைத்துக்கொண்டிருக்கும் ரெயில், எஞ்சின் போன்ற விளையாட்டுக் கருவிகளின் ஆணியோ, கம்பியோ கிளம்பிக் குத்தும்படி இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

3. இந்த வயதில் குழந்தைக்கே சிறிது பயம் தெரிந்திருக்கும். வழியில் ஏதாவது சாமான் கிடந்தால் அதன்மீது தடுக்கி விழுந்துவிடுவோம் என்று அதுவே ஜாக்கிரதையாக இருக்கும். ஆயினும், அடுப்பின் அருகே அது போகாமலோ, கதவின் இடுக்கில் அதன் கை அகப்பட்டுக் கொள்ளாமலோ பார்த்துக்கொள்ள வேண்டும்.

4. விஷ மருந்துப் புட்டிகளை அதன் கைக்கு எட்டாத இடத்தில் வைக்கவேண்டும். வீட்டில் கைத்துப்பாக்கி இருந்தால் அதில் மருந்துபோட்டுக் கெட்டித்து வைக்காமல் இருப்பதுடன், குழந்தை கண்ணில் படாமல் உள்ளே ஜாக்கிரதையாகப் பூட்டி வைக்கவேண்டும்.

### நான்காவது வயதுக்குமேல்:

1. குழந்தை மூன்று சக்கர சைக்கிள் வண்டியில் ஏறி விடத் தெரிந்ததாக இருக்கும். ஓரமாக இருக்கும் நடை

பாதையில் சைக்கிளேவிட அதற்குக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

2. குழந்தை பந்தை எறிந்து விளேயாடத் தொடங்கும். அப்படி விளேயாடுவதற்கு விளேயாட்டு மைதானமாக இருந்தால் கவலே இல்லே. பந்தை எறிந்துவிட்டு அதைப் பிடிப்பதற்காகத் தெருவில் குழந்தை ஓடிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

3. குழந்தை மரமேறி விளேயாடிஞல் கால்களே நன்ருய் ஊன்றிக்கொண்டு கையிஞல் அழுத்தமாகப் பற்றிக் கொள்வதற்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். போட்டிருக்கும் சட்டை துணிகளிஞல் தொந்தரவில்லாமல் இருக்கிறதா என்பதையும் கவனித்துக்கொள்ள வேண்டும்.

4. சிறு கைரம்பத்தை வைத்துக்கொண்டு மரத் துண்டுகளே அறுக்கக் குழந்தை கற்றுக்கொள்ள முடியும் மற்றக் கருவிகளேயும் பத்திரமாய் உபயோகிக்க அறிந்து கொள்ளும். வீட்டுக்குள்ளே பத்திரமாய் நடமாடத் தெரிந்துகொள்ளும்.

# 24

## குழந்தையும் தாயும்!

குழந்தைகளை எப்படி வளர்ப்பது? இதைப்பற்றி இக் காலத்திலே பல நல்ல புத்தகங்கள் வெளி வருகின்றன. குழந்தைகளின் மனப்போக்கை அறியவேண்டும்; அதற் கேற்றபடி அவற்றை முறைப்படுத்தித் திருப்பிவிட வேண்டும். அந்த முறையில் பயிற்சியளித்தால் குழந்தையும் ஆர்வத்துடன் கற்கும்; சிறப்பாக அறிவுள்ளதாக வளரும். அதனால் அதுவும் உயரும், அந்தச் சமூகத்துக்கும் நன்மை உண்டு. இது பொதுவான முடிவு. இந்த முடிபை எல்லாக் குழந்தைகளும் பற்றிய வளர்ப்பு முறைக்கு அடிப்படை யாகக் கொள்ளவேண்டும்.

இந்த வளர்ப்பு முறையில் உண்டாகும் பல சிக்கல்களை யும் அந்த நூல்கள் விரிவாக எடுத்துக் கூறுகின்றன. குழந்தை பிறந்த குடும்பத்தின் சூழ்நிலை; அந்தக் குடும்பம் இருக்கும் பகுதியின் சுற்றுப்புறச் சூழ்நிலை; அது கல்வி கற்கும் கல்விச் சாலையின் சூழ்நிலை; அது கற்கும் நூல்கள்; பார்க்கும் படங்கள்; பழகும் நண்பர்கள் இவை எல்லாம் ஒன்றாகச் சேர்ந்தே ஒரு குழந்தையின் மனநிலையை உருவாக்குகின்றன.

இவை எல்லாமே முறையாக அமைந்துவிடுவதென்பது எந்த நாளிலும் நடக்கக்கூடியதாக இல்லை. ஒன்று சரியாக இருந்து, ஒன்று சரியாக இல்லாவிட்டாலும் அதனால் பயனில்லை. நன்மையைவிடத் தீமைக்குத்தான் கவர்ச்சி அதிகம். தீய எண்ணங்களே சீக்கிரம் குழந்தையைக் கவரும்; தன்னோடு ஐக்கியப்படுத்தியும் கொள்ளும்.

பொதுவுடைமைச் சமுதாய அமைப்பிலே இந்தச் சூழ்நிலைகளை ஒருவாறு முறைப்படுத்த முடியும். பிற அமைப்புக்களில் முறைப்படுத்துவது என்பது கடினமான காரியம்.

தாயின் கர்ப்ப காலத்திலிருந்தே குழந்தையைப் பற்றிய கவனத்தை மேற்கொள்ள வேண்டும் என்பதுதான் அறிஞர்களின் கருத்து. அந்தக் காலத்திலே அவள் மனத்தில் படியும் எண்ணங்கள், அவள் கொள்ளும் உணர்ச்சி வேகங்கள் குழந்தைக்கும் படிந்துவிடுகின்றன; குழந்தையைப் பாதிக்கின்றன.

குழந்தை வளர்ப்பின் இந்த அடிப்படை நிலையையே பல குடும்பங்களால் சரிவரக் கவனிக்க முடியாமல் போகலாம். வறுமையும் வாழ்க்கைப் போராட்டமும் நிரம்பிய நடுத்தரக் குடும்பங்களில் இது மிகவும் சகஜம். தாயைச் சரிவரப் பேணிக் காப்பதோ, மருத்துவ வசதிகள், போஷாக்கு வசதிகள் செய்து தருவதோ அவர்கட்குச் சற்றும் சாத்தியமில்லை. எல்லாம் 'கடவுள் விட்ட வழி என்று பேசாமல் இருந்துவிடுகின்றனர்கள். அவர்களால் அதற்குமேல் எதையும் செய்யவும் இயலாது. அந்த வசதியோ வாய்ப்போ அவர்கட்குக் கிடையவும் கிடையாது. இதனால் சதா தொல்லைகளும், மனக் குமுறல்களும் அங்கே தொடர்ந்து நிகழ்ந்து வரும். இதை மாற்ற நம் நாட்டில் எந்த ஏற்பாடும் இதுவரை முறையாகச் செய்யப்படவில்லை. பேசுவதும் எழுதுவதும் படிப்பதும் என்பதோடு தாய்மைப் பராமரிப்பு என்பது செயலளவில் பகற்கனவாகவே போய் வருகிறது.

என்றாலும், செலவுகளோ தொல்லைகளோ அதிகம் இல்லாமல் செய்யக்கூடிய மிகச் சாதாரண வசதிகளையாவது தாய்க்குக் கட்டாயமாகச் செய்து தரவேண்டும். ஒரு சில மாதங்கள் தாயை முறையாகப் பராமரிப்பது, பின் பல ஆண்டுகள் குழந்தை வளர்ப்போடு போராடாமல் இருப்பதற்குப் பெரிதும் உதவும். இந்த எண்ணம் எல்லோருக்கும் உண்டாக வேண்டும்.

தாய்க்கு மனக்கவலேயோ, மலச்சிக்கலோ, ஊட்டக் குறைவோ மற்றும் சில்லறைத் தொந்தரவுகளோ இல்லா மலாவது பார்த்துக் கொள்ளலாம். அருகிலிருக்கும் தாய் சேய் நலவிடுதியில் அடிக்கடி சென்று சோதித்துக் கொள்ள லாம். மனக்கவலே உண்டாகாமல் இருக்க மற்றவர்கள் மனங்கலந்து உதவலாம்.

இதனுல்தான், நம் நாட்டில் பிரசவத்திற்குத் தாய் வீட்டுக்குப் பெண் போவது என்று ஒரு வழக்கம் இருக்கிறது. எவ்வளவு சிரமப்படும் தாயாயிருந்தாலும், தன் மகள் மகவைப் பெற்று நலமாக இருக்கவேண்டும் என்று கட்டாயம் பாடுபடுவாள். அவள், தன் வசதிகளேக் குறைத் துக் கொண்டாவது தான் பெற்ற மகளுக்கு வேண்டியதை எல்லாம் தவருவல் செய்வாள். மேலும், அவள் பல குழந்தைகளேப்பெற்றவளாகவும் இருப்பாளாதலால், அவள் தன் மகளின் உடல்நிலேயறிந்து, மனநிலேதெரிந்து உதவி செய்வாள். இது மிக அநுபவபூர்வமான உண்மையாகும்.

தாய்மார்களின் இந்த அநுபவங்கள் தற்கால நாகரிக வாழ்வில் குறைந்துவிட்டன. நாட்டுப்புற மருத்துவச்சிகளும் ஒதுங்கிவிட்டார்கள். அந்த இடத்தை நிரப்பவே, மகப் பேறு மனேகள் வந்துள்ளன. அங்குள்ள டாக்டர்களும் தாதியரும் உதவுகின்றனர். காலமாறுதலும் மன மாறு தலும் இப்படிப் பொறுப்பையும் கடமைகளேயும் அரசாங் கத்துக்கும் நகரசபைகளுக்கும் மாற்றிவிட்டிருக்கின்றன.

ஊருக்கு ஒன்றிரண்டு மருத்துவச்சிகளும், அநுபவ மிகுந்த தாய்மார்களும் பாட்டிமார்களும் இருந்த நிலேமை இப்போது இல்லே. அவர்களுக்கு ஈடாகத் தோன்றியுள்ள மருத்துவவிடுதிகளோ, நகர்ப்புறங்களிலும் பேரூர்களிலுமே உள்ளன. கிராமங்களில் காணவே முடியவில்லே. இது நம் நாட்டின் இன்றைய அவல நிலேமை.

பிறக்கும் குழந்தை ஒவ்வொன்றும் வளர்ந்து, வருங் காலப் பிரஜையாக விளங்கப்போகிருன் என்பதை எவருமே நினைப்பதில்லை. அந்தக் குழந்தைகள் நலத்துக்குத் தாயைப் பராமரிப்பது மிகவும்அவசியம் என்பதையும் எவரும் அறிந்த தாகத் தெரியவில்லை. பெரும்பாலும், மகப்பேறு மருத்துவ மனைகளிலுள்ளவர்கள் 'எப்படியாவது தாயையும் குழந்தை யையும் தனியாக்கி விட்டாலே போதும்; அத்துடன் நம் கடமை முடிந்துவிட்டது;' என்ற நிலையிலேதான் இக் காலத்தில் செயல்படுகிருர்கள்.

## தாயும் கோயிலும்

'தாயில் சிறந்த கோயிலும் இல்லை' என்று வாயாரப் போற்றுவார்கள் பலர். ஆனல், தாய்மையைப் பேணுவது பற்றி மட்டும் கவலைப்படவே மாட்டார்கள். கவலைப்பட வேண்டும் என்ற எண்ணம் தற்காலத்தில் ஏற்பட்டிருப்பதே மிகப் பெரிய காரியம்!

பொதுவாகக்—

கர்ப்பிணிக்கு நல்ல சத்துணவு அவசியம் தரவேண்டும். அவள் உடல் வருந்துமாறு கடினமான வேலைகளைச் செய்ய விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மலச்சிக்கல் இல்லாமலும் நன்ருகச் சிறுநீர் கழியுமாறும் வேண்டிய பக்குவங்களைச் செய்து தரவேண்டும்.

## தூய்மை வேண்டும்!

அவள் உடைகள் சுத்தமாக இருக்கவேண்டும். அவள் இருக்கும் அறையும் படுக்கும் படுக்கையும் மிகத் தூய்மை யாக இருக்கவேண்டும். இல்லையானல், தொத்து நோய்கள் ஏற்படக்கூடும். அவள் அறையில் தூய காற்றும் நல்ல வெளிச்சமும் இருக்கவேண்டும். அளவுக்கு மீறிய உஷ்ணமோ, அளவுக்கு மீறிய சீதளமோ இருக்கவே கூடாது.

நாள்தோறும் வெதுவெதுப்பான நீரில் அவளைக் குளிப்பாட்ட வேண்டும். கூந்தலை நன்ருகத் துவட்டிச் சாம்பிராணிப் புகை போடவேண்டும். அவள் இருக்கும் அறையிலும் சாம்பிராணிப் புகை, ஒருநாளைக்குக் காலை மாலை இருவேளையாவது போடவேண்டும்.

அவள் பயன்படுத்தும் பாத்திரங்கள் குவளைகள் தட்டுகள் எல்லாம் எப்போதும் சுத்தமாக இருக்கவேண்டும். ஈ மொய்த்த பண்டங்களையோ. அல்லது ஆறிக் குளிர்ந்த உணவுப் பொருள்களையோ அவளுக்குத் தரவே கூடாது.

## மாறும் உடல்நிலை!

அவள் உடல்நிலை ஒவ்வொரு மாதமும் மாறிக் கொண்டே வரும். அந்த மாறுதல்கள் கருவின் வளர்ச்சியால் உண்டாவது. இதைக் கவனித்து வேண்டிய உதவிகளை அன்போடு அவ்வப்போது தவருமல் செய்து வர வேண்டும்.

வாந்தி மயக்கம் போன்றவைகள் அடிக்கடி வரலாம், நல்ல டாக்டரிடம் காட்டித் தகுந்த மருந்துகள் வாங்கித் தரவேண்டும். உடலில் ஏதாவது சத்துக் குறைவுகள் இருக்கலாம். பெரும்பாலும் சுண்ணும்புச் சத்தும், இரும்புச் சத்தும் குறையலாம். இரத்த சோகை உண்டாவதும் இயல்பு. இவற்றை எல்லாம் அவ்வப்போது கவனித்து நிவர்த்திக்க வேண்டும்.

## சுமையா? பெருமையா?

'தாய்மை என்பது ஒரு பெரிய சுமை' என்று தற்காலப் பெண்களிற் சிலர் நினைக்கத் தொடங்கி யிருக்கிருர்கள். இந்த அடிப்படை எண்ணமே மிகவும் தவருனது. 'இன்பத்தை மட்டும் அநுபவிக்க வேண்டும்; தாய்மை வேண்டாம் என்பது' சில புதுமைப் பெண்களின் மனப்போக்காக இருக்கிறது. இது சமுதாயத்தின், நாட்டின் வருங்காலத்திற்கே தீமைதரும் ஒரு பொருந்தாத மனப்போக்கு ஆகும்.

தாய்மை என்பது பெறுதற்கரிய செல்வம். அதைத் தானும் பெற்றது பெரிய பாக்கியம். தன் குழந்தை தனக்கும் தன் குடும்பத்திற்கும் சீரையும் சிறப்பையும் தரப் போகிறது. இப்படிப்பட்ட உயர்ந்த சிறந்த எண்ணங்கள் தாயின் மனத்தில் ஆழமாகப் பதியவேண்டும். இந்த எண்ணத்தைப் பதியவைக்க நல்ல வரலாறுகளை அவர்களுக்கு நாள்தோறும் சொல்லவேண்டும். நல்ல கதைகளைப் படிக்கும்படியும் செய்யவேண்டும்.

## அவனைப்போல என் மகன்!

இராமபிரானைப் பற்றிப் படிக்கும்போது அப்படிப்பட்ட ஒரு பிள்ளையாகத் தன் மகனும் விளங்குவான் என்று தாய் மனம் கனவு காணும்!

காந்தியடிகளைப் பற்றிப் படிக்கும்போது அவரைப் போலத் தன் மகனும் புகழ்பெறுவான் என்று தாய் மனம் எண்ணும்!

நேதாஜியைப் பற்றிப் படித்தால், தன் மகனும் அவரைப்போலிருப்பான் என்று அவள் நினைப்பாள்!

சிவாஜி, அல்லிராணி, அசோகர், அக்பர், கர்ணன், தர்மர், அர்ச்சுனன், பரதன், இப்படிச் சிறந்தவர்களின் வரலாறுகளை அவள் படித்து மனத்தில் கொள்வது நல்லது.

மிகச் சிறந்த புகழ்பெற்ற பலரின் வரலாறுகளைப் படித்தால் ஓர் உண்மை நமக்கே விளங்கும்.

## தாய்தந்த வீரர்கள்!

அது, தாய்மார் கருவுற்றிருந்தபோது எந்தவகையான கதைகளிலும் பொழுதுபோக்குகளிலும் மனஞ் செலுத்தினார்களோ, அப்படியே அவர்கள் குழந்தைகளும் பிற்காலத்தில் விளங்கினார்கள் என்பதுதான்.

'தன் மகன் பெரு வீரனாக இருப்பான்; தன் மகன் சிறந்த அறிஞனாக விளங்குவான்; தன் மகன் உயர்ந்த

விஞ்ஞானியாக அமைவான்; தன் மகன் கலைகளிற் சிறந்து திகழ்வான்; தன் மகன் வளமாக வாழ்வான்; இப்படிப்பட்ட எண்ணங்கள் தாயுள்ளத்தில் நிலைபெற வேண்டும்.

இந்த எண்ணங்கள் மகா சக்திவாய்ந்தவை. இவை பிறக்கும் குழந்தைகளை அவ்வாறே உருவாக்கும் வலிமை பெற்றவை. மனோதத்துவ ரீதியான பெரிய உண்மை இது!

கர்ப்பிணியின் அறையில் உயர்ந்த ஆடவர் மகளிரின் படங்கள் இருப்பதும் இந்த எண்ணங்களைத் தூண்டுவதாக அமையும்.

### உருவும் மாறும்!

எண்ணங்கள் குழந்தைகளின் இயல்பை மட்டும் உருவாக்குகின்றன என்பதில்லை. அவை பல சமயங்களில் அவற்றின் உருவத் தோற்றத்தையும் உடல் அமைப்பையும் கூட உருவாக்கும் சக்தி படைத்தவையாக இருக்கின்றன என்று அறிஞர்கள் நிரூபித்திருக்கிறார்கள்.

ஒரு இளம்பெண் கருவுற்றிருந்தாள். அவள் கணவன் ஒரு நிலையத்தில் வேலை செய்துவந்தான். காலையில் பத்து மணிக்கு அவன் வேலைக்குப் போய்விடுவான். இரவு எட்டு மணிக்குத்தான் திரும்புவான். அவள் தனியாகவே இருக்க வேண்டியதிருந்தது.

வீட்டில் ரேடியோ இருந்தது. பல கதைப் புத்தகங்கள் பத்திரிகைகள் இருந்தன. பக்கத்து வீட்டுப் பாட்டி அடிக்கடி வந்து போரடித்துக் கொண்டிருந்தாள். இவை களால் அவளுக்குப் பகற்பொழுது எப்படியோ கழிந்து வந்தது.

### இனிய பாடகன்!

ஒருநாள் தெருவில் இனிமையாகப் பாடியபடியே ஒருவன் வந்தான். அவன் குரலின் இனிமை அவள்

உள்ளத்தைக் கவர்ந்தது. அவள் இசைநுட்பம் தெரிந்தவளாதலால், அவன் பாடிய பாட்டை மிகவும் விரும்பினுள். அவன், இவள் வீட்டு வாயிலருகில் வந்ததும்—

"தாயே! அன்னபூரணி! இந்த ஏழையின் பசிக்கு ஏதாவது பிச்சை போடுங்கள் அம்மா" என்று மிகவும் உருக்கமாகக் கேட்டான்.

அவள் ஒரு தட்டில் சாதத்தை எடுத்துக்கொண்டு வாயிற் பக்கம் விரைந்து சென்ருள். அவன் கையிலிருந்த சட்டியில் அதைக் கொட்டினுள். அவன் அப்போதுதான் தன் தலையை நிமிர்ந்தான்.

### குருடனைக் கண்டாள்!

அவள் உள்ளம் பகீர் என்றது. அவனுக்குக் கண்களே இல்லை. அவன் முழுக் குருடு!

"மகாராசியா இரு அம்மா!" என்று அவன் அவளை வாழ்த்தினுன். அதன்பின், பாடியபடியே அடுத்த வீட்டை நோக்கி நடந்தான்.

அவன் முகத்தை அவளால் மறக்கவே முடியவில்லை. எந்தப் பாட்டை, எங்கே எப்போது கேட்டாலும், அவள் மனத்திரையில் அவன் முகம் அப்படியே தோன்றத் தொடங்கியது. அதை அவள் மறக்க முயன்ருள். மறக்க முயலமுயல அது அடிக்கடி தோன்றத் தொடங்கியது.

### கணவனும் வருந்தினுன்!

தன் கணவனிடம் அவள் இதைச் சொல்லி மிகவும் கவலைப்பட்டாள். அவன் படித்தவன்! அவள் கவலையைப் புரிந்து கொண்டான். அவளைச் சினிமாவுக்கும் பீச்சுக்கும் அழைத்துச் சென்ருன். அவளோடு கூடவே வந்து இருக்குமாறு தன் தாயையும் அழைத்து வந்தான். எதுவும் அவளை மாற்றவில்லை.

ஒருநாள் தற்செயலாக இவனைச் சந்தித்த போது,அவன் தன் கவலையைச் சொன்னான். நான் சிரித்தேன்.

"பைத்தியமே! அவன் உண்மையில் குருடனே அல்லன். அவன் பிச்சை கிடைப்பதற்காக இப்படி முகத்தைக் கோர மாக்கி வருகிறவன். அவன் பெயர் வேணு என்பது. அவனை நாம் நாளைக் காலையில் பிடித்து வந்து உன் மனைவிக்குக் காட்டலாம்' என்றேன்.

## குருடன்—குருடன் அல்ல!

மறுநாள் காலையில், அவனும் நானும் வேணுவின் குடிசைக்குப் போனோம். அவனைக் கண்டுபேசிச் செய்தியைச் சொன்னோம். அவனையும் அழைத்துக் கொண்டு நண்பன் வீட்டுக்கும் போனோம்.

முதலில் நாங்கள் உள்ளே போய்விட்டோம். அவன் சற்றுப் பின்தங்கி நின்று, முன் பாடிய அதே பாட்டைப் பாடிமபடியே வந்தான். அவள், அந்தப் பாட்டைக் கேட்ட தும் பரபரப்படைந்தாள். தட்டில் சிறிது சாதத்தை எடுத்துக் கொண்டு வாயிற்புறம் விரைந்து சென்றாள்.

'அம்மா! தாயே அன்னபூரணி!' என்றான் அவன், வழக்கம் போல.

அவன் முகம் தெளிவாக அழகாக இருந்தது!

'நீ குருடன் இல்லையா?' என்றாள் அவள்.

## நான் குருடன் இல்லை!

நான் குருடன் இல்லை அம்மா! வறுமை, வயிற்றுப்பசி! இப்படிப் போனால் யாரும் எதுவும் தரமாட்டார்கள். அதனால்தான் குருடனைப் போல முகத்தை மாற்றிக் கொண்டு போகிறேன். அப்போதுதான் இரக்கப்பட்டு ஏதாவது போடுவார்கள். உங்கள் மனத்தையும் கவலைப்படச்

செய்துவிட்டேன். மிகவும் வருந்துகின்றேன் என்ருன் அவன்.

நாங்கள் அப்போது வாசலுக்கு விரைந்தோம்.

"பார்த்தாயா பத்மா! அவன் முகம் எவ்வளவு தெளிவாக இருக்கிறது பார். இனி உன் குழப்பத்தை மறந்துவிடு" என்ருன் அவள் கணவன், தன் மனேவியிடம் சென்று. அன்றுடன் அவள் கவலேயும் குழப்பமும் தீர்ந்தன. அவள் நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டாள். 'அவன் குருடன் இல்லேயா?' என்ருள்.

## அந்தக் குழந்தை முகம்!

வேணுவுக்கு நண்பனின் ஆபீசிலே ஒரு அட்டெண்டர் வேலேயும் கிடைத்துவிட்டது. நாட்களும் கடந்தன. பத்மாவுக்குக் குழந்தையும் பிறந்தது. அந்தக் குழந்தையின் முகபாவம்...

நண்பனேப் போலவும் இல்லே...

அவன் மனேவியைப் போலவும் இல்லே...

வேணுவின் சாயல் அதனிடம் தெளிவாக இருந்தது...

ஆனல், பண்பட்ட, விஷயம் தெரிந்த குடும்பமாதலால், குழப்பம் உண்டாகவில்லே. உண்மையான இந்தச் சம்பவம் தாயின் எண்ணம் குழந்தையின் உடலேப் பாதிப்பதை விளக்கும்

## பக்கத்துப் வீட்டுப் பெண்!

தன் கணவன் பக்கத்து வீட்டுப் பெண்ணிடம் சிரித்துப் பேசியதனுல் ஆத்திரங் கொண்டாள் ஒருத்தி. அவள் கர்ப்பிணி. அந்தப் பக்கத்து வீட்டுப் பெண்ணின் உருவம் அவள் மனத்தில் நிலேத்து விட்டது. அவளுக்குப் பிறந்தது! பெண் குழந்தை. அது—

சாயலில் தாயைப் போலப் பிறக்க வில்லை. பக்கத்து வீட்டுப் பெண்ணைப் போலவே மூக்கும் விழியுமாய் பிறந்தது. அது மட்டும் அல்ல, அவளைப்போலவே நெற்றியில் ஒரு மச்சமும் அதே இடத்தில் அப்படியே இருந்தது.

தாயின் பராமரிப்பும், அவள் எண்ணங்களின் உயர்வும் எவ்வளவு முதன்மை என்று இதனுல் தெரிகிறதல்லவா?

உயர்ந்த விஷயங்கள், சிறந்த வரலாறுகள், அழகிய காட்சிகள் இவையே அவளிடம் அவள் மனத்தில் நிரம்பி யிருக்குமாறு செய்யவேண்டியது மிகவும் முதன்மையான தாகும்.

## கிராமப்புறப் பழக்கம்!

கிராமங்களில் இன்றும் என்றும் ஒரு மரபு இருந்து வருகின்றது.

வெள்ளாடுகள் நாய்கள் சேர்க்கையின்போது அவற்றின் பார்வையிற் படும்படி கலப்பு வர்ணப் பொருள்களை போடு வார்கள். பச்சைக் கொம்புகளை இடையிடையே தோலை உரித்துப் போட்டு வைப்பார்கள். தொழுவச் சுவர்களில் சிவப்பும் வெள்ளையுமாகப் பட்டை தீட்டி வைப்பார்கள். இவற்ருல் பிறக்கும் குட்டிகள் பலவகை நிறங்களில் பிறக் கின்றன என்று அவர்கள் அநுபவத்தில் அறிந்திருக் கிருர்கள்.

இந்த அநுபவம் மனிதசாதிக்கும் பொருந்தும். இதை மனோதத்துவ அறிஞர்கள் பலரும் உண்மை என்றே உறுதி செய்திருக்கிருர்கள்.

இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையோடு இருப்பது குடும்பங்களின் கடமை மட்டுமல்ல, இது ஒரு தேசியக் கடமை என்பதையும் எல்லாரும் அறிதல் வேண்டும்.

## 25

# நாவலும் குழந்தையும்

### அறிவியல் யுகம்

அறிவியலில் வளர்ச்சி பெற்ற காலம் இந்த நூற்றாண்டு. எதையும் ஆராயாமல் நம்பக்கூடாது. இந்தப் புதிய தத்துவம் வலுப்பெற்றிருக்கும் காலம் இது. இந்தத் தத்துவம் எந்திர சாதனங்களின் தோற்றத்தால் மேலும் வலிமை அடைந்து வருகிறது. பழைய காலத்து நம்பிக்கைகள் பலவும் சிதறிப் போயின. ஆராய்ச்சிக் கூடத்துக்கு ஒரு தனி மதிப்பும் உண்டாகிவிட்டது. என்றாலும், இந்த நாளிலும், பகுத்தறிவு இயக்கம் எங்கும் பரவியுள்ள இந்த நாளிலும், பெரிய தீர்க்க தரிசியாகவும் திரிகால ஞானியாகவும் ஒருவர் திகழ்ந்தார்.

தாம் பிறந்த பிரிட்டனில் மட்டுமல்லாமல், அந்தக் காலத்து ஐரோப்பிய ஆசிய அமெரிக்கக் கண்டங்களிலுள்ள பல நாடுகளிலும் இவர் புகழ் பரவியது. மாமன்னர்களும் அரசியல் தலைவர்களும், ஆட்சித் தலைவர்களும், தொழில் அதிபர்களும், இவருடைய ஆலோசனையை கேட்டார்கள். பிரிட்டிஷ் மாமன்னரான ஏழாவது எட்வர்டும், ரஷியப் பேரரசரான சாரும், ஜெர்மனின் கெய்சரும், பெர்சிய மன்னரும், மற்றும் மன்னர் பலரும் இவருடைய கணிப்புக்கு மதிப்புத் தந்தனர். இவருக்குப் பல பரிசுகளும் மரியாதைகளும் தந்து போற்றினார்கள்.

### அவதார புருஷர்

இத்தகைய புகழோடு, சர்வ சக்தி வாய்ந்த ஒரு நிர்ண யித்த திட்டப் படிதான் உலகமும், அதன் உறுப்பான

மனிதனும் இயங்கிவருவதை அறிவுலகுக்கு உணர்த்தியவர் இவர். இவ்வகையில், பகுத்தறிவு என்னும் பொருளியல் வாத மாயையில் சிக்கிய உலகத்தில், மீண்டும் ஆதியான மகாசக்தி பற்றிய தெளிவை உண்டாக்கிய 'அவதார புருஷர்' என்றும் இவரைக் கூறலாம்.

இவர் யார்? உங்களுக்கே இப்போது விளங்கியிருக்க லாம்! இவர்தான் சீரோ என்னும் ஞானமகா புருஷர்; திரிகாலஞானி; ரேகை சாத்திரப் பிதா.

## உண்மைச் சம்பவம்

இவர் பிரிட்டனில் புகழோடு வாழ்ந்து வந்தபோது நிகழந்த ஓர் உண்மையான சம்பவம் இது. இந்தச் சம்பவத்தைப் பற்றி இவரே தம்முடைய அநுபவங்களில் கூறியிருக்கின்ருர்.

கருப்பம் தரித்திருக்கும் பெண்களின் மன நிலே தெளிவாக இருக்கவேண்டும். அதில் ஏற்படும் மாற்றமும் எண்ணங்களும் எவ்வாறு பிறக்கும் குழந்தையையும் விபரீத மாக உருவாக்கி விடுகின்றன என்பதற்கு ஒரு நல்ல உதாரணம் இந்த வரலாறு. அதை நாமும் அறிந்து கொள்ளலாம்!

## தபாலில் வந்த கடிதம்

ஒரு நாள் மாலேயில் சீரோ தம்முடைய அலுவலகத்தில் இருந்தார். அன்று தமக்கு வந்த தபால்களேப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தார்.

அவருடைய தீர்க்க தரிசனத்தைப் பாராட்டி வந்தவை சில; அவை அந்தத் தீர்க்க தரிசனங்கள் உண்மையாயின செய்தியைத் தெரிவிக்கும் கடிதங்களாக இருந்தன.

தம் பிரச்சினேகளேக் குறிப்பிட்டு, அவற்றுக்கு அவருடைய ஆலோசனேகளேக் கேட்டு எழுதிய அவருடைய பக்தர்களின் கடிதங்கள் சில.

'அவரை எப்போது சந்திக்கலாம்?' என்று, அவரை நேரில் சந்தித்து, அவருடைய ஆலோசனையை நேரிற் கேட்க விரும்பிப் புதியவர்கள் எழுதிய கடிதங்கள் சில இருந்தன.

எல்லாவற்றையும் அமைதியாகச் சீரோ படித்து முடித்தார்.

சிலவற்றிற்குப் பதில்களையும் எழுதினார். மீண்டும் மேசையைச் சீரோ நோக்கினார்.

ஒரே ஒரு கடிதம் மட்டும் திறக்கப் படாமல் இருந்தது. அதைக் கடைசியாகப் படிக்கலாம் என்று அவர்தான் விட்டு வைத்திருந்தார். அதை எடுத்து மெல்லத் திறந்தார். அந்தக் கவரினுள்ளே ஒரு கடிதமும், ஒரு இளைஞனின் கைரேகைப் பதிவும் இருந்தன.

## பாதிரியார் வேண்டுகோள்

பாதிரியார் ஒருவர் அந்தக் கடிதத்தை மிகவும் உருக்கமாக எழுதியிருந்தார்:

"அன்புள்ள சீரோ,

"உங்களைப் பற்றி நான் நிரம்பவும் கேள்விப் பட்டிருக்கிறேன். உங்கள் தீர்க்க தரிசனங்கள் உண்மை யானவை என்று நண்பர்கள் பலரும் என்னிடம் சொல்லுகின்றார்கள்.

"இத்துடன் ஓர் இளைஞனின் கைரேகைப் பதிவை இணைத்துள்ளேன். அதனை நன்றாகப் பாருங்கள். அவனுடைய வருங்காலம் பற்றி ஏதாவது சொன்னீர் களானால் நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். அது அவனுக்கும் உதவியாக இருக்கும்.

"நீங்கள் ஆலோசனைக்காக வாங்கும் கட்டணத் தொகையை நான் கேள்விப்பட்டேன். அவ்வளவு

தொகை செலுத்த முடியாத நிலையில் இருப்பவன் நான். ஆகவே, என் நிலைமை கருதியும், அந்த இளைஞனின் வருங்காலத்தை நினைத்தும், ஓர் உபகாரமாக இந்த ஆலோசனையைத் தந்து உதவுமாறு உங்களை மிகவும் விரும்பி வேண்டுகின்றேன்.

"தங்களின் இந்த உதவியை என்றும் மறவேன்.

இப்படிக்கு .........

## இரக்கமும் வேதனையும்

கடிதத்தைப் படித்ததும் சீரோவின் உள்ளத்தில் இரக்கம் உண்டாயிற்று. அந்தக் கைரேகைப் பதிவைப் பார்த்தார். மிகக் கூர்மையாகப் பார்த்தார்! ஒரு முறைக்குப் பலமுறை உற்றுக் கவனித்துப் பார்த்தார். அவர் உள்ளம் இப்போது வேதனைப் பட்டது. கண்ணை மூடியபடியே ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்தார்.

அவர் மனக்காட்சியில் அந்த இளைஞனைப் பற்றிய காட்சிகள் எல்லாம், அவர் முதலிற்கொண்ட முடிவையே காட்டின. இறுதியில், மிகவும் மனச் சோர்வுடன் ஒரு கடிதத்தை எடுத்து எழுதினுர்:

"அன்புள்ள பாதிரியார் அவர்களுக்கு,"

"தங்களின் கடிதமும் கைரேகைப் பதிவும் முறையே கிடைத்தன. அந்த ரேகைப்பதிவை நான் மிகவும் கவனமாக ஆராய்ந்தேன்.

"அந்த ரேகைக்கு உரியவன் ஒரு சாமார்த்திய மான திருடனுகவும், கொலையும் செய்யும் கொடூரமான மனம் படைத்தவனுகவும் இருப்பான் என்பது அதிலிருந்து புலனுகின்றது.

"இதுவரை அவன் போலீசில் அகப்படாமல் இருக்கலாம். அவன் தன் குற்றத்தை மிகத் திறமை

யாகச் செய்பவன். சுவடே தெரியாமல் குற்றத்தை மறைக்கவும் அவன் மிகவும் வல்லவன்.

"ஆனால், மிகவும் விரைவில் அவன் போலீசில் சிக்கி விட நேரலாம். ஜெயில் தண்டனை அடைவதும் தப்பாதென்று தோன்றுகின்றது.

"ஆகவே, அவனைத் தகுந்த பாதுகாப்பில் வையுங்கள். அறைக்குள் பூட்டி வைப்பது அவனுக்கும் அவன் குடும்பத்துக்கும் சமுதாயத்துக்கும் நீங்கள் செய்யும் நன்மையாயிருக்கும்."

இவ்வாறு எழுதிப் பாதிரிக்குப் பதில் அனுப்பிவிட்டார் சீரோ.

## பாதிரியாரின் சீற்றம்

சீரோவின் அந்தக் கடிதத்தைப் படித்ததும் பாதிரியார் நெருப்பில் விழ்ந்த புழுவாகத் துடித்தார். அவர் உள்ளம் எரிமலையாகக் குமுறியது. அவர் கண்கள் சினத்தால் சிவப் பேறின. அவர் உடல் ஆட்டம் எடுத்தது.

ஏனென்றால்,

அவர் அனுப்பிய அந்தக் கைரேகைப் பதிவு அவருடைய ஒரே மகனுடையது. அவனுக்குப் பதினெட்டு வயதுதான் ஆகின்றது. கல்லூரியில் முறையாகச் சென்று படித்து வந்தான். 'நல்ல அறிவுள்ள பிள்ளை' என்று எல்லாரும் அவனைப் பாராட்டினார்கள். நடத்தையிலும் குறை சொல்ல முடியாதவனாகவே அவன் காணப்பட்டான்.

தம் கோபத்தை எல்லாம் கொட்டிப் பாதிரியார் சீரோவுக்குக் கடுமையான ஒரு கடிதம் எழுதினார்.

"அன்புள்ள சீரோவுக்கு,

"உங்கள் கடிதம் உரிய காலத்தில் கிடைத்தது. அதைப் பார்த்ததும் நான் மிகவும் மன வேதனைப்

பட்டேன். நானும் மற்றவர்களும் அறிந்த வரையில், அறிவும் ஒழுக்கமும் மிகக்கொண்டவன் அந்த இளைஞன். அத்தகைய ஓர் இளைஞனைப்பற்றி மிகவும் மோசமாக வெறுக்கத் தகுந்த வகையில் எழுதியிருக்கிறீர்கள். மேலும், அவன் என் ஒரே மகன்!

"இதிலிருந்து உங்கள் தீர்க்க தரிசனங்கள் எல்லாம் போலியானவை என்றும், மக்களை ஏமாற்றிப் பணம் பறிக்கும் சூன்யவித்தை என்றும் நான் முடிவுக்கு வருகின்றேன்.

"நாங்கள் அவனைப் பற்றி அவதூருக அப்படி எழுதியதற்கு உடனே என்னிடம் மன்னிப்புக் கோராவிட்டால், உங்களுக்கு எதிரான சட்டப்பூர்வ மான நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் நான் தயங்கமாட்டேன் என்பதை அறியவும்.

"உடனே தங்கள் மனப்பூர்வமான மன்னிப்பை எதிர் பார்க்கிறேன். இந்தப் போலித் தொழிலையும் உடனே கைவிட்டுவிட வேண்டும். அதற்கு உறுதியளித்தும் எனக்கு எழுத வேண்டும். உங்களை எச்சரிக்கிறேன்! இனி நீங்கள் எவரையும் ஏமாற்றவோ மிரட்டவோ முடியாது."

## முடிவு சரியானதே!

பாதிரியாரின் கோபக் கனல் தெரிக்கும் கடிதத்தைப் பெற்ருர் சீரோ. ஒருமுறை அந்த ரேகைப் பதிவைத் திரும்பவும் பார்வையிட்டார். அவருக்குத் தம் முடிவே சரியானதாகத் தோன்றியது.

ஒரு தந்தை, தன் மகனைப் பற்றிய விபரீதமான தகவல் கேட்டதும் துடிப்பதும் சினங்கொள்வதும் இயல்புதான் என்று சீரோ நினைத்தார். ஆகவே, பாதிரியாரைப் போல் தாமும் சினங்கொள்ளாமல், அந்தக் கடிதத்திற்கு மிக நிதானமாகவே பதில் எழுதினுர்:

## என்னை நம்புங்கள்

"அன்புள்ள பாதிரியாருக்கு.

"தங்கள் கடிதம் கிடைத்தது. கோபத்தால் ஏதேதோ தவறாக எழுதியிருக்கிறீர்கள். தன் மகனைப் பற்றித் திடுக்கிடும் உண்மைகளைக் கேட்டதும் எந்தத் தந்தையும் இப்படித்தான் துடிப்பார். ஆகவே, உங்கள் வசைக் கடிதத்தைக் கண்டு நான் ஆத்திரமோ வெறுப்போ கொள்ளவில்லை.

"உங்களுக்குத் தெய்வத்திடம் எவ்வளவு நம்பிக்கை இருக்கிறதோ, அவ்வளவு நம்பிக்கை எனக்கு என் கணிப்பிலும் முடிவிலும் உண்டு.

"நான் சொன்ன முடிவுகளை மாற்றிச் சொல்லுவதற்கு எந்தவிதமான ஆதாரமும் எனக்குத் தாங்கள் அனுப்பிய ரேகைப் பதிவிலிருந்து தோன்றவில்லை.

"அவனைக் கண்காணிப்பதும், அடைத்து வைப்பதும் அவனுக்கு நீங்கள் செய்யும் மிகப்பெரிய நன்மையாக இருக்கும்."

"இதுவே என்னுடைய ஆலோசனை! முடிவான என் அபிப்பிராயமும் இதுவே!

## பழி தூற்றினர்

சீரோவின் இந்தப் பதில் கடிதம் பாதிரியாரை மேலும் அதிகமாகச் சினம் கொள்ளச் செய்தது. தம் சர்ச்சுக்கு வருபவர்களிடமும், தம் நண்பர்களிடமும் சீரோவைப் பற்றித் தாறுமாறாகப் பழி தூற்றத் தொடங்கினர்.

தமக்குத் தெரிந்த பல பாதிரியார்களுக்கும் எழுதினர். சீரோ ஒரு பித்தலாட்டக்காரன். பிசாசின் சீடன். அவரை நம்புவதோ, அவர் ஆலோசனையைக் கேட்பதோ மகா பாபம். உங்கள் சர்ச்சுக்கு வருபவருக்கு எல்லாம் இதைத் தெரிவியுங்கள் என்று எல்லோருக்குமே எழுதினர்.

## குற்றஞ் சாட்டினர்

அந்த நகரப் போலீஸ் அதிகாரிக்கும் எழுதினர். பொதுமக்களை ஏமாற்றும் பித்தலாட்டக் காரரான சீரோவைத் தண்டிக்க வேண்டும்; அவர் சூதுக்கு இரை யாகாமல் மக்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று புகார் அனுப்பினர்.

போலீஸ் அதிகாரி சீரோவைப்பற்றி மிகவும் கேள்விப் பட்டவர். அரச குடும்பங்களிலும் மற்றும் மேல்மட்ட அதிகாரிகளிடமும் சீரோவுக்குள்ள செல்வாக்கையும் நன்ருக அறிந்தவர். ஆகவே, சில நாட்கள் பேசாமல் இருந்து விட்டார்.

பாதிரியார் அவரை விடவில்லை.

மீண்டும் மீண்டும் எழுதிக்கொண்டே இருந்தார். 'போலீஸ் இலாகா லஞ்சம்பெற்றுச் சீரோவைக் காப்பாற்று கிறது' என்றும் குறைகூறத் தொடங்கினர்.

கடைசியில், அந்த வட்டாரத்திலுள்ள இன்ஸ்பெக்டர் ஒருவருக்குப் பாதிரியாரின் குற்றச்சாட்டை அனுப்பினர் அதிகாரி. சீரோவின் செல்வாக்கைப் பற்றியும் குறிப் பிட்டு, நன்ருக விசாரித்து, நிதானமாக நடவடிக்கை எடுக்கவும் ஆணையிட்டார்.

## அதிகாரிகள் வருகை

ஒருநாள், சீரோவின் அலுவலகத்திற்கு அந்த இன்ஸ் பெக்டரும், மற்ருெரு ரகசிய இலாகா இன்ஸ்பெக்டருமாக வந்தார்கள். சீரோ அவர்களை உவப்புடன் வரவேற்ருர்.

"சீரோ! உங்களைப்பற்றி நாங்கள் நிரம்பவும் கேள்விப் பட்டிருக்கிருேம். ஆனல் அந்தப் பாதிரியார் நாள் தவருமல் அவதூருக எழுதிக்கொண்டே இருக்கிருர். அதைப் பற்றி உங்களிடம் விசாரிக்கவே வந்தோம். உங்கள் பதிலைச்

சொன்னால் எங்களுக்கு உதவியாயிருக்கும்'' என்றார் அந்த இன்ஸ்பெக்டர்.

சீரோ தமக்குப் பாதிரியாரிடமிருந்து வந்த கடிதத்தையும் ரேகைப்பதிவையும் எடுத்தார். அந்த ரேகைப் பதிவை இன்ஸ்பெக்டர்களுக்குக்காட்டித் தன்முடிவை விளக்கினார்.

"இவன் மிக மிகத் திறமையாகவும், எவருமே அறிய முடியாத வகையிலும், கடுமையான பல குற்றங்களைச் செய்தவன்; இன்னமும் செய்யும் மனப்போக்கு உள்ளவன்.

"தன் அபாரமான நுட்பமான புத்திசாலித் தனத்தால், எவரும் சந்தேகப் படாதபடியும் புறத்தே நடந்து கொள்ளவும் கூடியவன்.

"என்றாலும், விரைவில் இவன் சிறை சென்றுதான் ஆக வேண்டும். அதற்குரிய காலம் நெருங்குகின்றது.

"இதுதான் என் கணிப்பு" என்றார் சீரோ.

## ஆராய்ந்து பாருங்கள்

இன்ஸ்பெக்டர் சொன்னார்: "சீரோ, உங்கள் கணிப்பு உண்மையாகவே இருக்கலாம். ஆனால், அந்தப் பையனைப் பற்றி எவரை விசாரித்தாலும் நல்லவனாகவே சொல்லுகிறார்களே'' என்றார் இன்ஸ்பெக்டர்.

"அதுதான் அவன் சாமர்த்தியம்! அந்த வட்டாரத்தில் கண்டுபிடிக்கப்படாத, புலன் துலங்காத, அண்மைக்காலக் குற்ற நிகழ்ச்சிகள் இருந்தால், அவற்றை இவனை மையமாகக் கொண்டு கொஞ்சம் ஆராய்ந்து பாருங்கள். உண்மை உங்களுக்கே விளங்கலாம்'' என்றார் சீரோ.

## பல குற்றங்கள்

"சில கொள்ளைகள் திருட்டுக்கள் நடந்தவாகத் தகவல் வந்திருக்கின்றன. எதற்கும் சரியான புலன் கிடைக்கவில்லை.

ஆறு மாதத்துக்குமுன் அந்தப் பாதிரியின் மகள் திருமணத்தின்போது, அவளுக்கு அவர் வாங்கியிருந்த விலை மதிப்புள்ள பலவகைப் பரிசுப் பொருள்கள் மறைந்து போயின. அதுவும் இன்னும் தெளிவாகவில்லை. எதற்கும் நாங்கள் அவனை மறைவாகக் கவனிக்க முயற்சி செய்கிறோம்" என்று கூறி இன்ஸ்பெக்டர் விடைபெற்றார். அவர் மனம் சிந்தனையில் ஈடுபட்டது!

"கவனமாகவே ஆராயவேண்டும். தன்னைப் பற்றி எவராவது சந்தேகப்பட்டுக் கவனிக்கிறார்கள் என்று அவன் அறிந்தால், வெறிபிடித்த காட்டு மிருகமாகிவிடுவான். ஆகவே, மிகவும் விழிப்போடு இருங்கள். பாதிரியாரின் பகைமையும் கூடாது" என்றார் சீரோ.

அப்படியே செய்வதாக அவர்களும் கூறி விடைபெற்றுச் சென்றார்கள்.

## புதிய வேலைக்காரன்

பாதிரியின் வீட்டில் ஒரு வேலைக்காரக் கிழவன் இருந்தான். இன்ஸ்பெக்டர் அவனைப் போய்ப் பிடித்தார். அவனை மூன்று மாதங்கள் லீவு போட்டு விட்டு வெளியூருக்குப் போகும்படி சொன்னார். அவனுக்குரிய மூன்று மாதச் சம்பளத்தையும் தாமே முன்னதாகத் தந்து விட்டார்.

அவன் போகும்போது, அவனுக்குப் பதிலாக வேறொருவனை, இன்ஸ்பெக்டர் சொல்லும் ஒருவனை, வேலைக்கு அமர்த்தும்படியும் ஏற்பாடு செய்தார்.

இரகசியப் போலீசில் திறமையான ஒருவர் பாதிரி வீட்டு வேலைக்காரனாகப் போய் அமர்ந்து விட்டார். தம் கடமைகளைச் சரிவரச் செய்தும் வந்தார்.

பாதிரியாரும், அவர் மனைவியும், மகனும் அவரை பழைய வேலைக்காரனின் உறவு என்றும், அடபாவி என்று கருதினார்கள்.

## இடைவிடாத கவனம்

அந்த ரகசியப் போலீஸ் அதிகாரியும் அந்தப் பையனை மிகவும் உன்னிப்பாக இடைவிடாமல் கவனித்து வந்தார். அவன் வெளியே போகும்போது எல்லாம் மற்றும் பல அதிகாரிகள் அவனைப் பின்பற்றி மறைவாகச் சென்று அவன் செயல்களைக் கவனித்து வந்தனர்.

இடையிடையே அவன் செய்து வந்த குற்றங்களை அவர்கள் கவனித்து வந்தார்கள். இந்த நிலையில் ஒருநாள்—

## விஷமிட்ட கொடுமை

புதிய வேலைக்காரன் பாதிரியாருக்கும் அவர் மனைவிக்கும் பானங்கள் மேசைமீது வைத்துவிட்டுப் போய்ச் சற்று ஒதுங்கி நின்று கவனித்தான். அந்தப் பையன் அந்தப் பானங்களில் விஷத்தைக் கலந்தான். மறைந்து நின்ற வேலைக்காரனான ரகசியப் போலீஸ் அதிகாரி அதைக் கவனித்து விட்டார். பாதிரியாரும் அவர் மனைவியும் வந்து மேசையருகேயுள்ள நாற்காலிகளில் அமர்ந்தனர். பையன் மிகவும் பணிவோடு, அந்தப் பானங்களை எடுத்து அவர்களிடம் பருகுமாறு நீட்டினான்.

அவர்கள் ஆர்வத்துடன் குடிக்கப்போகும்போது வேலைக்காரனாயிருந்த அதிகாரி குவளைகளைத் தட்டிவிட்டார். கண்ணாடிக் குவளைகள் தரையில் விழுந்து நொறுங்கின. பையன் ஆத்திரத்துடன் வேலைக்காரன்மீது மிருகம்போலப் பாய்ந்தான். பாதிரியாரும் அவர் மனைவியும் மிகவும் திகைத்துப்போய் நின்றார்கள்.

## பழியை வேலைக்காரன்மீது போட்டான்

பையன் பயங்கரக் கொலைவெறியுடன் வேலைக்காரன் மீது பாய்ந்தான். அவன் கையில் பளபளக்கும் கத்தி

இருந்தது. அவன் திறமை அந்த வேலைக்காரனிடம் சற்றும் செல்லவில்லை. அந்த அதிகாரி கத்தியைத் தடுத்துவிட்டு அவனையும் நையப் புடைத்து இறுகப் பற்றிக் கொண்டார். அவனால் விடுபடவே முடியவில்லை. அவன் அந்த அதிகாரியை மிகவும் கேவலமாக ஏசத் தொடங்கினான். அவரே விஷ மிட்டவர் என்று பழித்தான்.

## போலீஸ் வந்தது

இதைக் கண்ட பாதிரியார் போலீசுக்குப் போன் செய்தார். "வேலைக்காரன் தன்னையும் தன் மனைவியையும் விஷமிட்டுக் கொல்ல முயன்றதாகவும், தன் மகன் தெரிந்து கொண்டதனால், அவன் குவளைகளைத் தட்டிவிட்டுத் தப்ப முயன்றதாகவும், அவர் போலிசில் குற்றஞ் சாட்டினார். மகனும் வேலைக்காரனும் கடுமையாகச் சண்டையிடுவ தாகவும் கூறினார்.

சில நொடிகளில் இன்ஸ்பெக்டரும் போலீஸ்காரர் சிலருடன் ஓடோடி வந்தார். மூச்சுத் திணறிக் கொண் டிருந்த பையனைப் பிடித்து, அவன் கைகளில் விலங்கை மாட்டினார் இன்ஸ்பெக்டர்.

## பாதிரியார் திகைப்பு

'இவன் வேலைக்காரன் அல்ல! எங்கள் போலீஸ் இலாக்கா அதிகாரிகளில் ஒருவர். உங்கள் மகன் மகாக் கொடிய குற்றவாளி! பல குற்றங்கள் செய்தவன். அவற்றை நாங்கள் துப்புத் துலக்கி வருவதை எப்படியோ அறிந்துவிட்டான். ஆகவே, உங்களையும் கொன்றுவிட்டு, கிடைத்ததைச் சுருட்டிக்கொண்டு தானும் எங்காவது ஓடிவிட நினைத்திருக்கிறான். இவை எல்லாவற்றிற்கும் எங்களிடம் போதிய ஆதாரங்கள் உள்ளன' என்றார் இன்ஸ்பெக்டர்.

பாதிரியார் மனமிடிந்து போனார்.

கோர்ட்டில் வழக்கு நடந்தது. பையன் தன் குற்றங்களை எல்லாம் ஏற்றுக் கொண்டான். தன் தீயசெலவுக்கு பணம் தேடவே அப்படித் தான் திருடியதாகவும் சொன்னான். தன் தமக்கையின் திருமணப் பரிசுப்பொருள்களைத் திருடியதும் தானேதான் என்றான்.

அவன் ஆறு வருஷங்கள் கடுங்காவல் தண்டனை பெற்றான். இளம் பிள்ளைகள் சீரமைப்புப் பள்ளிக்கு அவன் அனுப்பிவைக்கப் பட்டான்.

### பாதிரியாரின் மனமாற்றம்

பாதிரியாருக்குப்பெரிதும் மன வேதனையாகவே இருந்தது. தம் மகன் இவ்வளவு மோசமானவனா? இவனுக்காகப் புகழ் பெற்ற சீரோவின் பகையைச் சம்பாதித்தோமே! உண்மை சொன்ன அவரை ஏசினேமே! என்று மிகவும் மனம் வருந்தினார்.

"அன்புள்ள சீரோவுக்கு,

"உங்கள் பெருமை எனக்குத் தெரியவில்லை. என் பாசவும் அறியாமையும் எனக்கு உண்மையை மறைத்துவிட்டன. உங்கள் கணிப்பின்படியே அவன் கொடியவனாகவே இருந்திருக்கிறான். போலிசில் பிடிபட்டுத் தண்டனையும் பெற்றுவிட்டான்,

"அவன் என் ஒரே மகன்!

"என் நம்பிக்கையெல்லாம் அவன்மீது இருந்தன. அவன் நன்ருகப் படித்து, ஒழுக்கமாக வாழ்ந்து புகழ் பெறுவான்; அதனால் எனக்கும் பெருமை அதிகமாகும் என்று கனவு கண்டேன்.

"அவன் என்னை நன்றாக ஏமாற்றிவிட்டான்.

"உங்கள் கடிதத்தை அவனுக்குப் படித்துக் காட்டியதும், அவன் எச்சரிக்கையாகிவிட்டான். தன் பழைய குற்றங்கள் வெளிப்படாதிருக்க முயற்சிகள்

செய்திருக்கின்றுன். கண்காணித்த ரகசியப் போலிஸ் அதிகாரிகளின் வலேயில் அவன் சிக்கிவிட்டான். தப்ப முடியாது என்று தெரிந்ததும், எனக்கும் என் மனேவி யாகிய அவன் தாய்க்கும் விஷமிட்டுக் கொல்லவும் துணிந்து விட்டான்.

"தீர்க்க தரிசியான உங்களேப் பழித்த பாவத்திற்குத் தகுந்த தண்டனேயைக் கடவுள் எனக்குத் தந்து விட்டார்.

"நாள் தோறும் அதையே நினேந்து நினேந்து வருந்துகின்றேன். என்னே நீங்கள் மன்னிப்பீர்கள் என்றும் நம்புகின்றேன்.

"துன்பத்தில் வாடி மெலியும் என்னே நீங்கள் மன்னித்து எழுதினுல், அது எனக்கு மிகவும் ஆறுதலாக இருக்கும்.

உங்கள் அன்புள்ள,

..........................

பாதியாரின் இந்தக் கடிதம் சிரோவை மிகவும் இரக்கங் கொள்ள வைத்தது. அவருக்குத் தேறுதல் உரைத்து உடனே பதிலும் எழுதினுர்.

தன் மனேவி ஒழுக்கமானவள். தானும் ஒழுக்க நெறி நிற்பவர். எப்படித் தமக்குப் பிறந்த மகன் இப்படிக் கொடியவன் ஆனுன்? இந்தச் சந்தேகம் பாதிரியாருக்கு வலுத்தது. அவர் நோயிற் படுத்து விட்டார். அவள் மனேவியோ மகனின் நிலேயாலும் கணவரின் நிலேயாலும் கலங்கி அழுதழுது சோர்ந்து போனுள். அப்போது, அவள் மனத்திலே தெளிவு உண்டாயிற்று.

"இந்தப் பையன் கருவிலிருக்கும்போது ஒரு நாள் என் தோழி ஒருத்தி வந்திருந்தாள்,

"அவனிடம் ஒரு புதிய நாவல் புத்தகம் ஒன்று இருந்தது. அது மிகவும் சுவையானது என்று அவள் சொன்னாள். நானும் படிக்கலாம் என்று என்னிடம் தந்தாள்.

"அதை நான் வாங்கிப் படித்தேன். அதில் ஒரு சிறுவன் எப்படித் திறமையாகப் பலரையும் ஏமாற்றிப் பல குற்றங்களைச் செய்து வந்தான் என்பதுபற்றி எழுதப்பட்டிருந்தது. படிக்கப் படிக்க என் உள்ளத்தில் அந்தச் சிறுவன் நிலைபெற்று விட்டான். அவன் செயல்களை நான் நேரிற் பார்ப்பதுபோலவே அனுபவிக்கத் தொடங்கினேன்.

"இந்தச் சின்ன வயதில் எவ்வளவு பேரை இவன் திணறடிக்கின்றான்?" என்று வியந்தேன்.

"புத்தகத்தைப் படித்து முடித்ததும் கீழே வைக்கவே மனம் வரவில்லை. மீண்டும் மீண்டும் படித்தேன். இப்படி நான்கு ஐந்து முறை படித்தேன். அந்தப் பையனின் நினைவை என்னால் மறக்கவே முடியவில்லை. அவன் என் மனத்தில் நிலைத்து விட்டான்.

"அந்தப் பையனைப் போலவே, அவன் செய்தது போலவே, நம் பையனும் செய்திருக்கின்றான். இது எப்படி என்றுதான் எனக்குப் புரியவில்லை."

இப்படித் தன் அநுபவத்தைப் பாதிரியாரின் மனைவி தன் கணவரிடம் சொன்னாள். பாதிரியாருக்கு எதுவும் புரியவில்லை. தம் மனைவியின் இந்த விளக்கத்தை அப்படியே சீரோவுக்கு எழுதி அனுப்பினார்.

### சீரோவின் விளக்கம்!

சீரோ அதைப் படித்ததும் தெளிவு பெற்றார். பாதிரியாருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

"உங்கள் மனைவியார் சொன்னது உண்மையாயிருந்தால், அவர்கள் படித்த அந்தப் புத்தகத்தினால் தான் உங்களுக்கு அப்படிப்பட்ட மகன் பிறந்திருக்

கிறுன். அவர்கள் அறியாமல் செய்த தவறு அது. விதியின் விளையாட்டும் அதுவாகும்

"கர்ப்பகாலத்திலே தாயின் மனத்தில் ஆழமாகப் பதியும் எண்ணங்கள் குழந்தைகளிடம் அப்படியே படிந்து விடுகின்றன. இது மனோவியலாரின் தீர்க்க மான முடியாகும்.

"நடந்ததை நினைத்து வருந்தாதீர்கள். அவன் திருந்தலாம். அவனைப் படைப் பயிற்சிக்கு அனுப்ப ஏற்பாடு செய்யுங்கள். இரகசியப் போலீஸ் வேலையிலும் அவன் திறமையாயிருப்பான். நானும் முடிந்தவரை பாடுபட்டு இவைகளைச் செயல்படுத்த உதவுகின்றேன்.

"ஒவ்வொருவர் வாழ்வும் முன்னரே விதிக்கப்பட்டிருக்கிறது. அதைச் சிலரால் தெரிந்து கொள்ள முடிகிறது. அந்தச் சிறு சக்தியை எனக்குத் தெய்வம் தந்திருக்கிறது.

"உங்கள் உடலும் மனமும் தெளிவு பெற்றுக் கடவுளிடம் பாரத்தை ஒப்படைத்து விடுங்கள். முடிவில் எல்லாம் நல்லபடியாக நடக்கும்"

சிரோவின் இந்தக் கடிதம் பாதிரியாருக்கு ஓரளவுக்கு நிம்மதி அளித்தது. அதன்பின், என்றும் அவர் சிரோவின் நல்ல நண்பராகவே விளங்கினுர்.

## மனம்போலவே மகன் பிறப்பான்

இந்த வரலாறு ஒரு பெரிய உண்மையை விளக்குகின்றது அல்லவா? தாயின் மனத்திலே படியும் நினைவுகளுக்கு ஏற்பவே பிறக்கும் பிள்ளைகள் உருவாகின்றன என்பது தெளிவாகிறது அல்லவா!

ஆகவே. தாய்மார் இந்த வகையில் மிகவும் விழிப்பாக இருக்க வேண்டும். தகப்பன்மாரும் அவர்களுக்கு அநுசரணை யாக இருந்து, உயர்ந்த எண்ணங்கள் அவர்களிடம் நிலவு மாறு உதவ வேண்டும். நல்ல பிள்ளைகள் நாட்டில் தோன்றவும், அதனுல் நாடு செழிக்கவும், இந்த அடிப்படை எண்ணத்தை எங்கும் நிலவச் செய்யவேண்டும்.

மனம்போல் வாழ்வு மட்டுமல்ல; மனம் போல்தான் மகனும், மனம்போல் தான் மகளும் என்பதையும் ஒவ்வொருவரும் அறியவேண்டும்.

நாவல்கள் இப்போது நிறைய வருகின்றன. பலரும் விரும்பிப் படிக்கின்ருர்கள். சில நாவல்கள் அறிவுக்கு நல்ல விருந்தாக இருக்கின்றன. படிப்பவர்க்கு நல்ல எண்ணங் களைத் தருகின்றன. பல நாவல்கள் தீய எண்ணங்களையே விதைத்து வருகின்றன. இவற்றைப் படிக்கும் தாய்மார்கள் இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் எப்படியாவார்கள்?

பெரும்பாலும் பயங்கரச் சம்பவங்கள், கொடுமையான செயல்கள் நிரம்பிய நாவல்களையும் கதைகளையும் படிப்பதே மனத்தைக் கெடுப்பதாகும். பணத்தையும் நேரத்தையும் செலவிட்டு நம்மை நாமே கெடுத்துக் கொள்ளலாமா? இந்த மாயையை இனியாவது தாய்மார்கள் உடனே கைவிட்டுவிட வேண்டும்.

இப்படியே மோசமான படக்காட்சிகளைப் பார்ப் பதையும் கைவிட வேண்டும். ஒரு சென்சார் போர்டு என்றிருந்து, இவைகளை எல்லாம் தடை செய்தாற்கூட நாட்டுக்கு மிகவும் நன்மையாக இருக்கும்.

[மனோதத்துவத் துறையை அறிவியல் ரீதியாக உலகம் ஏற்றுக்கொள்ளச் செய்த மாமேதை ப்ராய்டு. இவர் வாழ்வே அந்தப் பணியின் போராட்டமும் முன்னேற்றமும் ஆகும். அவர் வாழ்வையும் அவர் கூறியுள்ள கோட்பாடுகளையும் இரத்தினச் சுருக்க மாகத் தருகின்றது இந்தப் பகுதி.]

## நான்காம் பகுதி

# சிக்மெண்ட் ப்ராய்டு —வாழ்வும் பணியும்

# 26

# சிக்மெண்ட் ப்ராய்டு

'உளவியல் துறை ஆசான்' என்ற சிறப்பும் மதிப்பும் பெற்றவர் சிந்தனையாளர் சிக்மெண்ட் ப்ராய்டு. மனத்தின் உண்மையான நிலையைச் சரியானபடி ஆராய்ந்து கண்டு பிடித்து வழிகாட்டிய முதல் மேதை அவரே.

இன்று உலகமுழுவதும் நடைபெறும் உளவியல் ஆராய்ச்சிகளெல்லாம் பிராய்டு கண்டுபிடித்த அடித்தளத்தின்மீது தான் நடைபெறுகிறது. இன்றுவரை உளவியல் துறையில் எத்தனையோ கண்டுபிடிப்புகள் தோன்றியுள்ளன என்றாலும் அவையெல்லாம் சிந்தனையாளர் ப்ராய்டின் சிந்தனைத் தத்துவத்திற்கு அளிக்கப்பட்ட விரிவான வியாக்யானம் போலத் தான் மிளிர்கின்றன.

அத்தகு சிறப்புடைய பேரறிஞரின் வாழ்க்கை வரலாற்றினை எடுத்தியம்புவதுடன் இந்நூலை ஒரு முடிவுக்குக் கொண்டுவரலாம்.

சிந்தனையாளர் ப்ராய்டின் வாழ்க்கையே உளவியல் வரலாற்றின் ஒரு பகுதியாகும். வாழ்க்கையில் எதிர்ப்பட்ட அனுபவங்களைக்கொண்டும், கண்முன் தென்பட்ட மக்களின் மனப்போக்கினைக் கூர்ந்து ஆராய்ந்து வந்ததன் விளைவாகவுமே, ப்ராய்டு உளவியலை உருவாக்கினார். ஆகவே அவருடைய வரலாறே உளவியல் வரலாறு தான் என்று கூறலாம்.

### எதிர் ரோமக்காரர் !

'எதிர் ரோமத்துடன் பிறக்கும் குழந்தை உலகத்தில் வேறு எவரும் செய்யாத அரும்பெருங் காரியத்தைச் செய்து

முடிப்பான்' என்பது தொன்றுதொட்டு நிலவிவரும் வழக்கு. மகாபாரதத்தில் ஓர் எதிர்ரோமக்காரன் வருகிறுன். அர்ச்சுனனுக்கும் நாககன்னிகைக்கும் பிறந்த அரவான் அவன். அரவான் போரிட்டிருந்தால் பாரதத்தின் பதினெட்டு நாட்போர் ஒரே நாளில் முடிந்திருக்கும் என்று கூறுவார்கள். அத்தகைய மாவீரன் அவன்! சிந்தனையாளர் சிக்மெண்ட் ப்ராய்டும் ஓர் எதிர் ரோமக்காரர்தான்! சிந்தனை உலகிலே அவர் புரிந்த சாதனை ஈடு இணை சொல்லமுடியாதது ஆகும்.

1856-ம் ஆண்டு மே மாதம் 6-ம் தேதி சிந்தனையாளர் ப்ராய்டு பிறந்தார். இப்பொழுது செக்கோஸ்லாவாகிய நாட்டில் உள்ள 'வ்ரீபர்க்' என்ற சிற்றூரில், ஒரு சிறிய சந்தில் உள்ள சிறிய வீட்டிலே பிறந்தார். சின்னஞ் சிறியதாகச் சுருக்குவிழுந்த உடலுடன் தன் சிறிய வாயைத் திறந்து 'குவா குவா' என்று அழுது கொண்டு உலகத்திற்கு வந்த அந்தக் குழந்தையை எடுத்துப் பார்த்தாள் மருத்துவச்சி. உடனே பிரசவத்தில் களைத்துப் போய்க் கிடக்கும் தாயைப் பார்த்து, "அடியம்மா அமாலியா! உன் பிள்ளை ரொம்ப அதிர்ஷ்டக்காரனடீ! எதிர்ரோமத்துடன் பிறந்திருக்கிறுன். எதிர்காலத்தில் ரொம்பப் பெரிய மனிதனுக விளங்குவான்" என்றுள்.

அமாலியா மெதுவாகப் புன்னகை புரிந்திருப்பாள். எந்தத் தாய் தன் மகன் எதிர்காலத்தில் பெரிய மனிதனுக விளங்குவான் என்று நம்பாமல் இருக்கிறுள்? மற்றவர் அவ்வாறு கூறும் வார்த்தை எந்தத்தாய்க்குத்தான் மகிழ்ச்சி அளிக்காது.

## குடும்பத்தின் சூழ்நிலை !

ஆனல் இளந்தாயான அமாலியாவின் கஷ்டம் அவளுக்குத்தான் தெரியும். அவள் யூதர் குலத்தைச் சேர்ந்தவள். அவளுடைய கணவனும் யூதன்தான். அந்தக் காலத்தில் யூதர்கள் பட்ட தொல்லைகளுக்கு இணையாக உலகத்தில்

வேறு எந்த இனமும் தொல்லைப்பட்டிருக்க முடியாது. சமுதாயத்தால் பகிஷ்கரிக்கப்பட்ட அந்த மக்களுக்கு எந்த நாடும் தன்னிடத்தில் தங்கி வாழ அனுமதிக்கவில்லை. எங்காவது தங்க அவர்களுக்கு அனுமதியளிக்கப்பட்ட போதிலும் குற்றவாளிகளைக் கண்காணிப்பதுபோல் அவர்களைப் போலீஸார் கண்காணித்து வருவார்கள். ஜனங்கள் குஷ்டரோகிகளை வெறுப்பதுபோல் அவர்களை வெறுப்பார்கள். பணம் இல்லாத யூதர்களுக்குப் பணம் சம்பாதிக்க வழி கிடைக்காது. பணம் படைத்த யூதர்களுக்கு அதை வைத்துக்கொண்டு வாழ வசதி இருக்காது. நாடுநாடாக, நகரம் நகரமாகப் புகலிடம் தேடி அலையும் வாழ்க்கைநிலை படைத்த ஒரு குடும்பத்தில்தான் சிந்தனைச் செல்வரான ப்ராய்டும் பிறந்தார்.

ப்ராய்டின் தாய் அமாலியா மிகவும் இளம் பிராயத்தினளாக இருந்தாள். அவளுக்குக் கல்யாணம் ஆகும்போது பதினறு வயதுதான். அவள் கணவர் ஜேகப் ப்ராய்டுக்கு அவளைப்போல் இரு மடங்குக்குமேல் வயதாகியிருந்தது. மூத்த தாரத்தை இழந்திருந் ஜேகப் இரண்டாம் தாரமாகத் அமாலியாவை மணம் புரிந்துகொண்டார். அவருக்கு மூத்த மனைவியின் மூலம் வாலிபனை ஒரு பிள்ளையும் இருந்தான். அதிக வயதானவரான ஜேகபிடம் அமாலியாவின் உள்ளம் மயங்கியதன் காரணம் ஜேகபின் புதுமைக் கருத்துக்கள் தான். பிரபஞ்சத்தில் உள்ள எல்லா அதியற்புதங்களையும் விஞ்ஞானத்தால் விளக்கமுடியும் என்று ஜேகப் சொன்னர். பகுத்தறிவால் உதயமாகப் போகும் புதுயுகத்தில் எல்லா மனிதர்களும் சமத்துவமாய் இருப்பார்கள் என்று நம்பினர். ஜேகபின் புரட்சிகரமான வார்த்தைகள் வெறுத்து ஒதுக்கப்பட்ட ஓர் இனத்தைச் சேர்ந்த மங்கை அமாலியாவின் உள்ளத்தில் எத்தகைய கனவுகளை உண்டாக்கினவோ? சுதந்திரம்! சமத்துவம்! சகோதரத்துவம்—ஆ! யூதர்களுக்கு மரணத்திற்குப் பின்னுலும் கிடைக்கக்கூடாத அந்தப் பொருள்கள் உயிருடன் இருக்கும்பொழுதே கிடைக்கும்

நற்காலமும் வருமா? அப்படிப்பட்ட ஒரு காலம் வரவே வராதபோதிலும் அந்த நம்பிக்கைதான் எவ்வளவு இனிமையானதாக இருக்கிறது. அமாலியா அந்த நம்பிக்கை படைத்த ஒரு கணவருடன் தன் வாழ்வைப் பிணைத்துக் கொள்வது பாக்கியம் என்று கருதியிருக்கலாம். வேறு எதனுல் அவள் தன் தந்தையின் பிராயம் உடைய ஒருவரை மணந்துக்கொள்ளச் சம்மதித்திருப்பாள்? ஆனுல், அவளை அவளுடைய கணவர் எப்போதும் ஒரு வாஞ்சையுள்ள குழந்தையாகவே பாவித்து அன்போடு நடத்தி வந்தார்.

### தந்தையும் எமானுவேலும் !

அமாலியா ஜேகபை மணந்துகொண்டதும், ஜேகப்பின் மூத்த தாரத்து மகனுன 'எமானுவேலுக்கும்' விரைவிலேயே திருமணம் முடிந்துவிட்டது. தந்தையின் புதுக்குடும்பமும் குமாரனின் குடும்பமும் ஒரே வீட்டில் வசித்தன. அவ் வீட்டில் இரண்டு இளம்மனைவிகளும் தங்கள் கணவர்களுக்காகச் சமைப்பது முதலான காரியங்களை ஒன்ருகவே பார்த்து வந்தனர். தந்தையும் குமாரனும் துணிகள் வாங்கி ஆடைகளாகத் தைத்து அக்கம்பக்கத்திலுள்ள நகரங்களுக்குக் கொண்டுபோய் விற்கும்தொழிலில் ஈடுபட்டு அதில் வரும் லாபத்தைக் கொண்டு பிழைத்து வந்தனர். கஷ்ட ஜீவனந்தான்.

### மாவீரன் பெயர் !

குமாரன் எமானுவேலுவுக்குத்தான் முதலில் குழந்தைகள் பிறந்தன. அதன் பிறகுதான் அவனுடைய சிற்றன்னையான அமாலியாவுக்கு ப்ராய்டு பிறந்தார். ப்ராய்டு என்பது தந்தைவழி குடும்பப் பெயர். சிக்மெண்ட் என்பது தான் தாய் இட்ட பெயர். தன் பிள்ளை உலகிலேயே மாபெரும் மனிதனுக விளங்க வேண்டுமென்ற ஆசையால் கட்டுக்கதைகளில் வரும் சிக்மேண்ட் என்ற மாவீரன் பெயரையே தாய் தேடிப்பிடித்துத் தன் பிள்ளைக்குச்

சூட்டினுள். ஆனுல் ப்ராய்டு என்ற பெயரே இன்று உலகம் அறிந்த பெயராக நிலைத்திருக்கிறது. பாலகனுன ப்ராய்டுக்கு அவனுடைய தமையனின் குழந்தைகளான ஜானும், பாலேனும் விளையாட்டுத் தோழனும் தோழியுமாக அமைந்தனர்.

## இளமைப் பருவம்

குழந்தை ப்ராய்டு நுண்ணுணர்வும் சாமர்த்தியமும் உடையவனுய் விளங்கினுன். மிக விரைவிலேயே நடக்கவும் பேசவும் தொடங்கிவிட்டான். தான் எதை நினைத்த போதிலும் சாதித்துவிட நினைக்கும் அதிகச் சுட்டித்தனம் படைத்தவனுகவும் இருந்தான். அவனுடைய நினைவிலேயே அவன் பார்த்தவை கேட்டவை அனைத்தும் அழிக்க முடியாதபடி பதிந்துவிடும். பின்னுல் எத்தனை காலமானபோதிலும் அவற்றை அவன் மறப்பதே கிடையாது.

## இரத்தத்தைக் கண்டால் பயம் !

தத்தித் தளர்நடை போடும் பிராயம் உடைய குழந்தையாக இருக்கும்போது, ஒரு சமயம் ஏதோ தின்பண்டம் வேண்டும் என்று ப்ராய்டு பிடிவாதம் செய்தான். அலுவலாக இருந்த அன்னை கவனிக்கவில்லை. குழந்தை ப்ராய்டு முக்காலியை நகர்த்திச்சென்று தின்பண்டம் வைத்திருக்கும் அலமாரியின் முன் வைத்து முக்காலியின்மீது ஏறித் தின்பண்டத்தை எடுக்க முயற்சிக்கையில் தவறி விழுந்து விட்டான். அவன் தாடை உடைந்துவிட்டது. ரத்தம் கொட்டியது. அந்தச் சிறிய சம்பவம் குழந்தையின் மனதில் எத்தகைய ஆழமான உணர்ச்சியை உண்டுபண்ணிவிட்டது என்ருல், அதுமுதல் எங்கே ஒரு துளி ரத்தத்தைப் பார்த்து விட்டாலும், குழந்தை பயந்து வீரிட்டு அழத் தொடங்கி விடுவான். இரவில் குழந்தைக்கு ஜுரம் வந்துவிடும். பயங்கரக் கனவுகள் எல்லாம் கண்டு பலநாள் பிதற்றிக் கொண்டே கிடப்பான். அப்படியென்ருல், குழந்தையின்

மனம் எந்தகைய மெல்லுணர்ச்சி படைத்ததாக இருந்திருக்கும் என்பது சொல்லவும் வேண்டுமா?

### பேய் பிசாகக் கதைகள்

ஜேகபின் வீட்டிற்கு ஒரு கிழவி வருவாள். அவள் குழந்தை ப்ராய்டுக்குப் பேய் பிசாசுக் கதைகளையும், மிருக ராட்சஸர்கள், பாதாளச் சிறைகள், நரகத்தீயில் மனிதரைப் போட்டு வாட்டும் வேதனைகள் போன்ற பயங்கரமான நிகழ்ச்சிகளையும் கூறுவாள். ப்ராய்டு அந்தக் கதைகளைப் பற்றியே நினைத்துக் கொண்டு பயப்பிராந்தியுடன் உட்கார்ந்திருப்பான். இரவில் தூங்கும் போது விசித்திர மான கனவுகளெல்லாம் காண்பான். சில நாட்களுக்குப் பிறகு இந்தக் கிழவி காணுமல் போய்விட்டாள்.

### கனவில் அலறுவான் !

ஒரு நாள் தன் அம்மாவைக் காணுத ப்ராய்டு, கிழவியை நினைத்துக்கொண்டு தன் தமையனிடம் ஓடிப்போய், "அண்ணு அந்தக் கிழவி எங்கே?" என்று கேட்டான். கிழவியைச் சிறையில் அடைத்து விட்டார்கள் என்று தமையன் கூறினுன். உண்மையும் அதுதான். திருடியான அந்தக் கிழவியின் குற்றங்கள் கண்டு பிடிக்கப்பட்டு அவள் சிறையில் தள்ளப்பட்டிருந்தாள். ஆனுல், குழந்தை ப்ராய்டுக்கு அது புரியவில்லை. உடனே அம்மாவையும் காணவில்லை என்ற நினைப்பு வரவே, அம்மாவும் கிழவியைப்போல் ஆகிவிட்டாளோ என்று பயந்து, "அம்மா!" என்று வீரிட்டு அலறிக்கொண்டு ஓடத் தொடங்கி விட்டான். அதே சமயத்தில் வீடு திரும்பிவந்த தாயா ராலும் குழந்தையின் அழுகையின் காரணத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அன்றிரவு பையனுக்கு ஜுரமும் வந்துவிட்டது. அம்மாவைப் பாதாளச் சிறையில் தள்ளிப் பயங்கரமான ராட்சஸர்களும், விசித்திரமான பறவைகளும்

அவளைக் கொல்லப் போவதாகக் கனவு கண்டு வீறிட்டுக் கதறினன்.

## நூறு மடங்கு நுண்ணறிவு !

இந்த மாதிரி எண்ணற்ற சம்பவங்களைக் கூறலாம் சாதாரணமாகவே புத்திசாலியான குழந்தைகள் நுண் அறிவு படைத்தவையாக இருக்கும். ஆனல் மற்றக் குழந்தைகளைக் காட்டிலும் நூறு மடங்கு நுண் அறிவு படைத்த குழந்தையாகவே ப்ராய்டு விளங்கினன் என்று சொல்வது மிகையாகாது.

ப்ராய்டுக்குப் பின்னல் அமாலியாவுக்குக் ஒன்றன்பின் ஒன்ருக ஐந்து பெண் குழந்தைகள் பிறந்தன. அவை எதனுலுமே தாயின் உள்ளம் தன் செல்வ மகனிடம் கொண்ட பாசத்தைக் குறைக்க முடியவில்லை. ப்ராய்டின் நுண்அறிவு படைத்த உள்ளத்திலும், மற்றவர்கள் சாதிக்காத பெரிய காரியங்களைச் செய்ய வேண்டும் என்ற வீரிய நினைவு வித்தாகிக் கிளர்ந்து படர்ந்து வளரத் தொடங்கிற்று.

## தாயும் தந்தையும் இருதுருவம் !

தாய் தன் பிள்ளையிடம் காட்டிய வாஞ்சையளவு தகப்பனர் காட்டவில்லை என்றே சொல்லலாம். ஏனென்ருல், அவர் ஏற்கெனவே பேரன் பேத்தி எடுத்துவிட்டவர். வாழ்க்கைப் போராட்டத்தில் அலுத்துப் போனவர். எதிலும் கெடுபிடியாகவும், அன்பு காட்டுவதில் கருமியாகவும் விளங்கினர். தாயும் தந்தையும் தன்னிடம் நடந்து கொள்வதில் உள்ள வித்தியாசத்தைக் குழந்தை ப்ராய்டின் நுண் உள்ளம் உணர்ந்துவிட்டது. அதனல் குழந்தைக்குத் தன் தந்தையின்மீது சில சமயங்களில் ஆத்திரமும் பொருமையும் உண்டாகும். சில சமயங்களில் தந்தைப் பாசத்திற்காக ஏக்கமும் உண்டாகும். தாயிடமே எப்போதும் ஒட்டிக்கொண்டே இருக்கும்.

## அன்பும் குரோதமும் !

குழந்தை ப்ராய்டின் அண்ணன் பிள்ளையான ஜான் வயதில் மூத்தவனாக இருந்ததால், சிற்றப்பனான ப்ராய்டிடம் அதிகாரம் செய்வான். ஆனால் ப்ராய்டுக்கோ தன்னை யாரும் அதட்டி அதிகாரம் செய்வதென்பதே பிடிக்காது. குழந்தை களுக்குள் அடிக்கடி சச்சரவுகள் வந்து விடும். அப்போது தந்தை ஜேகப், தன் பேரன் ஜான் முன்னாலேயே தன் பிள்ளை ப்ராய்டைத் திட்டி உதைப்பார். அப்போதெல்லாம் குழந்தை ப்ராய்டு தன் அம்மாவைக் கட்டிக்கொண்டு, "நான் ஜானை வெறுக்கிறேன்! வெறுக்கிறேன்!" என்று குரோதத்தால் குமுறும். அந்தப் பிராயத்திலேயே ப்ராய்டின் உள்ளத்தில் அன்பையும் குரோதத்தையும் பற்றிய கருத்துக்கள் வித்தூன்றி விட்டன.

அமாலியா, தன் மகன் ஒரு பெரிய மனிதன் ஆவான் என்றும், பிற்காலத்தில் பெரும் புகழ் பெற்று விளங்கு வான் என்றும் நினைத்தாள். தன் மகனிடம் அளவுகடந்த அன்பு பாராட்டிச் சீராட்டி வளர்த்தாள். அவனை அடிக்கடி வாஞ்சையோடு அள்ளியணைத்து முத்தமிட்டாள். தந்தையோ அவள் தன் மகனுக்குச் செல்லம் கொடுத்துக் கெடுத்து வருவதாகக் கோபித்துக் கொள்வார்.

ஐரோப்பாவில் இயந்திர நாகரிகம் வேகமாகப் பரவத் தொடங்கியதானது ஜேகபின் சிறிய கைத்தொழிலை அடித்துத் தகர்த்துவிட்டது. வறுமையின் கொடுமை களுக்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் கடைசியாகப் பிழைப்பை நாடி வேறு இடங்களுக்குச் செல்வது என்று தீர்மானித்தனர்.

ஜேகபின் முதல்மனைவியின் குமாரனான எமானுவேல் தன் மனைவி மக்களுடன் இங்கிலாந்தில் உள்ள பஞ்சாலை நகரமான மான்செஸ்டரை நோக்கிப் புறப்பட்டான்.

## வியன்னுவில் குடியேற்றம்!

ஜேகப் யூதர்களுக்குச் சுயேச்சையுடன் வாழும் உரிமை யளித்திருந்த ஆஸ்திரியா நாட்டை நோக்கித் தம் மனைவி யோடும், பாலகன் ப்ராய்டோடும், அப்போதுதான் பிறந்த குழந்தை அன்னுவோடும், மற்றக் குழந்தைகளோடும் புறப் பட்டார். உணவுக்காக ஜேகப் வந்து சேர்ந்த வியன்னு நகரம்தான் பின்னுல் ப்ராய்டின் வாழ்க்கையையே செழுமை யாக அமைத்தது.

## படித்ததும் விந்தை!

வியன்னு நகரத்திற்கு வந்து சேர்ந்த ஜேகப் கடைக்குக் கடை கம்பளித்துணிகளைக் கொண்டுபோய்க் காண்பித்து விற்கும் தொழிலில் ஈடுபட்டார். அவருடைய மனைவியும் ஆறு குழந்தைகளும் எல்லோரும் ஒரு சின்னஞ்சிறு அறை யையே வாசஸ்தலமாகக் கொண்டு வாழ்க்கையை ஆரம் பித்தனர். பரம தரித்திரத்தில் ஆழ்ந்திருந்த அந்தக் குடும் பத்தால் பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்ப எப்படி முடியும்?

ஆனுல் நுண்ணறிவு படைத்த ப்ராய்டின் அறிவு வளர்ச்சிக்கு பள்ளிக்கூடப் படிப்பு அவசியமாக இருக்க வில்லை. வீட்டிற்குச் சாமான் பொட்டலம் கட்டிவரும் பழைய காகிதங்களைப் பார்த்துப் படிக்கத் தொடங்கியே ப்ராய்டு எழுத்துக்களைக் கற்றுக்கொண்டான். தகப்பனுர் இரவில் வியாபாரக் கணக்குகளை பார்க்கும்போது கிட்ட இருந்துதான் எண்ணைத் தெரிந்துகொண்டான். எண்ணும் எழுத்தும் கற்க வேறு உபாயம் தேவை இல்லை அல்லவா?

பின்னுல், குடும்பத்திற்குச் சிறிது வசதி ஏற்பட்டதும், பத்தாவது வயதில் ப்ராய்டு உயர்தரப்பள்ளி ஒன்றில் சேர்க்கப்பட்டான். இந்தச் சமயத்தில் அமாலியாவுக்கு இன்னெரு ஆண் குழந்தையும் பிறந்திருந்தது. ஏழு குழந்தை களும் இரண்டு பெரியவர்களும் ஒரே அறையில் வாசம்! குழந்தை எவ்வாறு படிக்க முடியும்? அமாலியா கொஞ்சம்

பெரிதாக வீடு பார்க்கவேண்டும் என்ருள். அதன்படி சற்று வசதி உள்ள வீடாகப் பிடித்தனர்.

## படிக்க வசதி கிடைத்தது!

இந்த வீட்டில் ப்ராய்டு படிப்பதற்காக மாத்திரம் ஒரு தனி அறை கொடுக்கப்பட்டது. மற்றக் குழந்தைகள் எல்லோருக்கும் ஒரு அறை! ப்ராய்டு படிக்கும்பொழுது வீட்டில் யாரும் எந்தவிதமான சப்தமும் உண்டாக்கக் கூடாது. தாயின் அந்தக் கவனமும் சிறுவன் ப்ராய்டின் நுண் அறிவும் கல்வியில் விரைவில் முன்னேற உதவி செய்தன.

வயதாக வயதாகச் சிறுவன் ப்ராய்டின் சிந்தனை வளரத் தொடங்கிற்று. சிலசமயம் சிந்தனையில் ஆழ்ந்து போயிருப்பான். யார் ஏதுரைத்தாலும் எரிந்து விழுவான். சில சமயம் உலகத்தில் யாரும் தன் சிந்தனையில் பங்கு கொள்வார் இல்லையே என்றெண்ணி ஏங்குவான். தனிமை அவன் நிலையை வதைக்கத் தொடங்கிவிடும். சில சமயம் தன்பால் மிகவும் அன்பாய் உள்ள அன்னையிடமே வெடுக்கென்று பேசிவிடுவான். தகப்பனுரிடம் மாத்திரம் பேச மாட்டான்.

## சிந்தனை வளர்ச்சி!

சிறுவன் ப்ராய்டின் உள்ளத்தில் அறிவு கொப்புளிக்கத் தொடங்கிற்று. சிந்தனையாளர்கள் பேரறிஞர்களின் தத்துவங்கள் அவன் உள்ளத்தைக் கிளறிவிட்டன. வீட்டிலே அவன் டார்வினைப் பற்றிப் பேசுவான். மெந்தலைப்பற்றி முழங்குவான். பாஸ்டியரைப் பற்றிப் புகழ்வான். அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு அன்னை பிரமித்துப்போய் நிற்பாள். தந்தை தலையை ஆட்டிக்கொண்டே போய் விடுவார்.

### பட்டம் பெற்ருன்!

பதினேழாம் பிராயத்தில் சிறுவன் ப்ராய்டு 'ஸ்பெர்ன் ஜிம்ஞஸியத்தில்' (கல்லூரியில்) பட்டம் பெற்று வெளி யேறினன். கைகால் மெலிந்த ஒல்லியான இந்தச் சிறுவன் ஒரு பட்டதாரி என்று நினைக்கவே அதிசயப்பட வேண்டிய தாக இருக்கும். அவனுக்கு அப்பொழுது பல விஷயங்கள் பிடித்தமாக இருந்தன. எல்லாவற்றிலும் அவனுல் திறமை யாக வாதாட முடிந்தது. தத்துவமா? பழம்பொருள் பற்றிய ஆராய்ச்சியா? விஞ்ஞானமா? கணிதமா? எல்லா வற்றிலும் அவன் கெட்டிக்காரனுக விளங்கினுன்.

### விஞ்ஞான ஆசை !

ஒரு நாள் மாலை ப்ராய்டு வியன்னுப் பல்கலைக் கழகத்தில் ஒரு பிரசங்கம் கேட்கப் போயிருந்தான். பிரசங்கி, மிகவும் ஆவேசமாக, "உலகின் இரகசியங்கள் எல்லாம் இயற்கை யில்தான் அடங்கி யிருக்கின்றன. இயற்கையின் இரகசியங் களை உணர்வதுதான் அறிவின் வேலை" என்று பேசினுர்.

பிரசங்கத்தைக் கேட்டுவிட்டு வந்த இளைஞன் ப்ராய்டு, தன் தந்தையிடம், தான் விஞ்ஞானம் கற்க விரும்புவதாகக் கூறினுன்.

ஆனல் விஞ்ஞானத்தில் எந்தப் பிரிவைக் கற்பதென் பதுதான் அவனுக்குப் புரியவில்லை. இரண்டாண்டுகள் ரசாயனமும், பௌதிகமும், இன்னும் உள்ள விஞ்ஞானப் பிரிவுகளை யெல்லாமும் அலசியபடி திரிந்துகொண் டிருந்தான்.

### நரம்பியல் ஆராய்ச்சி

கடைசியாக மருத்துவப் பிரிவில் நரம்புகள் சம்பந்த மான ஆராய்ச்சியில்தான் அவனுக்கு அதிகமான பிடித்த மும் ஈடுபாடும் ஏற்பட்டன. அந்த ஆராய்ச்சியில் உலகப் புகழ்பெற்று விளங்கிய நிலையத்தில் புகுந்தான். அங்கேயே நிலைத்துவிட்டான்.

## மயக்கம் எதனுல்?

ஒரு நாள் மாலை!

வாலிபன் ப்ராய்டு வியன்னுப் பல்கலைக் கழகத்தி லிருந்து வீடு நோக்கிப் புறப்பட்டான். பல்கலைக் கழகத்தின் படிகளிலிருந்து இறங்கி எதிரில் உள்ள மைதானத்தைக் கடந்து போய்க் கொண்டிருக்கையில், திடீரென்று ப்ராய்டின் தலை சுற்றியது. மயக்கம் வரும்போல் இருந்தது. மேல் மூச்சு வாங்கிற்று. மார்பு வேகமாக அடித்துக் கொண்டது. கஷ்டப்பட்டு நடந்துபோய் எதிரில் இருந்த சுவரைப் பிடித்துக்கொண்டு அப்படியே நின்றுவிட்டான்.

இந்த மயக்கம் அப்பொழுதுதான் முதன் முதலாக உண்டாகவில்லை. ஏற்கெனவே இந்த மாதிரி ஒன்றிரண்டு தடவை உண்டாகியிருக்கிறது.

இதன் காரணம் என்ன?

உடற்கூறு சம்பந்தமான கல்வி பயின்று வந்த அவனுக்கு, உடல் சம்பந்தமான கோளாறு ஏதும் இல்லாமல் இதைப்போன்ற அறிகுறிகள் தோன்றமுடியாது என்பது தெரியும். ஆனல்... அவனுக்கு நோய் நொடி ஏதும் இல்லை. உடலில் எந்தவிதமான கோளாறும் இல்லை. பின் இந்த அறிகுறிகள் ஏன்?

இப்படிச் சில காலமாக ப்ராய்டு தன் உடலைப்பற்றித் தானே ஆராய்ந்து பார்க்கத் தொடங்கியிருந்தான். நரம்பு சம்பந்தமான அதிர்ச்சிகளைப்பற்றி ஆராய்வது அவனுக்கு மிகவும் பிடித்தமாக இருந்தது. உடலைக் கூறு போட்டுச் சோதனை செய்யும் மருத்துவக் கலையைவிட நரம்புகள் சம்பந்தமான ஆராய்ச்சியிலேயே அதிகம் கவனம் செலுத்தினுன்.

## ஹிப்னடிச மயக்கம்!

ஒருநாள் ஹான்ஸன் என்பவர் ஒரு மனிதனை ஹிப்னுடிச முறையால் மயக்க நிலை அடையச் செய்வதைப் ப்ராய்டு

கவனித்தான். அந்த மனிதனின் உடலில் வெளிப்படையான மாறுதல்கள் உண்டாவதைப் ப்ராய்டு கவனித்தான். அவனுடைய உடல் தசைகள் இறுக்கம் அடைந்தன. இருதயத் துடிப்பும் மூச்சு விடும் வேகமும் மாறுதல் அடைந்தன. ஹிப்னடிசம் செய்பவர் (மயக்குபவர்) வாயால் உரைத்தவுடன் மற்றவனின் உடலில் இந்த மாதிரியான மாறுதல்கள் உண்டாக வேண்டிய அவசியம் என்ன?

## நரம்பமைப்பு ஆய்வுகள்

மனிதனின் நரம்புக்கும் இந்த மாதிரியாக உடலில் ஏற்படும் மாறுபாட்டிற்கும் சம்பந்தம் இருக்கவேண்டும் என்று ப்ராய்டு நினைத்தான். இந்தக் காரணத்தால் பேராசிரியர் 'ப்ரக்கிடம்' கற்ற மற்ற மாணவர்கள் கல்வி முடிந்து வெளியேறிக் கொண்டிருந்தபோதிலும், ப்ராய்டு மாத்திரம் வருஷத்திற்குப் பின் வருஷமாக அங்கேயே தங்கித் தவளைகள், மீன்கள், பறவைகள் முதலியவற்றின் நரம்பமைப்பின் இரகசியங்களை ஆராய்ந்து கொண்டிருந்தான். இந்த ஆராய்ச்சி பின்னல் மனிதர்களின் உடலில் உள்ள நரம்பமைப்பின் இரகசியங்களை உணர்வதற்கு வழிகாட்டியாக இருக்கும் என்று கருதினன்.

ப்ராய்டு தவளை முதலிய பிராணிகளின் நரம்பைப்பற்றி ஆராய்ந்து கண்டு பிடித்த புதிய விஷயங்களைப் பற்றி வியன்னப் பல்கலைக் கழகத்தில் பல கட்டுரைகள் சமர்ப்பித்தான். அவனுடைய ஆராய்ச்சிகள் மிகவும் பாராட்டப் பட்டன. பின்னல் ப்ராய்டு சிறந்த விஞ்ஞானியாகக் கூடும் என்று எல்லோரும் நினைத்தார்கள். பேராசிரியர் ப்ரக், ப்ராய்டைத் தம் அருகிலேயே வைத்துக்கொள்ள விரும்பினர். பல்கலைக் கழகத்தில் அடுத்தபடியாக வேலை காலி ஏற்பட்டதும், ப்ராய்டுதான் ப்ரக்கின் உதவியாளராக நியமிக்கப்படுவார் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருந்தது.

இந்த உத்தியோகம் கிடைக்கும் நன்னுளை ப்ராய்டு இரவு பகலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஏனென்ருல், இப்பொழுது அவன் உள்ளத்தில் காதல் மலர்கள் பூக்கத் தொடங்கியிருந்தன. தனக்கென்று காசு சம்பாத்தியம் இல்லாமல், தந்தையின் பராமரிப்பில் இருக்கும் ஒருவன், மணந்துகொண்டு குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுவதென்பது முடிகிற காரியமா?

## முதல் காதல் அனுபவம்!

பல்கலைக் கழகத்தில் பயின்றுவந்த ஏழாண்டுகளில் ப்ராய்டு அதிகமான பெண்களைச் சந்தித்ததில்லை. ஒரு தடவை ப்ரீபர்க்குத் தன் குடும்பத்தாருடன் சென்றிருக்கையில், அங்கு வசித்துவரும் தன் தந்தையின் நண்பரான ஒரு யூத வியாபாரியின் புதல்வி வாலிபன் ப்ராய்டின் மனதைக் கவர்ந்தாள். அவளுடன் புல்லும் புதுமலர்களும் நிறைந்த பூங்காவில் ப்ராய்டு உலாவினுன். உல்லாசமாகப் பேசினுன். மங்கையின் பேச்சுக்கள் ப்ராய்டின் உள்ளத்திலே இனிய நினைவுகளை உண்டாக்கின. இதுதான் ப்ராய்டின் வாழ்க்கையில் உண்டான முதல் காதல் அனுபவம்.

ஆனுல், எல்லா முதற் காதல்களையும் போலவே இதுவும் அதிக நாள் நீடிக்கவில்லை. சீக்கிரமே அது மறைந்துவிட்டது. ப்ராய்டின் கவனம் முழுவதும் கல்வியில்தான் ஈடுபட்டிருந்ததே தவிர, தன்பருவத்தினருக்குரிய விளையாட்டிலும், கேளிக்கைகளிலும் உல்லாசப் பொழுது போக்குகளிலும் ஈடுபடவில்லை.

## மார்த்தாவின் தொடர்பு!

ஆனுல் ப்ராய்டின் தங்கையான அன்ன அடிக்கடி தான் வெளியில் செல்லும்பொழுது ப்ராய்டை வற்புறுத்தித் தன்னுடன் இழுத்துக்கொண்டு போனுள். அவளுடைய நண்பர்களுடனும் சிநேகிதைகளுடனும் கலந்து பழகவேண்டிய

அவசியம் ப்ராய்டுக்கு ஏற்பட்டது. சில நாட்களுக்குள் அன்னுவுக்கும் எலிபெர்னேஸ் என்ற யூத இளைஞனுக்கும் திருமணம் நிச்சயமாயிற்று. ப்ராய்டு அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரையும் சந்திக்கும்படியான அவசியம் ஏற்பட்டது. தங்கைக்கு மணமகனான எலிபெர்னேசுக்கு இரண்டு சகோதரிகள் இருந்தனர். மூத்தவள் பெயர் மின்னா; இளையவள் மார்த்தா. மின்னா கெட்டிக்காரி. ஆண்களைப் போல ஆரவாரமாகப் பேசக் கூடியவள். அவளுடைய குணம் ப்ராய்டுக்குப் பிடித்திருந்த போதிலும், ஓர் ஆண் நண்பனுடன் பழகுவதைப் போல்தான் அந்தப் புத்திசாலிப் பெண்ணோடு பழக முடிந்தது. ஆனால் இளைய பெண்ணான மார்த்தா...!

எப்பொழுதும் மௌனமாகப் புன்னகைப் புரிந்தபடி பின்னல் போட்டுக் கொண்டோ வேறு ஏதாவது வேலை செய்து கொண்டோ சுறுசுறுப்பாகவே இருக்கும் பழக்கம் உடைய மார்த்தா, ப்ராய்டின் உள்ளத்தில் நிரந்தரமான ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டாள்.

ப்ராய்டு மங்கை மார்த்தாவிடம் விஞ்ஞான அற்புதங்களைப் பற்றி பேசினான். தன் ஆசிரியர்களைப் பற்றிப் பேசினான். தன்னுடைய கண்டுபிடிப்புக்களைப் பற்றிப் பேசினான். தன் இளம் பிராயத்து வாழ்க்கைக் கனவுகள் லட்சியங்கள் எல்லாவற்றையும் பற்றிப் பேசினான். மார்த்தா எல்லாவற்றையும் மௌனமாகப் புன்னகை புரிந்தபடி கேட்டுக் கொண்டிருந்தாள். இரண்டு பேருக்கும் இடையே மிகவும் ஆழமான எதனாலும் அசைக்க முடியாத அன்பு உண்டாகிவிட்டது.

### உயிர் பிழைத்த அதிசயம்!

ஒருநாள் மாலை ப்ராய்டின் தங்கையான அன்னுவும் அவள் காதலன் எலிபெர்னேசும் ப்ராய்டும் மார்த்தாவும் அரசாங்க நாடக அரங்கத்திற்குப் போகத் தீர்மானித்திருந்

தனர். கடைசி நேரத்தில் அன்னு தான் ஏற்கனவே மற்ற வர்களையும் அழைத்துக் கொண்டு ஒரு விருந்துக்குவர ஒப்புக் கொண்டிருந்த விஷயத்தைக் கூறவே, நான்குபேரும் நாடக அரங்கத்திற்கு போகும் ஏற்பாட்டை ரத்து செய்து விட்டு விருந்துக்குச் சென்றனர். அன்று நடைபெற இருந்த அருமையான இசை நிகழ்ச்சியைக் கேட்கமுடியாமல் போனதுபற்றி அவர்களுக்கு வருத்தமும்கூட.

ஆனால், விருந்து முடிந்து அவர்கள் திரும்பி வந்து கொண்டிருந்த பொழுது, நகரத்தின் மையத்தில் ஒரு பெரிய தீப்பிழம்பு காணப்படுவதையும் நகரமக்கள் எல்லோரும் பரபரப்புடன் அந்த இடத்தை நோக்கி ஓடிக் கொண்டிருப் பதையும் கண்டனர். அன்றிரவு அரசாங்க நாடக அரங்கம் கடுமையான தீ விபத்தில் அகப்பட்டுக் கொண்டது. மேற் கூரை அப்படியே பெயர்ந்து விழுந்ததில் கொட்டகைக்குள் இருந்த ஒருவர்கூட உயிருடன் தப்பமுடியாமல் ஆறு நூறு பேர் உயிர் துறந்தனர். மார்த்தாவும் ப்ராய்டும் நடுங்கிக் கொண்டே வீட்டை நோக்கி நடந்தனர். கடைசி நேரத்தில் அவர்கள் தங்கள் முடிவை மாற்றிக் கொண்டிராவிட்டால் இந்நேரத்திற்குள் அவர்களும் வெந்து சாம்பலாகியிருப் பார்கள்.

### உத்தியோகம் கிடைக்குமா?

அன்னுவுக்கும் எலிபெர்னேசுக்கும், மார்த்தாவுக்கும் ப்ராய்டுக்கும் ஒன்றுகவே திருமணம் செய்துவிடுவது என்று ஏற்பாடு செய்திருந்தார்கள். ப்ராய்டு வியன்னுப் பல்கலைக் கழக உத்தியோகத்தை எதிர்பார்த்துத் தன் திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தான். தனக்கென்று ஒரு வருமானம் ஏற்பட்டதும் திருமணம் செய்து கொள்ள அவன் விரும்பினுன்.

ஆனல், கடைசியாக வியன்னுபல்கலைக் கழகத்தில் வேலை காலி ஏற்பட்டதும் ப்ராய்டுக்கு உத்தியோகம் கொடுக்கப்

படவில்லை. காரணம் அவன் யூதகுலத்தைச் சேர்ந்தவன் என்பதுதான். அவனுடைய திறமையோ தகுதியோ முன் நிற்கவில்லை. குலம்தான் முன்னால் நின்றது. ப்ராய்டு மனம் இடிந்து போனான். மறுபடியும் மருத்துவக் கல்லூரி யில் பயின்று தனியாக டாக்டர் தொழிலை ஆரம்பிப்பதைத் தவிர அவனுக்கு வேறு வழி இருக்கவில்லை. அப்படி யென்றால் இன்னும் மூன்று நான்கு வருடங்கள் அவன் திரு மணத்தைப் பற்றிச் சிந்திக்கவே முடியாது என்று அர்த்தம். இந்தச் செய்தி இரண்டு குடும்பங்களுக்கும் எத்தகைய அதிர்ச்சியை உண்டாக்கியிருக்கும் என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை.

## டாக்டராக வேண்டியதுதான்

அன்னாவுக்கும் எலிபெர்னேசுக்கும் மாத்திரம் திரு மணம் நடைபெற்றது. மங்கை மார்த்தாவை அவளுடைய தாயார் ஹாம்பர்க் நகரத்திற்கு அழைத்துக் கொண்டு போய்விட்டாள். அப்படியாவது மார்த்தா ப்ராய்டை மறந்துவிட்டு வேறு மாப்பிள்ளையை வரித்துக் கொள்ளச் சம்மதிப்பாள் என்று தாயார் எதிர்பார்த்தாள். ஆனால் மார்த்தாவின் பெண்ணுள்ளம் ப்ராய்டின் காதலை மறக்க வில்லை. எத்தனை வருஷங்களானாலும் தான் ப்ராய்டுக்காகக் காத்துக் கொண்டிருக்கத் தயாராக இருப்பதாகக் கூறினாள்.

ப்ராய்டு மருத்துவக்கலையில் அனுபவப் பயிற்சிக்காக வியன்னா பெரிய ஆஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்தான். இங்கே பலவிதமான நோயாளிகளுக்கிடையே ப்ராய்டு அலைந்து திரிந்தான். பேராசிரியர் ப்ரக்குடன் நரம்பு சம்பந்தமான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தது இங்கும் நரம்பு சம்பந்தமான வியாதிகளைத் தனியாகக் கவனிக்க உதவியாக இருந்தது. நரம்பமைப்பு சம்பதமான நோய்கள் அதிர்ச்சிகள் அடிகள் சம்பந்தமான வியாதிகளை ப்ராய்டு கவனித்தான்.

பேராசிரியர் ப்ரக்கிடம் அவன் கற்ற கல்வியானது நரம்பு சம்பந்தமான வியாதிகளை மிக நுட்பமாக அறிந்து

கொள்ள ப்ராய்டுக்கு உதவியாக இருந்தது. மிகச் சாதாரண மான அறிகுறிகளிலிருந்து மிகத்திறமையாக நோயைக் கண்டு பிடித்துக் கூறிவிடும் திறமை வாய்ந்தவர் என்ற புகழ் ப்ராய்டுக்கு மிக விரைவில் ஏற்பட்டு விட்டது.

அதிலிருந்து ப்ராய்டு ஓர் நரம்பியல் ஆராய்ச்சி அறிஞராகி விட்டார்.

## சிறந்த டாக்டர்

ஒரு தடவை, மரணப் படுக்கையில் கிடந்த ஒரு பையனின் உடலை ப்ராய்டு பரிசோதித்தார். அவனுடைய நோய் என்னவென்று மற்ற டாக்டர்களால் கண்டு பிடிக்கவே முடியவில்லை. பையனுடைய பல் எயிறுகளிலிருந்து தொட்டால் இரத்தம் வடிந்தது. இந்தக் கேசை ப்ராய்டு பார்த்ததும் பையனுடைய நோய் 'ஸ்கர்வி' என்று கூறினார். சரியான போஷாக்கு இல்லாததால் பையனுடைய உடல் தசை இழைகள் எல்லாம் வலுவிழந்து போய் விட்டன என்றும், பையனுடைய மூளை அறைப் பிரிவுகளில் இரத்தம் கசிந்திருப்பதைப் பார்க்கமுடியும் என்றும் ப்ராய்டு கூறினார். அந்த மாதிரியான நோய்க்கு அந்தக் காலத்தில் எந்தவிதமான சிகிச்சை முறையும் கேள்விப் பட்டதேயில்லை. அதனால் மற்ற டாக்டர்கள் அதை ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் பையன் மரணமடைந்ததும், அவன் உடல் பிரேத பரிசோதனை செய்யப்பட்டு மண்டையின் மூளை ஆராயப்பட்டபோது, ப்ராய்டு கூறியபடியே ஏற்பட்டிருந்தது புலப்பட்டது.

மிக விரைவிலேயே இன்னொரு கடினமான நோயாளியின் விவகாரம் வைத்திய நிலையத்திற்கு வந்தது. ரொட்டிக் கடையில் ரொட்டி பிசைந்து கொண்டிருந்த பலமான உடல் உள்ள தொழிலாளி ஒருவன் வைத்திய சாலைக்குக் கொண்டு வரப்பட்டான். அவனுடைய கைகால்கள் ஜில் லிட்டுப் போயிருந்தன. உடல் வலியால் "ஐயய்யோ அப்பப்பா!" என்று கதறிக் கொண்டிருந்தான். அவனு

டைய நோய் என்ன என்பதை எந்த டாக்டராலும் கண்டு பிடிக்க முடியவில்லை ப்ராய்டு இந்த நோயாளியையும் பரிசோதனை செய்தார். நோயாளியின் உடம்பிலே உள்ள நரம்புகள் எல்லாம் எரிவுகண்டு வீங்கிப் போயிருக்கின்றன என்று கூறினர். அந்தக் காலத்தில் இந்த மாதிரி வியாதியைப் பற்றி யாரும் கேள்விப்பட்டதுகூடக் கிடையாது. டாக்டர்கள் ப்ராய்டு சொன்னதை ஒப்புக்கொள்ளவில்லை. இந்த நோயாளியும் மரணமடைந்ததும் அவனுடைய உடல் பிரேத பரிசோதனை செய்யப்பட்டபோது ப்ராய்டு கூறிய படியே இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

## டாக்டர் ஆசிரியரானது

ப்ராய்டின் திறமையை உணர்ந்த மருத்துவ அதிகாரிகள், 'ஜெனரல் ஆஸ்பத்திரியில்' மற்ற டாக்டர்களுக்கு நரம்பு சம்பந்தமான வியாதிகளைப்பற்றி வகுப்புகள் நடத்தும்படியாகப் ப்ராய்டை நியமித்தார்கள்.

ஆஸ்பத்திரிக்கு வந்த நோயாளிகளைப் ப்ராய்டு மிகவும் நுணுக்கமாகக் கவனித்தார். உடல் சம்பந்தமான கோளாறு ஏதும் இல்லாமல், உடலில் இயற்கைக்கு மாறான நோய்க்குறிகளை உடையவர்களான நோயாளிகளை நுணுக்கமாகப் பரிசீலனை செய்தார். இந்த மாதிரி நோய்களுக்கு 'ஹிஸ்டீரியா' (மனநோய்அல்லது வாதோன்மத்தம், அல்லது "மூர்ச்சை ரோகம்") என்று பொதுவான பெயர் வழங்கி வந்தது.

## ஹிஸ்டீரியா நோய்

இந்த மாதிரியான நோய் மனிதனின் நினைப்பால் (உணர்ச்சியால்) உண்டாகிறதேதவிர உடல்கோளாறால் உண்டாவதில்லை என்ற கருத்து நிலவி வந்ததால், இப்படி வரும் நோயாளிகளுக்குப் பொதுவாக ஒரே வகையான மிக்ஸரை (மருந்து திரவம்) கொடுத்து அனுப்புவது வழக்கம். குடிப்பதற்குக் காரமும் இனிப்புமாக இருக்குமேதவிர இந்த

மருந்தால் வேறு எந்தவிதமான மாறுதலும் உண்டாகாது. ஆனால் கைகால் வராமல் போவது, திடீரென்று அங்கங்கள் படபடப்பது, பிரமை தட்டிப்போய் நின்றுவிடுவது, தலை சுற்றுவது, மயக்கம், மேல்மூச்சு வாங்குவது, பார்வை, சுவை நாற்றம் ஒலி ஸ்பரிசம் ஆகிய ஐம்புலன் உணர்ச்சிகள் தெரியாமல் போய்விடுவது. இந்த மாதிரியான பல வகை நோய்கள் எல்லாம் உடலில் கோளாறில்லாமல் ஏற்படக் கூடுமானால் அதற்கு ஏதாவது காரணம் இருக்க வேண்டாமா? காரணம் இல்லாமல் மனிதனுக்கு எப்படி நோய் வர முடியும்? ப்ராய்டு இந்த நோயாளிகளின் நோய்க்குறிகளைக் கவனமாக விசாரித்தார். அவர்களுடைய கைகால்கள் இழுத்துக் கொள்வதை, தலைக் கனத்தை, மார்புத் துடிப்பை. அவகளுக்கு ஏற்படும் விசித்திர அனுபவங்களைப்பற்றி அவர்கள் கூறும் விஷயத்தை எல்லாம் கவனமாக ஆராய்ந்தார். இந்த மனிதர்கள் உண்மையான நோயால் துன்புறுகிறார்கள்; இவர்களுடைய நோயின் காரணமோ, தன்மையோ புரியவில்லை என்ற உணர்ச்சிதான் ப்ராய்டுக்கு உண்டாயிற்று.

## மூளை ஆராய்ச்சிப் பகுதி

ப்ராய்டு இந்த மர்ம நோய்களின் காரணத்தை ஆராய்வதிலேயே மூழ்கிப் போனார். வைத்தியசாலையில் மூளை சம்பந்தமான நோய்களைக் கவனிப்பதில் புகழ் வாய்ந்தவரான டாக்டர். மேனார்ட் தலைமையின் கீழிருந்த மூளை ஆராய்ச்சிப் பகுதியில் தன் நேரம் முழுவதையும் செலவிட்டார். மூளையின் பகுதிகளைத் தனித்தனியாகப் பிரித்து ஆராய்ச்சி செய்யும்பொழுது எங்காவது இந்த நோய்களுக்குக் காரணமான சிறிய தசைப் பகுதியையோ, மூளை அறையையோ, சுரப்பையோ கண்டுபிடிக்க முடியும் என்று நினைத்தார்.

மூளையிலே சுவை, ஊறு, நாற்றம், செவி, கண் ஆகிய புலன் உணர்ச்சிகளை அறியும் பகுதிகள் தனித்தனியாக

இருப்பதாகவும், ஒரு மனிதனுக்குப் பல மொழிகள் தெரியும் என்ருல் ஒவ்வொரு மொழியையும் அவன் மூளையில் உள்ள தனியான ஒரு பகுதி உணர்ந்து நினைவு வைத்துக் கொள் வதுதான் காரணம் என்றும், 'ப்ரோகர்' என்பவர் கண்டு பிடித்தார். அதைப்போல் நரம்பு நோய்களுக்குக் காரண மாக ஏதாவது மூளையில் இருக்கவேண்டும் என்றும் ப்ராய்டு முனைந்து பாடுபட்டார். ஆனுல் மூளையில் அப்படிப்பட்ட பகுதி ஏதும் காணப்படவில்லை. மனநோய்களான 'ஹிஸ்டீரியா' மூளையின் சிற்றறைகளுக்கு ஏற்பட்ட பாதகத் தால் அல்லது நோயால் ஏற்படவும் இல்லையென்பதை ப்ராய்டு புரிந்துகொண்டார்.

அப்படியென்ருல், பின் இந்த நோய்களுக்குக் காரணம் என்ன? காரணம் இல்லாமலே நோய் உண்டாகக் கூடுமா? உலகத்தில் எத்தகைய அற்பமான நிகழ்ச்சியும் ஒரு காரணம் இல்லாமல் ஏற்படுவதில்லையே? உடலில் வெளிப்படையாகத் தெரியும் வாதைகள், துன்பங்கள் காரணம் இல்லாமல் எவ்வாறு ஏற்படக்கூடும்?

பேராசிரியர் மேனுர்ட் ப்ராய்டைப் பெரிய ஆஸ் பத்திரியின் மூளை சம்பந்தமான பகுதியிலேயே இருக்கும்படி கூறினுர். ஆனுல், தம்முடைய மனத்தை ஓயாமல் உறுத்தி வரும் சந்தேகத்திற்குப் பதில் அங்கே கிடைக்கப் போவதில்லை என்பதைப் ப்ராய்டு தெரிந்து கொண்டார்.

### ஜீன் மார்ட்டின் கண்டறிந்தது!

இந்தச் சமயத்தில் பாரிஸ் நகரத்தில் புகழ் பெற்று விளங்கிய "ஹிஸ்டீரியா" (மன) நோய்களின் மருத்துவர் ஜீன்மார்ட்டின் சார்காட், நரம்புநோய் பற்றி நீண்டகாலம் ஆராய்ச்சிசெய்த பின்னுல், மயக்குமுறையால் (ஹிப்ன டிஸம்) மனிதர்களுக்கு நரம்புநோய் அல்லது மனநோய் அறிகுறிகளை உண்டாக்க முடியும் என்பதைச் செய்து காட்டினுர். இந்த அற்புதத்தைக் காண உலகெங்கும் இருந்து மாணவர்கள் சார்காட்டைத் தேடிக்கொண்டு

புறப்பட்டனர். ப்ராய்டும் தம்முடைய பழைய பேராசிரியர் ப்ரக்கின் உதவியால் பாரிஸ் பட்டணத்திற்குப் போய்வர உபகாரச் சம்பளம் பெற்ருர்.

மறுபடியும் அவருடைய திருமணத்தைத் தள்ளிப் போடவேண்டியதாயிற்று. ஏற்கெனவே அவருடைய காதலி மார்த்தா மூன்று நான்கு வருஷமாக அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தாயிற்று. ஆனல் உண்மையுள்ள மார்த்தா இன்னும் எத்தனை காலமானலும் அவருக்காகக் காத்துக் கொண்டிருக்கத் தயாராக இருந்தாள்.

1885-ம் ஆண்டு இலையுதிர் காலத்தில் ப்ராய்டு பாரிஸ் நகரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

### சார்காட்டுடன் இருந்தார்

சுமார் ஒன்பது மாத காலம் ப்ராய்டு பாரிஸ் மாநகரத்தில் டாக்டர் சார்காட்டுடன் தங்கியிருந்தார்.

சார்காட் அக்காலத்தில் வாழ்ந்த டாக்டர்களில் மிகவும் புகழ்பெற்று விளங்கினர். நரம்பு சம்பந்தமான பல நோய்களை அவர் புதிதாகக் கண்டுபிடித்து விளக்கிய தால், பலநோய்கள் அவர் ஞாபகார்த்தமாக அவருடைய பெயரால் அழைக்கப்பெற்றன. ஆரம்ப காலத்தில் நரம்புகளுக்கு ஏற்படும் நோய்களை மாத்திரம் ஆராய்ந்து மருத்துவம் செய்துவந்த சார்காட், உண்மையாக நரம்பு களில் நோய் உண்டாகாமலும் நரம்பு நோயின் அறிகுறி களோடு நோயாளிகள் விளங்குவதையும் கண்டு பிடித்தார். இதன் காரணம் மன நோயே என்பதையும் விளக்கினர்.

பக்கவாதம் (பாரலிஸிஸ்) நரம்பு சம்பந்தமான ஒரு நோய். பக்கவாத நோய் உடையவனின் ஒரு பக்க உறுப்புகள் செயலிழந்து போகின்றன. உடம்பின் இடப்பக்கமோ வலப்பக்கமோ கைகால் வராமல் போய்விடுவதைப் பற்றி எல்லோரும் கேள்விப்பட்டிருக்கலாம் இந்நோய் மூளையில்

அப் பகுதிகளை இயக்கும் நரபு முடிச்சில் அதிர்ச்சி ஏற்பட்டு அது செயலிழந்து போவதால் உண்டாகிறது. பக்கவாத நோயாளி இறந்தபின் அவனுடைய பிரேதத்தைப் பரிசோதனை செய்து பார்த்தால் மூளையில் உள்ள நரம்பு முடிச்சில் இரத்தம் கசிந்து உறைந்து போயிருப்பதைக் காணலாம். ஆனால், இந்த மாதிரியான ஊறு ஏற்படாமலும் மூளையில் நரம்புப் பாகம் சரியாக இருந்தும் சிலர் பக்கவாத நோய் உடையவர்களாகவும் காணப்படலாம்.

இதே மாதிரி கண் காது மூக்கு வாய் தோல் ஆகிய புலன் உறுப்புக்கள் செயலிழந்து போவது முதலாக எல்லா விதமான நரம்பு நோய்களும் இயற்கையாக ஏற்பட்ட உடல் கோளாறல் அல்லாமல், விசித்திரமாக, ஏனோ எப்படியோ மனிதருக்கு உண்டாகலாம். மயக்கம், பேச்சு மறந்து போதல், திடீரென்று பழைய நினைவுகள் மறந்து போதல்—இப்படியாக இந்தவகை நோய்கள் எத்தனையோ?

சாதாரணமாக இந்த மாதிரியான மன நோய்கள் (ஹிஸ்டீரியா) பெண்களுக்குத்தான் வரும் என்று நம்பப் பட்டன. கர்ப்பாசயக் கோளாறுதான் இந்த மாதிரி நோய்களுக்குக் காரணம் என்றும் கருதப்பட்டது.

ஆனால், சார்காட் இந்தமாதிரி நோய்கள் ஆண்களுக்கும் வரலாம் என்றும், இதற்குக் காரணம் கர்ப்பாசயக் கோளாறு என்பது தவறு என்றும் நிருபித்தார்.

### காப்பியடிக்கும் நோயாளிகள்

மூளையில் இந்த அங்கங்களை இயக்கும் பாகத்திற்கு ஊறு நேராமலும் இந்த நோயின் அறிகுறிகள் சில நோயாளி களிடம் காணப்படுவதன் மர்மம், அவர்கள் இந்த அறிகுறி களை உண்மையான நோயாளிகளைப் பார்த்துக் காப்பி அடிப்பதுதான் என்றும் கூறினார்.

உண்மையான பக்கவாதம் கொண்ட நோயாளியின் உடலில் மூளையிலிருந்து தொலைவில் உள்ள உறுப்புக்கள்

நோயால் அதிகமாகப் பாதகம் அடைந்திருக்கும். ஒரு கால் வரவில்லை என்றால் காலின் விரல்களில் நோய் அதிகமாக இருப்பதால், விரல்கள் உணர்ச்சியே இல்லாமல் மரத் துண்டுகளைப்போல் இருக்கும். விரலிலிருந்து மேலே வரவர நோய் குறைந்து, இடுப்புக்கு வரும்பொழுது நோயின் தன்மை மிகவும் குறைந்து விடுவதால் இடுப்பில் உள்ள தசைப் பாகங்களை அவனால் இயக்க முடியும். இதனால் உண்மையான பக்கவாத நோய் உள்ளவன் நோய் அடைந்த காலைத் தூக்கிச் சுற்றி அசைத்து அசைத்து எடுத்து முன்னால் வைத்து நடப்பான். இது ஒரு நரம்பு நோய்.

## மனநோயும் நரம்புநோயும்

ஆனால், மன நோயால் பக்கவாதம் கொண்டவன் கால் பூராவுமே வராமல் போவதால், இடுப்பிலிருந்து விரல் வரை மரக்கட்டையைத் தூக்கி வைப்பதுபோல் ஒரே அடியாகத் தூக்கி வைப்பான்.

நரம்பு நோய்க்கும் மனநோய்க்கும் உள்ள இந்தப் பெரிய வித்தியாசத்தைக் கண்டுபிடித்து விளக்கிய பெருமை சார்காட்டையே சாரும்.

உண்மையான நரம்புக் கோளாறு இல்லாமல் மனக் கோளாறு காரணமாகவே பல நோய்களின் அறிகுறிகள் நோயாளிகளின் உடம்பில் காணப்படலாம் என்பதை சார்காட் நிதர்சனமாக நிருபித்துக் காட்டினார். இதற்கு அவர் ஹிட்னடிஸமுறையைச் (மயக்குதல் அல்லது அறிவைத் துயிலச்செய்தல் முறையை) கடைப்பிடித்தார். தன்னுடைய பார்வையாளர்களின் முன்னால் ஒரே சமயத்தில் ஐந்துபேர் ஆறுபேரை ஹிப்னடிஸ முறையால் மயக்கம் அடையச் செய்து, அவர்களிடத்தில் திடீரென்று கடினமான நரம்பு நோய்களின் அறிகுறிகளை உண்டாக்கிக் காட்டினார்.

ஆனால், எந்த ஹிப்னடிஸ முறையால் நோய்களின் அறிகுறியை நோயாளிகளின் உடலில் உண்டாக்க முடி

கிறதோ அதே ஹிப்னுடிஸ முறையால் நோய்களைத் தீர்க்கவும் முடியும் என்பதைச் சார்காட் ஒப்புக்கொள்ள வில்லை. பலஹீனமான மனமும் மனநோய்களும் உடைய வர்களைத்தான் ஹிப்னுடிஸ முறையால் மயக்கமுடியும் என்றே சார்காட் கருதினுர்.

## ப்ராய்டின் சந்தேகம்!

ஆனுல், 'மனநோயால் உண்மையான பக்க வாதத் தைப் போன்ற நோயின் அறிகுறிகளே உண்டாவதத்குக் காரணம் என்ன?' என்று ப்ராய்டு கேட்டபோது, 'மன நோயால் உண்டாகும் பக்க வாதத்திற்குக் காரணம் ஏதாவது பெரிய அதிர்ச்சியாக இருக்கலாம்; அந்த அதிர்ச்சி நம்மால் உடம்பின் பாகங்களில் காணமுடியாததாக இருக்கலாம்' என்று சார்காட் கூறினுர்.

ப்ராய்டுக்கு இந்தப் பதில் திருப்தி அளிக்கவில்லை. உடம்பில் காணமுடியாத ஒரு அதிர்ச்சி அடி அல்லது காயம் எப்படி இருக்கமுடியும்? அப்படிப்பட்ட மர்மமான அடியை உண்டாக்கியது எதுவாக இருக்கலாம்? அந்த மர்ம அடி உண்டாகக் காரணம் என்ன? இந்தக் கேள்விகள் ப்ராய்டின் மனதைக் குழப்பின.

சார்காட்டிடமிருந்து தாம் மேலும் கற்றுக்கொள்ளக் கூடியது ஒன்றும் இல்லை என்பது தெரிந்ததும் ப்ராய்டு அவரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார். அவருடைய நூல்கள் சிலவற்றை ஜெர்மானிய மொழியில் மொழிபெயர்க்க ப்ராயிடு அனுமதி கோரினுர். சார்காட்டும் மகிழ்ச்சியுடன் அனுமதி அளித்தார்.

## ஹாம்பர்க்கில் திருமணம்!

ஊருக்குத் திரும்பிவரும் வழியில் ப்ராய்டு ஹாம்பர்க் மார்க்கமாக வந்தார். ஹாம்பர்க்கில் அவரும் மார்த்தாவும் மணம் புரிந்து கொண்டனர்.

வியன்னுவுக்குத் திரும்பியதும் ப்ராய்டு தம் சொந்த மருத்துவ நிலையத்தை ஆரம்பிக்க விரும்பினுர். ஆனுல் அவரிடம் பணம் ஏது? மார்த்தா தனக்கு சீதனமாகக் கிடைத்த பணத்தைத் த ன் கணவனுக்குக் கொடுத்தாள்.

### சொந்தத் தொழில்

இளம் தம்பதிகள் வியன்ன வந்து சேர்ந்ததும், முன்பு எரிந்துபோன அரசாங்க நாடக அரங்கம் இருந்த இடத்தில், அரசாங்கத்தால் புதிதாகக் கட்டப்பட்டிருந்த கட்டிடத்தில் இடம் பிடித்துக்கொண்டு வாழ்க்கையை ஆரம்பித்தார்கள். முன்பக்கம் இருந்த அறை ப்ராய்டு தன் நோயாளிகளைக் கவனிப்பதற்காக என்று ஒதுக்கப்பட்டது.

நரம்பு சம்பந்தமான நோய்களில் நிபுணர் என்ற பெயருடன் வைத்தியம் ஆரம்பித்த டாக்டர் ப்ராய்டின் மனத்தை இன்னும் அந்தச் சந்தேகம் பலமாகக் குழப்பிக் கொண்டிருந்தது. உண்மையாக உடலில் எந்தவித நோயும் இல்லாமல், ஆனுல் உண்மையான நோய்களின் அறிகுறி களோடு வரும் மனநோயாளிகளுக்கு எவ்வாறு வைத்தியம் செய்வது? ஏதாவது மருந்துத் தண்ணீரைக் கொடுப்பதா? ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்வதா? மின்சார வைத்தியம் செய்துகொள்ளச் சொல்வதா? என்ன சொல்வது? அந்தப் பிரச்சினைதான் ப்ராய்டின் மனதைப் பெரிதாக உறுத்திக் கொண்டிருந்தது.

### உம்மால் முடியுமா?

சார்காட்டிடம் கற்ற உண்மைகளைப் ப்ராய்டு வியன்ன மருத்துவக் கழகத்தில் எடுத்துக் கூறியபொழுது, மற்ற டாக்டர்கள் சிரித்தனர். "ஆண்களுக்கு ஹிஸ்டீரியாவா? சுத்தப் பைத்தியக்காரத்தனம்" என்று சொல்லி ஆரவாரித்தனர்.

தாம் இந்த மாதிரிக் கேஸ்களைக் கண்ணுரைப் பார்த்த தாகப் ப்ராய்டு கூறிய பொழுது பேராசிரியர் மேனர்ட்

"அப்படியானால் உம்மால் ஆண் ஹிஸ்டீரியாக் கேஸை உண்டாக்கிக் காட்ட முடியுமா?" என்று ஏளனமாகக் கேட்டார்.

ப்ராய்டு தன் பேப்பர்களை எடுத்துக்கொண்டு "கண்டிப்பாக...உங்கள் முன்னால் கொண்டு வந்து செய்து காட்டுகிறேன்" என்று கூறிப் புறப்பட்டார்.

வியன்னா பெரிய ஆஸ்பத்திரியில் உள்ள பல நூற்றுக் கணக்கான நோயாளிகளைப் பார்வையிட்ட பொழுது ஹிஸ்டீரியா நோயால் பாதிக்கப்பட்ட ஒரே ஒரு ஆடவனைக் கண்டார். ஆனால், மருத்துவக் கழக டாக்டர்களின் முன்னால் அந்த நோயாளியை அழைத்துக் கொண்டு போய்ப் பரிசீலனை செய்து காட்ட அனுமதிப்பதற்கு அந்த வார்டின் டாக்டர் மறுத்துவிட்டார். உண்மையைப் புரிந்து கொள்வதற்குக்கூட அந்த டாக்டர்களுக்கு அவ்வளவு பயம்!

## மனநோய்ப் பக்கவாதம்!

ஆனால் ப்ராய்டு தாம் எடுத்துக் கொண்ட முயற்சியைக் கைவிடவில்லை. ஆண் ஹிஸ்டீரியா கேஸைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று விடாமுயற்சியுடன் சுற்றினார். கடைசியாக சார்காட் சுட்டியதைப் போல் கால் முழுவதையும் மரக்கட்டைபோல் இடுப்பிலிருந்து தூக்கி வைத்துக் கொண்டு நடந்த ஒரு நோயாளியைக் கண்டுபிடித்தார். அந்த நோயாளியிடம் சொல்லி, அவனுடைய சம்மதம் பெற்று, வியன்னா மருத்துவக் கழகத்திற்கு அழைத்து வந்தார். "இந்த நோயாளியைப் பரிசோதனை செய்யுங்கள். உண்மையான பக்கவாதமாக இருந்தால் இப்படி இருக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் இது உண்மையான பக்கவாதம் அல்ல. மனநோயால் (ஹிஸ்டீரியா) ஏற்பட்ட பக்கவாதம்" என்று கூறினார்.

டாக்டர்கள் ஒவ்வொருவராக வந்து அந்த நோயாளியைப் பரிசோதனை செய்தார்கள். ப்ராய்டு சுட்டிக் காட்டிய

மாறுபாட்டை உணர்ந்தார்கள். ஆணுக்கும் ஹிஸ்டீரியா நோய் வரக்கூடும் என்று ஒப்புக் கொள்ள மறுத்துத் தலையை ஆட்டிக் கொண்டே சென்றார்கள். ப்ராய்டு ஆத்திரத்துடன் மருத்துவக் கழகத்தை விட்டுச் சென்றார்.

## எப்படித் தீர்ப்பது?

இப்பொழுது, நோயாளிகள் ஒவ்வொருவராகப் ப்ராய்டின் மருத்துவ மனையை நோக்கி வந்து கொண்டிருந்தனர். ஆனால், இன்னும் அவருக்குப் பழைய சந்தேகம் நீங்கவில்லை. உடலில் நோய் ஏதும் இல்லாமல் உடல் சம்பந்தமான நோயின் அறிகுறிகளோடு வருபவர்களுக்கு என்ன சொல்வது? தான் கற்ற கல்வியும் அதுவரை அனுபவத்தாலும் விசேஷப் பயிற்சியாலும் தெரிந்துகொண்ட யாவும் இந்த விஷயத்தில் உதவ முடியாது என்பது அவருக்குத் தெரியும். ஏதாவது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டாலொழிய இந்த விஷயத்தில் தம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்று ப்ராய்டு நிச்சயமாக நம்பினார்.

## குழந்தை பிறந்தது!

ப்ராய்டுக்கும் மார்த்தாவுக்கும் மணமாகி முதலாவது ஆண்டு பூர்த்தியானதும் அவர்களுக்கு முதலாவது மார்த்தில்டா என்ற பெண் குழந்தை பிறந்தது. தீ விபத்துக்குள்ளான அரசாங்க அரங்கத்தின் மேல் கட்டப்பட்ட புதிய கட்டிடத்தில் முதன்முதலாகப் பிறந்த அந்தக் குழந்தைக்கு ஆஸ்திரியா மன்னர் ஒரு பரிசு அனுப்பி வைத்தார். அரசாங்க உருகுபொருள் தொழிற்சாலையில் செய்யப்பட்ட ஒரு பூந்தொட்டி அது. மார்த்தா அத் தொட்டியைப் பத்திரமாக அழகாக எடுத்து வைத்தாள்.

மார்த்தா வீட்டை வைத்திருக்கும் அழகே அலாதியாக இருக்கும். கதவு நிலைகள், ஜன்னல்கள் எல்லாம் பளிச் சென்று பளிங்குபோல் சுத்தமாக இருக்கும். அடுத்த

வருஷம், அவர்களுக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது, சார்காட்டின் நினைவுக்காக அவருடைய நடுப்பெயராகிய மார்ட்டின் என்பது அக் குழந்தைக்குச் சூட்டப்பட்டது.

## ஹிப்னடிஸ அனுபவங்கள்

ஹிப்னுடிஸம் (நோயாளிகளைக் கவர்ச்சி மூர்ச்சைக்கும் தூக்க நிலைக்கும் ஆளாக்குவது) ப்ராய்டுக்கு மிகவும் பழக்க மாகிவிட்டது. ஆனால் எல்லா நோயாளிகளையும் சுலபமாக ஹிப்னுடிஸ முறையால் தூங்கவைக்க அவரால் முடியவில்லை.

ஹிப்னுடிஸம் செய்யும்பொழுது வலதுகைப் பெரு விரலால் நோயாளியின் நெற்றியை அழுத்திக் கொள்வது நோயாளியைச் சுலபமாகத் தூங்கவைக்க முடிந்தது. இந்த முறையில் நோயாளி சுலபமாகத் தன் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் நினைவுகளை வெளிப்படுத்தச் செய்யவும் முடிந்தது.

அதைவிட, நோயாளியை வசதியாகப் படுக்கவைத்துக் கண்களை மூடிக்கொண்டு தன் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களை மறைக்காமல், தடுக்காமல் என்னென்ன எப்படி எப்படித் தோன்றுகிறதோ அப்படி அப்படியே வெளியிடச் செய்வது இன்னும் சுலபமாக இருந்தது.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் எண்ணற்ற நினைவுகளும் கனவுகளும் தொடர்பற்ற சிந்தனைகளும் உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. மனம் ஒரு நிமிஷம்கூடச் சும்மா இருப்பதில்லை. எதையாவது செய்துகொண்டே இருக்கிறது. மனத்தின் இந்தச் செயல்தான் சிந்தனை ஓட்டமாக இருக் கிறது. தூங்கும்போதும் மனத்தின் ஒரு பாகம் ஏதாவது செய்து கொண்டே இருக்கிறது. இதுதான் கனவாக மூளை உணர்கிறது. மனத்தின் செயல் அதாவது சிந்தனை முழு வதையும் மனிதர்கள் வார்த்தைகளாக வெளிப்படுத்தி விடுவதில்லை. ஏதாவது சிலவற்றை வெளியிடுகிறார்கள்; மற்றவை அப்படியே தம் போக்கில் ஓடிக் கொண்டிருக் கின்றன.

### எண்ணங்கள் வெளிவருகின்றன!

பெருக்கெடுத்து வரும் வெள்ளப் பிரவாகத்தில், ஏதோ சிறிது விவசாயத்திற்கும் இதர காரியங்களுக்கும் பயன்படுகிறது. மற்றப்பாகம் முழுவதும் அப்படியே ஓடிக்கொண்டே இருப்பதுபோல் சிந்தனை வெள்ளத்திலும் ஒரு சிறிய பாகம் தான் வெளிப்பட்டுப்பயன்படுகிறது. மற்றப் பெரும்பாகம் ஓடிக்கொண்டே இருக்கிறது.

இந்தச் சிந்தனையைத் தங்கு தடையில்லாமல் நோயாளி வெளியிடும்பொழுது, ஒரு நினைவு இன்னொரு நினைவைத் தானாக இழுத்துக் கொண்டு வரத்தொடங்குகிறது. கடைசியில், மனத்தின் அடியில் புதைந்து கிடந்து, மனத்துக்கும் உடலுக்கும் ஊறு உண்டாக்கிய அடக்கப்பட்ட எண்ணங்களும் தாமாகவே வெளியாகிவிடுகின்றன.

"தூங்கு, உடலும் உள்ளமும் தளர்வடையச் செய். பரிபூரணமான ஒய்வுநிலையில் இப்பொழுது உன் மனமும் உடலும் இருக்கட்டும். இப்பொழுது உன் மனத்தில் என்ன தோன்றுகிறது? எது தோன்றிய போதிலும் அப்படியே சொல். அர்த்தமற்றதா அர்த்தமுள்ளதா என்று பார்க்க வேண்டாம். நியாயமானதா அநியாயமானதா என்று நினைக்க வேண்டாம். எல்லா நினைவுகளும் மனிதருக்கு இயற்கையானவைதான். உன் எண்ணங்களை அப்படியே சொல்..." என்று இவ்வாறு ப்ராய்டு தம் நோயாளிகளைத் தூண்டினர்.

### கட்டுப்பாடற்ற இணக்கம்

ஆற்றோட்டத்தில் பாறைகள் மறைந்துள்ள இடத்தில் சுழல் ஏற்படுவதைப் போல் சிந்தனை ஓட்டத்திலும் சில இடங்களில் சுழல் ஏற்படும். அப்பொழுது மனத்தின் அடித்தளத்தில் புதைந்துள்ள மர்மம் ஏதோ வெளிப்படப் போகிறது என்பதைத் உணர்ந்து கொள்ளலாம். நோயாளிகள் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லும்

பொழுது, வார்த்தைகளில் தடுமாற்றம் ஏற்படும்பொழுது, அவர்கள் விரும்பாத நினைவு ஏதாவது வெளிப்படப் போகிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இவ்வாறு இயல்பான முறையால் மறைந்துள்ள உணர்ச்சிகளை வெளியிடச் செய்யும் முறையைக் 'கட்டுப்பாடற்ற இணக்கம்' என்று ப்ராய்டு கூறினர்.

ஆனால், எல்லா நோயாளிகளும் இந்தக் கட்டுப்பாடற்ற இணக்கத்திற்குத் தயாராக இருக்கவில்லை. தங்கள் உள்ளத்தில் தகாத எண்ணம் என்று எதை மறைத்து உள்ளடக்கிவிட்டார்களோ அந்த எண்ணம் வெளிப்பட முயலும்பொழுது அதைத் தடைசெய்ய விரும்பினர்கள். இந்த விருப்பத்திற்குப் ப்ராய்டு 'மனத்தடை' என்று பெயரிட்டார்.

## கனவு பற்றிய புதிர்கள்!

இதே சமயத்தில்தான் கனவு பற்றிய புதிர்களும் அவர் உள்ளத்தில் விடுபடத் தொடங்கின. தம் நோயாளிகளிடமிருந்து அவர் ஆயிரம் கனவுகளைக் குறிப்பெடுத்துச் சேர்த்திருந்தார். மருத்துவ சாஸ்திரம் கனவுகள்பற்றி அதுவரை ஏதும் கற்பனை செய்துகூடப் பார்க்கவில்லை. உலகத்திலேயே கனவுகளைப் பற்றி மருத்துவ முறையில் மனோதத்துவ அடிப்படையில் முதன்முதலாக ஆராய்ச்சி செய்தது டாக்டர் ப்ராய்டுதான்.

## முதல் புத்தகம்

1889ஆம் ஆண்டு கோடைக் காலத்தில் ப்ராய்டு தம் குடும்பத்தாருடன் ஆஸ்திரிய ஆல்ப்ஸ் மலைப் பிரதேசத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கையில், பின்னால் சரித்திரப் பிரசித்தி பெறப் போகும் புத்தகமாகிய 'கனவுகளின் உட்பொருள் விளக்கம்' என்ற தமது முதல் நூலை எழுதி முடித்தார்,

இந்தப் புத்தகம் மருத்துவ உலகத்தில் பெரியபுரட்சியை உண்டாக்கும் என்றும், உலகம் முழுவதும் தன்னைப் புகழ்ந்து பாராட்டும் என்றும் ப்ராய்டு ஆர்வமுடன் எதிர்பார்த்தார்.

1900ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இரண்டாம் தேதி, இருபதாம் நூற்றுண்டு உதயமான இரண்டாவது நாள், 'கனவுகளின் உட்பொருள் விளக்கம்' புத்தகமாக வெளியிடப்பட்டது.

தன்னுடைய வாழ்க்கையையே கூறு கூறுக்கித் தனக்கென்று எந்தவிதமான இரகசியத்தையும் வைத்துக் கொள்ளாமல் அம்பலமாக்கிவிட்டதாகப் ப்ராய்டு கருதினர். நோய்களுக்குக் காரணமான கிருமிகளைப் (பாக்டீரியா) பாஸ்டியர் கண்டுபிடித்துஉலகத்திற்கு அளித்ததுபோல், நோய்களுக்குக் காரணமான உணர்ச்சிகளை அவை கனவுகளின் மூலமாக மறைமுகமாக எவ்வாறு வெளிப்படுகின்றன என்பதைத் தான் உலகத்திற்கு அளித்திருப்பதாகப் ப்ராய்டு நம்பினர்.

## ஆராய்ச்சி நூல்!

அன்றாட நிகழ்ச்சியிலிருந்து, தன்னை அறியாத செயல்களிலிருந்து, மனநோய்களை அறிந்து கொள்ளும் முறைபற்றி ப்ராய்டு தம் ஆராய்ச்சிகளை எல்லாம் தொகுத்து நீண்ட புத்தகம் ஒன்று எழுதினர். இந்தப் புத்தகத்திற்கு 'அன்றாட வாழ்வின் ஆத்மார்த்த (மன)நோய்களின் அறிகுறிகள்' என்று தலைப்புக் கொடுத்தார்.

இந்தப் புத்தகமும் வெளியாயிற்று. மருத்துவப் பத்திரிகைகள் இதை அடியோடு அலட்சியம் செய்து விட்டன. மன நோய் சம்பந்தமான மருத்துவத்திற்கு உடல் வெப்பத்தை அளந்து சொல்லும் தெர்மா மீட்டரைப்போல் அவ்வளவு எளிமையாக உதவும்படியாகத் தம் முழு ஆற்றலையும் செலவிட்டுப் ப்ராய்டு எழுதிய அருமையான நூலுக்கு மருத்துவ உலகம் அளித்த வரவேற்பு அதுதான்!

### மூன்றும் புத்தகம்

ஆனால் ப்ராய்டு சலிப்படையவில்லை. தொடர்ந்து இன்னொரு புத்தகத்தையும் எழுதி வெளியிட்டார். இந்தப் புத்தகத்தை மருத்துவ உலகம் அலட்சியம் செய்யவில்லை. மனித உலகமும் அலட்சியம் செய்யவில்லை. ஏனென்றால் அந்தப் புத்தகம் மனித சமுதாயத்தையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது.

'ப்ராய்டு' என்ற பெயரைச் சொல்வதன் முன் ஆடவர்கள் அக்கம்பக்கம் பார்த்துக் கொண்டார்கள். பெண்கள் அந்தப் பெயரைக் கேட்டதும் கேட்கத்தகாத வார்த்தையைக் கேட்டுவிட்டது போல் வெட்கத்தோடு முகத்தைச் சுளித்துக்கொண்டு காதைப் பொத்திக் கொண்டார்கள். ப்ராய்டின் பெயர் பொது இடங்களில் சொல்லத்தகாத வார்த்தையாகி விட்டது. ஜனங்களி டையே திடீரென்று இத்தகைய பரபரப்பை உண்டாக்கிய ப்ராய்டின் புத்தகம், "ஆண் பெண் பாலுணர்ச்சிக்கு மூன்று விளக்கங்கள்" என்பதுதான்.

ப்ராய்டின் பெயரைத் தப்பித்தவறிச் சொல்லி விட்டவர்கள் பின்னால் தங்கள் வாயைக் கழுவிக் கொள்வது போல, "அந்தப் பயங்கர மனிதன்" என்று உடனே சொல்லிக் கொண்டார்கள்.

வியன்னா பல்கலைக் கழகத்தில் மனோதத்துவப் பிரிவுக்குத் தலைமை ஆசிரியராக இருந்த பேராசிரியர் "வாக்னர்வான் ஜாரெக" (பின்னால் நோபல் பரிசு பெற்றவர்) ப்ராய்டின் புத்தகத்தைப் பற்றி ஒரே வார்த்தையில் மதிப்பிட்டு விட்டார்.

"பைத்தியக்காரத்தனம்" என்பதுதான் அந்த ஒரே மதிப்பீட்டு வார்த்தை.

### பிரசங்கம் செய்தார்

1902ஆம் வருஷக் கடைசியில் வியன்னா பெரிய வைத்திய சாலையில் வழக்கமாக மருத்துவ சம்பந்தமான பிரசங்கங்கள்

நடைபெறும் கூடத்தை வாடகைக்குப் பிடித்து அங்கு மனோ தத்துவப் பரிசிலனை சம்பந்தமாக பிரசங்கங்கள் புரிய ப்ராய்டு ஏற்பாடு செய்தார். ஆரம்பத்தில் ப்ராய்டின் பிரசங்கத்தைக் கேட்க மூன்றே மூன்று பேர்தான் வந்தார்கள்.

ஆனால் அதைக் கண்டு ப்ராய்டு மனம் தளர்ந்து போக வில்லை. அந்த மூன்றே பேரை வைத்துக்கொண்டு தன் வகுப்புக்களை நடத்த ஆரம்பித்தார். நாளாவட்டத்தில் ஒவ்வொருவராகப் புதிதாக இந்தப் பிரசங்கத்தைக் கேட்க வரத் தொடங்கினார்கள். மருத்துவம் பயின்று மேலும் புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உடைய டாக்டர்கள் சிலர், வியன்னாப் பல்கலைக் கழகத்தில் கற்கவேண்டியதெல்லாம் கற்று இன்னும் புதிய விஷயங் களைக் கற்க வேண்டும் என்ற ஆர்வமுடையவர்களான மாணவர்கள் சிலர், இவ்வாறாகப் ப்ராய்டின் பிரசங்கத்தைக் கேட்பவர் தொகை நாளாக ஆக ஒவ்வொன்றாக அதிகரிக்கத் தொடங்கிற்று.

டாக்டர் ரீட்லர், டாக்டர் கஹேன், ப்ரிட்ஸ் விட்டல்ஸ், எட்வர்டு, ஹிட்ச்மான், ஸாக்ஷ், ஆட்டோராங்க், டாக்டர் வில்லியம் ஸ்டெகெல் இப்படியாக டாக்டர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டிருந்தது.

ப்ராய்டின் புதிய கண்டுபிடிப்புக்களைப்பற்றி டாக்டர் ஸ்டெகெல் பத்திரிகைகளில் எழுதத் தொடங்கினார்; ப்ராய்டின் தத்துவங்களைப் பின்பற்ற விரும்புகிறவர்களுக்கு உதவியாக இருக்கும்பொருட்டு அவருடைய வீட்டிலும் சிறப்பு வகுப்புக்கள் நடத்தும்படி கோரினார். அதற்கிணங்க ப்ராய்டு புதன்கிழமை தோறும் தன் வீட்டிலும் சிறப்பு வகுப்புகள் நடத்த ஆரம்பித்தார்.

இப்பொழுது ப்ராய்டு ஆளில்லாத தீவில் தனியாக அலையும் ராபின்ஸன் க்ருஸோவாக இருக்கவேண்டிய நிர்ப் பந்தம் இருக்கவில்லை. அவருடைய கருத்துக்களைப் பின்பற்றுபவர்கள் கொஞ்சம் பேராவது இருந்தனர்.

ஆனால், இன்னும் வியன்னப் பத்திரிகைகள் அவரைப் பற்றிக் கடுமையாகத் தாக்கி எழுதிக்கொண்டுதானிருந்தன.

### தாக்குதல்கள் பல

தன்னைப்பற்றிப் 'பைத்தியக்காரன், அறிவுலகப் பித்த லாட்டக்காரன்' என்றெல்லாம் பத்திரிகைகள் எழுதுவதைப் படிப்பது இப்பொழுது ப்ராய்டுக்கு சகஜமாகப் போய் விட்டது. அப்படியிருக்க, ஒரு நாள் பத்திரிகை ஒன்றை எடுத்தவர் திடுக்கிட்டார். தம்மைப்பற்றி முதல்நாள் வெளியாகியிருந்த தாக்குதல் கடிதத்திற்கு யாரோ ஒருவர் காரசாரமாகப் பதிலளித்துத் தம்மை ஆதரித்து எழுதியிருப் பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார். கீழே ஆல்ப்ரெட் ஆட்லர் என்று பெயர் போடப்பட்டிருந்தது. உடனே தம்மை வந்து சந்திக்கும்படி ஆல்ப்ரெட் ஆட்லருக்குப் ப்ராய்டு கடிதம் எழுதினர். ப்ராய்டை வந்து சந்தித்த ஆல்ப்ரெட் ஆட்லர் தாம் ஒரு டாக்டர் என்றும், நரம்பு சம்பந்தமான வியாதி களில் தமக்கு விசேஷ அக்கறை ஏற்பட்டிருப்பதாகவும் கூறினர்.

### ஆல்ப்ரெட் ஆட்லர்

சுமார் ஐந்தடி உயரம் உள்ள அந்த மனிதர், "நாம் எல்லோரும் உள்ளும் புறமும் நமக்கு ஏற்பட்டிருக்கும் குறை பாடுகளை வேறுவிதத்தில் நிறைவேற்றி நிரப்பிக் கொள்ள பார்க்கிறோம்" என்றார். இவரையும் ப்ராய்டு தம் கூட்டத் தில் சேர்த்துக் கொண்டார். (இவர்தான் பின்னல் ப்ராய்டுடன் கருத்து மாறுபாடுகொண்டு 'தன்னைக் குறைத்து மதிப்பிட்டுக் கொள்ளும் தாழ்வு மனப்பான்மை' என்ற தத்துவத்தை உண்டாக்கியவர்) ஆரம்பத்திலேயே ஆட்லரின் மனப்போக்கு வேறு விதமாக இருந்ததோடு புதிய விஷயங் களைக் கிரகித்துக் கொண்டு, தவறைத் திருத்திக் கொள்ளும் மனப்பாங்கு அவரிடம் இல்லை என்பது ப்ராய்டுக்குத் தெரிந்தது. ஆனல், நாளாவட்டத்தில் சரியாகப் போகும் என்று ப்ராய்டு நினைத்தார்.

## எதிர்பாராத ஆதரவு

இதே சமயத்தில் சற்றும் எதிர்பாராத விதமாக வேறொரு இடத்திலிருந்தும் ப்ராய்டின் சித்தாந்தங்களுக்கு ஆதரவு கிடைக்கத் தொடங்கிற்று. ஸூரிச்சில் புகழ்பெற்று விளங்கிய 'பர்கோ யெல்ஸ்லி' மருத்துவ நிலையத்திலிருந்து தான் இந்த ஆதரவு கிடைத்தது.

கொஞ்ச காலத்திற்கு முன்னுல் டாக்டர் 'சார்காட்டால் ஸால்' நரம்பு சம்பந்தமான வியாதிகளுக்கு பெரிய ஆராய்ச்சி நிலையம் என்று பெயர் பெற்று விளங்கியதைப் போல், இப்பொழுது ஸூரிச் மருத்துவ நிலையம் புகழ்பெற்று விளங்கியது. உலகத்தின் எல்லாப்பாகங்களிலும் இருந்து டாக்டர்கள் நரம்பு, மனம்சம்பந்தமான நோய்களில் பயிற்சி பெறுவதற்காக ஸூரிச்சில் வந்து கூடினர்.

ஸூரிச் மருத்துவ நிலையத்தின் டாக்டர்களான பேராசிரியர் ப்ளூலரும், டாக்டர் கார்ல் கஸ்டாவ் ஜங்கும் ப்ராய்டின் புத்தகமான 'கனவுகளின் உட்பொருளை, ஆராய்ச்சி செய்தார்கள். மற்றவர்கள் எல்லோரும் உபயோகமற்ற குப்பை என்று தூற்றிய போதிலும் அதில் பொருள் உள்ளது என்று அவர்கள் உணர்ந்தார்கள்.

## டாக்டர் ஜங்கின் ஆதரவு

டாக்டர் ஜங்குக்கு சிறந்த மனேதத்துவ வல்லுநர் என்ற பெயர் உலகெங்கும் பரவி இருந்தது. ஸூரிச் பல்கலைக் கழகத்தில் ஆசிரியராகவும் அவர் இருந்தார். அவர் ப்ராய்டின் புத்தகம் 'அதுவரை மருத்துவ உலகத்தால் இன்ன தென்று கண்டு பிடிக்க முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்த பல நோய்களுக்கு விளக்கம் அளிக்கிறது' என்று எழுதினுர்.

பல நாடுகளிலிருந்தும் ஸூரிசுக்கு வந்த டாக்டர்களுக் கெல்லாம் ப்ராய்டின் சித்தாந்தங்களை அறிமுகப் படுத்தி வைத்தார். அந்தச் சமயத்தில் ஸூரிச்சில், பெர்லினைச்

சேர்ந்த டாக்டர் கார்ல் அப்ரஹாம், லண்டனைச் சேர்ந்த டாக்டர் எர்னஸ்ட் ஜோன்ஸ், நியூயார்க் நகரத்தைச் சேர்ந்த டாக்டர் ஏ. ஏ. ப்ரில் எய்டிங்டன் ஆகிய உலகப் புகழ்பெற்ற டாக்டர்கள் எல்லாம் குழுமியிருந்தனர். ஜங் இவர்கள் அனைவரையும் ஒன்று திரட்டிக்கொண்டு ப்ராய்டு எழுதிய "அன்றாட வாழ்க்கையில் ஆத்மார்த்த நோயின் அறிகுறிகள்" என்ற புத்தகத்தை வைத்துக் கொண்டு, தங்களுடைய ஒவ்வொரு செயலுக்கும் ஏதாவது மனோதத்துவ அடிப்படை இருக்கிறதா என்று பரிசீலனை செய்யச் சொன்னார்.

## ஸூரிச்சில் ஆதரவாளர்கள்

வெகு விரைவிலேயே ஸூரிச்சிலிருந்து ஆர்வம் ததும்பும் கடிதங்கள் ப்ராய்டை நோக்கிப் பறந்தன. ஸூரிச்சிலிருந்து டாக்டர்கள் ஒவ்வொருவரும் ப்ராய்டை நேரில் பார்த்துப் பேசுவதற்காக வியன்னாவுக்குச் சென்றனர். எய்டிங்டன் வந்தார். எர்னஸ்ட் ஜோன்ஸ் வந்தார். கார்ல் அப்ரஹாம் வந்தார். ப்ரில் வந்தார். ஒவ்வொருவரும் ப்ராய்டுடன் மனம்விட்டு விவாதித்தனர். ப்ராய்டின் சித்தாந்தம் மருத்துவ உலகத்தில் எத்தகைய புரட்சியை உண்டாக்கப் போகிறது என்பதுபற்றிப் பேசினர். தங்கள் தங்கள் நாடுகளில் அவற்றைப் பரவச் செய்வதாக வாக்குறுதி அளித்தனர்.

## உலகமேதை ப்ராய்டு

இதன் பின்னர் பிராய்ட் உலகப் பேரறிஞருள் ஒருவராக உயர்ந்தார். மருத்துவ மேதைகளுள் ஒருவராகி, எண்ணற்ற மனநோயாளிக்கு விமோசனம் பெற வழிகாட்டியவராக நிலையான புகழும் பெற்று வரலானார்.

"நமக்குள் ஏராளமான சக்திகள் இருக்கின்றன. அவற்றை ஏவுவதற்குப் பயிற்சிகள் மூலம் கற்றுக் கொள்ளலாம். அப்படிக் கற்றுக் கொண்டால் நம்மிடம் அந்தச் சக்திகள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கத் தொடங்கும். மின்சாரக்

கதிர்கள்போல அவை நம்மிடமிருந்து நாற்புறமும் பரவிப் பாயும். இந்தச் சக்திக் கதிர்கள் பிறரையும் நமக்கு வசியப் படுத்தும்.

### சக்திக் கதிர்கள்!

இந்தக் கதிர்களை ஒருவரைப் பார்ப்பதன் மூலம் எளிதாக அவருள் ஊடுருவும் படி செலுத்தலாம். அவர் மனம் அப்படியே கட்டவிழ்ந்து மயக்கநிலைமை அடையும். மூளை நரம்புகள் தாம் தளர்ந்து போயிருக்குமே தவிர அடிமனம் விழிப்படைந்து தான் இருக்கும். மேல்மனம் செயலிழந்த நிலையில் அடி மனம் மிகவும் தீவிரமாகவும் செயல்படத் தொடங்கும்.

### உண்மைதான் வெளிவரும்!

இந்த நேரத்தில், நோயாளிடம் நாம் கேட்கும் கேள்வி கட்கு அடிமனம் உடனுக்குடனே பதில் சொல்லும். அந்தப் பதில் எதையும் மூடி மறைக்காத அப்பட்டமான உண்மை யாகவும் இருக்கும். சாதாரண நிலையில் உள்மன எழுச்சிகள் புறமனத்தின் உணர்ச்சிகளால் கவியப்பட்டு மறைந்து கிடக்கும். அவை எல்லாம் இப்போது மிகவும் தெளிவாகத் தடையில்லாமல் வெளியே எழுந்துவரத் தொடங்கும்.

நோயாளி தம் நிலையைத் தாமே தெளிவாகச் சொல்லி விடுவார். உடலின் சர்வ இயக்கத்தையும், கட்டுப்படுத்தும் சக்தியுடைய அடிமனம் அப்போது தரும் ஆலோசனை களையும் ஏற்றுக் கொள்ளும். அந்த ஆலோசனைகள் ஏற்று உடலுக்கும் உள்ளத்துக்கும் அது பல நன்மைகளையும் தானே செய்துவிடும்......"

### ப்ராய்டின் மறைவு

இப்படிப்பட்ட அரிய மருத்துவ உண்மையை உலகுக்கு உணர்த்தியவர் டாக்டர் ப்ராய்டு. அறிஞர் மெஸ்மரின் தத்துவத்தை மருத்துவரீதியில் புரிந்து கொண்டு பல

நோயாளிகளைக் குணப்படுத்த வெற்றிகரமாகப் பயன் படுத்தியவர் டாக்டர் ப்ராய்டு ஆவார். 'செயற்கைத் தூக்கம்' (ஹிப்னடிசம்) என்ற தத்துவத்தை இவர்தான் கண்டுபிடித்தார்.

இத்தகைய மேதையான டாக்டர் ப்ராய்டு 1939ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 23ஆம் தேதி லண்டன் நகரத்தில் இறந்து போனார். ப்ராய்டு எண்பத்து மூன்று ஆண்டுகள் உயிர் வாழ்ந்தார். இவருக்குப் பின் இவருடைய தத்துவங்களை புத்துணர்வுடன் உலகெங்கும் பலர் பரவச் செய்தார்கள்!

### ப்ராய்டுக்குப் பின்னர்!

இங்கிலாந்தில் இந்தத் தத்துவத்தைப் பரவச் செய்தவர் டாக்டர் லேபால்டு என்பவராவார். டாக்டர் பெர்ன்ஹீம் என்பவரும் இந்த மருத்துவ முறைக்கு ஆதரவு அளித்தார். டாக்டர் ப்ராம்வெல் என்பவர் இந்தப் புதிய தத்துவம் மருத்துவத் துறையில் பயன்பட மேலும் உழைத்து வந்தார். இவர்கள் உழைப்பின் பயனாக 1882இல் தோன்றியதுதான் மனோதத்துவ ஆராய்ச்சிக் கழகம் (Society of Physical Research) என்ற ஸ்தாபனம் ஆகும். மனோவியல்துறை உலகப் புகழ்பெற இந்த ஸ்தாபனம் செய்து வந்த பணிகள் மிகுதியாகும்.

### உலகமக்கள் உயர்வார்களாக!

மனோதத்துவம் மனிதவாழ்வினை எப்படி உயர்த்தும் என்பதை அறிந்து உணர்ந்து பயின்று, ஒவ்வொருவரும் பயனடைந்து, வாழ்வில் புதிய சக்தியும் ஆற்றலும் பெற்று அனைவரும் சிறப்பாக வாழவேண்டும். இந்தப் பணி இன்றும் பல மேதைகளால் தொடர்ந்து செய்யப்பட்டு வருகின்றது. இந்தத் துறை இனியும் விருத்தியடைந்து உலகமும் உலக மக்களும் உயர்வார்களாக.



# குடும்பத் திட்டம்

ஆசிரியர்கள் :

A. S. மூர்த்தி, M.A., B.L. & K. வெங்கட்ராவ்

எத்தனை முறைகள் தாம்பத்ய உறவு அனுபவித்தாலும், கர்ப்பம் ஏற்பட்டுவிடுமேயென்னும் பயமே இல்லாமல் இருக்க அறுபது முறைகளைப் படங்களுடன் இந்த நூல் விவரிக்கிறது. ஒரு குழந்தை பிறப்பதற்கும் மற்றோர் கர்ப்பம் ஏற்படுவதற்கும் மூன்று அல்லது நான்கு வருடங்களாவது இடைவெளி இருக்கவேண்டும். இதற்கான யோசனைகளும் முறைகளும் படங்களுடன் இந்நூலில் அடங்கியுள்ளன.

இந்த நூலின் நான்காம் பதிப்பு (Fourth Edition) விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

விலை. ரூ. 5-00 தபால் செலவு ரூ 1-60

V.P.P. மூலம் பெற ரூ. 6-60 மணிபார்டர் அனுப்பு வோர் ரூ. 6-40 அனுப்புக.

# குடும்ப நலம்

ஆசிரியர்: K. வெங்கட்ராவ்

மாதாந்திர ருது ஏற்படும் காலத்தைப் பற்றியும், அதனை அறிந்து அநுபவிக்கும் நாட்களை பற்றியும் ஏழு முழுப்பக்க விளக்கப் படங்களுடன் விவரிக்கப் பட்டுள்ளது. ஆண் பெண் மர்ம உறுப்புகளின் இயக்கங்கள் படங் களுடன் விவரிக்கப்பட்டுள்ளது. தம்பதிகள் படித்து அறிந்து செயல்படவேண்டிய பல இரகசியங்கள் இதில் அடங்கியுள்ளன.

விலை ரூ. 5-00 தபால் செலவு ரூ. 1-60

V P.P. மூலம் ரூ. 6-60க்குப் பேறலாம். M.O. அனுப்பு வோர் ரூ. 6-40] அனுப்புக.

# ஆண் மனம்

ஆசிரியர் : K. வெங்கடராவ்

உலகில் பிறந்த ஒவ்வொரு ஆண் மகனும் எவ்வளவோ பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியவனுயிருக்கிறன். காதல் வாழ்க்கை—குடும்ப வாழ்க்கை—ஜீவனோபாயத்தில் ஈடுபட வேண்டிய அவசியம் -தன் குடும்பத்தை, தன்னைச் சார்ந்தவர்களை ஆதரிக்க வேண்டிய கடமை—தன் ஆன்மார்த்த, பொருளாதார முன்னேற்றத்தைக் கவனிக்க வேண்டிய அவசியம், எல்லாம் சேர்ந்து இவன் உலக வாழ்க்கையென்னும் நீரோட்டத்தில் எதிர்நீச்சல் போடவேண்டியவனுயிருக்கிறன்.

இந்த நிலைமையில் இவனுக்கு, எப்பேர்ப்பட்ட ஆற்றல்கள் இருக்கவேண்டும், இவனுடைய மனம் எத்துணை உறுதி பெற்றிருக்க வேண்டும் என்னும் விஷயங்களை இந்த நூல் விளங்க வைக்கிறது. ஆண்களின் மனோபாவங்கள், பாலுணர்வு, வெறியுணர்வு, காதல் வேகம், அந்தரங்கம் இவைகளை உளநூல் கண்ணோட்டத்தில் விவரித்துள்ளார் நமது ஆசிரியர்.

காம இயல் ஞானம் ஆண்மகனுக்கிருக்க வேண்டிய அவசியத்தை விவரித்து, மானிட வாழ்க்கையில் ஆணும் பெண்ணும் உடல் உறவுகொண்டு இன்பம் அனுபவிக்க வேண்டு மென்றும் மனக்கிளர்ச்சியை எவ்வாறு கட்டுப்படுத்தி வாழ்க்கையை வளமாக்கிக் கொள்ளவேண்டும் என்பதையும் ஆசிரியர் வற்புறுத்துகிறர்.

ஒவ்வோர் வாலிபனும் நடுத்தர வயதுள்ளவரும் அவசியம் படித்துப் பல விஷயங்களை அறிந்துகொள்ள "ஆண் மனம்" உதவுகிறது.

**விலை ரூ. 5-00** **தபால் செலவு ரூ. 1-60**

ரூ. 6-40 மணியார்டர் அனுப்பினல் ஒரு பிரதியைப் பதிவுத் தபால் மூலம் அனுப்புவோம் வி. பி. பி. மூலம் பெற ரூ. 6-60 ஆகும்.

# பெண் மனம்

ஆசிரியர்: K. வெங்கட்ராவ்

பெண்ணே ஒரு புதிர்! அவளுடைய மனத்தின் ஆழத்தை எவரும் கண்டு பிடிக்க முடியாது என்று உளநூல் ஆராய்ச்சியாளர்களே திகைப் படைந்துள்ளனர். நமது ஆசிரியர் பெண்மனத்தின் அடித்தளத்திலுள்ள உணர்ச்சிகள் ஆதர்சங்கள், எண்ணக் குவியல்கள் இவைகளை எவரும் எளிதில் அறியும் வண்ணம் சுவைபட எழுதியுள்ளார்.

ஆண் பெண் இருபாலர்க்கும் இடையேயுள்ள உணர்ச்சிகளின் வேற்றுமை, பருவகாலப் பெண்களின் உணர்ச்சிப் பெருக்கு, தன் இரக்காதலில் பெண்கள் எவ்வாறு ஈடுபடுகின்றனர், மேல்நாடுகளில் பருவப் பெண்கள் திருமணத்திற்கு முன்பே எவ்வாறு எல்லா அனுபவங்களையும் பெறுகின்றனர், விபசாரத்தினல் உள்ளமும் உடலும் எவ்வாறு கெட்டுப் போகிறது, மற்றும் பெண்களைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய எல்லா விஷயங்களைப் பற்றி ஆசிரியர் விவரிக்கிருர்.

பெண்கள் எந்தெந்த விஷயங்களில் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும்? ஆண்வர்க்கத்தால் இவர்களுக்கு என்னென்ன ஆபத்துகள் காத்திருக்கின்றன? நல்லொழுக்கத்துடன் பெண்கள் வாழவேண்டிய அவசியம்—இவைகளை ஆசிரியர் வற்புறுத்துகிருர். இது ஓர் சிறந்த அறிவுநூல்; ஆராய்ச்சிப் பொக்கிஷம்.

விலை ரூ. 5-00 தபால் செலவு ரூ. 1-60

புத்தகம் வேண்டுவோர் ரூ. 6-50 மணியார்டர் அனுப்புங்கள்; பதிவுத் தபாலில் புத்தகம் அனுப்புவோம். வி. பி. பி. யில் அனுப்புமாறு எழுதினல் ரூ. 6-60க்கு அனுப்புவோம்.

# மனோசக்தி

ஆசிரியர்கள் : A. S. மூர்த்தி M.A., B.L.
& K. வெங்கட்ராவ்

மனோசக்தியை ஓரளவாவது வளர்த்துக் கொண்டவர்கள் தான் வாழ்க்கையில் குறுக்கிடும் எப்பேர்ப்பட்ட கஷ்டங்களையும், தோல்விகளையும் பொருட்படுத்தாமல், மனதை ஒரு நிலையில் வைத்து மனச் சாந்தியுடன் முன்னேற்றம் அடைவார்கள். மனோசக்தியை முழுமையாக ஒவ்வொருவரும் எவ்வாறு அடையலாம் என்பதை "மனோசக்தி" தெளிவாக விவரிக்கிறது.

ஒவ்வொருவரும் தங்கள் சொந்த முயற்சியாலேயே மனோசக்தியை அடைந்து வெற்றிநடை போடவும், ஹிப்னடிசம், மெஸ்மெரிசம், பிராணாயாமம் முதலிய முறைகளின் சிறப்பை யறியவும் இந்நூல் பெரிதும் உதவும்.

குடும்ப நிர்வாகத்தில் சிறந்துவாழவும், அவரவர் ஈடுபட்டிருக்கும் தொழில்களில் முன்னேற்ற மடையவும், பிறரை வசீகரிக்கவும், தங்கள் சொல்லையும் செயலையும் பிறர் போற்றும் நிலையடையவும் இந்த நூல் சிறந்த வழிகாட்டியாகும்.

இதுவரையில் ஆயிரக்கணக்கான பேர்கள் இந்த நூலைப் படித்துப் பயன் பெற்றுப் போற்றியிருக்கிறார்கள். "எவருக்கும் வாழ்க்கையில் நம்பிக்கை யூட்டும் அறிவு நூல் இது" என்று 'தினமணி' பத்திரிகை புகழ்ந்துரைத்துள்ளது.

பிரபல இலக்கியப் பத்திரிகையாகிய "மஞ்சரி" இந்த அறிவு நூலை 32 பக்கங்களில் சுருக்கி வெளியிட்டிருக்கிறது.

ஆண்களும் பெண்களும், எல்லா வயதினரும் இந்த நூலைப் படித்துப் பயன் பெற்றிருக்கிறார்கள். ஏழாவது பதிப்பாக (Seventh Edition) வெளியாகி மக்களுக்கு வாழ்க்கையில் வெற்றிப் பாதையைக் காட்டி வரும் இந்த அரிய நூலை நீங்களும் படித்துப் பயனடைய வேண்டுகிறோம்.

விலை ரூ. 15-00 தபால் செலவு ரூ. 2-00

ரூ. 16-50 மணியார்டர் அனுப்பினால், உங்கள் பிரதியைப் பதிவுத் தபால் மூலம் அனுப்புவோம். வி. பி. மூலம் அனுப்பும்படி நீங்கள் எழுதினால் ரூ 17-00க்கு அனுப்புவோம்.

# மனோசக்தி

## இரண்டாம் பாகம்

நம் உடலில் காந்த சக்தி எப்படி உண்டாகிறது. இந்தக் காந்த சக்தியை எப்படி வளர்த்துக் கொள்வது? காந்த சக்தியினால் ஏற்படும் பலா பலன்கள் யாவை?

முகவசீகரம் என்றால் என்ன? எப்படிப் பிறர் நமக்கு வசியமாவார்கள். பிறரை வசியப்படுத்த எந்தச் சக்திகளை நம்மிடம் வளர்த்துக் கொள்ளவேண்டும்.

பிராண சக்தி என்பது எப்படி வேலை செய்கிறது? அதை வளர்த்துக் கொள்ளும் எளிய பயனுள்ள பிராணயாமப் பயிற்சி முறைகள் யாவை?

மனோசக்திக்கும் ஒருமுகப்படுத்தும் தியான நிலைக்கும் தொடர்பு யாது? தியான நிலையால் மனோசக்தியை எப்படித் தீட்சண்யம் பெறுமாறு செய்வது?

ஹிப்னடிசம், மெஸ்மரிசம், தூரதிருஷ்டி, சூன்ய திருஷ்டி, எண்ணத் தந்தி இப்படிப் பல அதிசய சக்திகளின் விளக்கங்கள்.

இறந்த பின்னும் வாழ்கின்ற உயிரைப் பற்றிய உண்மைகள். எப்படி மனிதரோடு ஆவியுலகத் தொடர்பு பற்றிய விந்தைச்பல செய்திகள்.

கண்களின் காந்தக் கவர்ச்சி, மனத்தின் பலவகை ஆற்றல்கள், இவற்றை வளர்க்கும் வழிகள், நினைவாற்றலைப் பெருக்கும் பயிற்சிகள், தேர்வுகளில் வெற்றி பெற உதவும் மனப்பயிற்சிகள், மற்றும் பல உபயோகமான செய்திகள்.

ஞானிகள், சித்தர்கள், மனோதத்துவ மேதைகள், ஆராய்ச்சியாளர்கள் மற்றும் உலகப் புகழ்பெற்றவரின் அநுபவ ஞான விளக்கங்கள். இன்னும் பலவும் கொண்ட பயனுள்ள நூல். விரைவில் வருகிறது.

விலை ரூ. 15-00

5